அனைத்திந்திய நூல் வரிசை

# அழிந்த பிறகு . . .

சிவராம காரந்த

தமிழாக்கம்:
எம். சித்தலிங்கய்யா



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

முதற் பதிப்பு : 1972 (சக 1894)
இரண்டாம் அச்சு : 1993 (சக 1914)



ரூ. 25.00

Original : ALIDA MELE *(Kannada)*
Tamil Title : AZHINDA PIRAGU

வெளியிட்டவர் : டைரக்டர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா
ஏ- 5, கிரின் பார்க், புது தில்லி- 110 016

# முன்னுரை

நாவலை என்னவோ எழுதிக்கொண்டு வருகிறேன். ஆனால் எழுதி முடித்த நாவலுக்கு முன்னுரை எழுதுவதென்றால் சலிப்பு. ஒரு நாவல் தெரிவிக்காததை முன்னுரை தெரிவிக்குமா? நாவலே தன்னுடைய நோக்கத்தைத் தெளிவாக எடுத்துரைக்காது விட்டால், எழுதிப் பயன் என்ன? முன்னுரை எழுதாதிருப்ப தற்கு இவைபோன்ற பல காரணங்களிருக்கின்றன.

என்றாலும் சிற்சில நேரங்களில் இரண்டொரு சொற்கள் எழுதலாமென்று தோன்றுகிறது. 'அழிந்த பிறகு' என்னும் இந்த நாவலில், மனித வாழ்க்கையில் எஞ்சுவது என்ன என்ப தைத் தேடிப்பார்க்கும் நோக்கம் இருக்கிறது. வெற்று நினை வுகள் மட்டுமே எஞ்சி நிற்பனவாம். வழி நடந்து செல்பவன், தன் காலடிச் சுவடுகளை விட்டுச் செல்வதைப்போல் கடந்துவிட்ட வாழ்க்கை, மற்றவர்களிடையே தோற்றுவித்த எண்ணங்களா லேயே அளக்கக்கூடியது எனலாம். தம் வாழ்க்கை அதைவிட அழுத்தமான சுவடுகளைப் பதித்துவிடும் என்று நடந்து செல்பவர் எல்லோருமே எண்ணவேண்டுவதில்லை. அந்தச் சிறப்பு எல்லோ ருக்குமே கிடைப்பதில்லை. இந்த நாவலில் வரும் யசவந்தரைப் போன்றவர்கள் பிறக்கிறார்கள், வாழ்கிறார்கள், பின்பு இறக்கிறார் கள். வாழ்ந்தவர்கள் தம்மோடு தொடர்புகொண்ட சிலருக்கு இனியவர்கள்; பலருக்குத் தெரியாதவர்கள். வாழ்க்கையின் தொடர்பில் ஏற்பட்ட நன்மை, தீமைகளின் அழுத்தத்தை (ஆழத்தை) ஒருங்கிணைத்து, யசவந்தர் வாழ்க்கை எப்படியிருந் தது என்று தேட இதில் முயற்சி செய்திருக்கிறேன். இது அவர் விட்டுச்சென்ற சுவடுகளைப் பின்தொடர்ந்து போவதைப் போன்றதேயாகும்.

வழி நடந்தவர் அவர்; சிறு தொடர்பிலேயே இன்பம் கண்டு அந்தச் சுவட்டைத் தேடிப்போனவன் நான். இதில் என் அளவு கோலினால் அளப்பதற்கு முயல்கிறேன். என் முயற்சி பார்வை யாளனுடையதைப்போன்றது. 'மலை வாழ்க்கை' என்ற நாவ

லில் மேற்கொண்ட அந்த முயற்சியை இங்கே மீண்டும் மேற் கொள்கிறேன். அது ஒரு வகை. இது ஒரு வகை. அது வாழ்ந் திருந்தபோதே கண்டது; இது இறந்த பிறகு தேடியது.

நாளை நம் காலம் முடிந்த பிறகு மற்றவர்களும் நம் வாழ்க் கையை இதே வகையில் ஆராயலாம். இப்படியே கருதலாம். கருதட்டும், விடட்டும்—நம் வாழ்க்கையில் விட்டுச் சென்ற சுவடு கள் சுற்றிலுமுள்ள வாழ்க்கையின்மீது ஒரு செல்வாக்கை உண்டாக்கியே தீரும். ஆயிரக்கணக்கான வேறு செல்வாக்குக் களோடு நம்முடையதும் கலக்கிறது. இறப்பில் முடிந்த எந்த வாழ்க்கையும் பயனற்றதல்ல. அது இயன்றவரை பயனுள்ள தாகவே கழிந்தால் போதுமென்று என் மனம் கூறுகிறது.

எழுதிய நாவல் அச்சானதும் என் நண்பர் சிலருக்கு அனுப்பி வைக்கும் வழக்கத்தை வைத்துக்கொண்டிருக்கிறேன். அவர்கள் இவற்றையெல்லாம் படிக்கிறார்கள்; படிக்கவேவேண்டும் என்னும் ஆசையை நான் வைத்திருக்கவில்லை. ஒருசிலர் படித்துவிட்டுத் தம் கருத்தை எழுதுவதுண்டு; சிலர், சந்திக்கும்போது நான் எழுதிய தைப்பற்றிய ஐயங்களை எழுப்புவதுண்டு. என் நண்பராயிருந்த திரு. பி. எஸ். துங்க அவர்கள் இந்த இயல்பினர். இந்த நாவலை எழுதிக்கொண்டிருந்தபோதே நான் அவருக்கு ஒரு கடிதம் எழுதி னேன்: என் மனம் இன்று கொடிய வேதனை, வருத்தம், அலைக் கழிப்புக் கீடாகியிருக்கிறது. இந்த நேரத்தில் எதிர்பாராதவித மாக ஓரிரண்டு இன்பச் செய்திகளும் வந்துள்ளன. ஆனால் அவற்றை மூழ்கடிக்கும் அளவுக்கு வருத்தம் தரும் சங்கதிகள் என்னைச் சூழ்ந்திருக்கின்றன. அவற்றைத் துடைத்தெறிவதற் காகவே ஒரு புதிய நாவலை எழுதத் தொடங்கியிருக்கிறேன். அந்த அளவு மகிழ்ச்சியாவது ஏதோவொரு புண்ணியத்தால் எனக்குக் கிட்டியிருக்கிறது—என்று அதில் குறிப்பிட்டிருந்தேன்.

எழுதிய நூல் அச்சுக்குச் சென்றது; நாளை அச்சேறி அதே நண்பரின் கைக்கு எட்டும். கொடிய வேதனையிலிருந்து பிறந்த இந்த நாவல் எப்படிப்பட்டதென்பதையறியும் ஆவல் அவருக் குண்டாகலாம். அவர் தமது ஐயங்களை எனக்கெழுதுவார் என்று நினைத்திருந்தேன். ஆனால் அந்த நாள் மாத்திரம் வர வில்லை. நாவல் அச்சகத்திலிருந்து வெளி வருவதில் தாமதம் ஏற்பட்டது. அதற்குள்ளாகவே நண்பர் துங்க அவர்கள் விபத் துக்காளாகி மறைந்துவிட்டார். இதை அவருடைய நட்பின்

நினைவுக்குப் படைக்கும் நிலையே ஏற்பட்டது. அவர் ஏறக்குறைய இருபதாண்டுகளாவது என்னைவிட இளையவராக இருக்கலாம். இந்த நாவல் அவருடைய நினைவுக்கு நான் செலுத்தும் கண்ணீர்க் காணிக்கையாகும் என்று நான் என்றுமே நினைத்ததில்லை.

துங்கரின் பிறந்த ஊரான ‘பாளகுதுரு’ நான் பிறந்த ஊருக்கு அண்மையில் இருக்கிறது: ஐந்தே ஐந்து மைல் தொலைவிலிருக்கிறது. அப்படியிருந்தும் எனக்கும் அவருக்கும் இடையே ஏற்பட்ட தொடர்பு, நட்பு, உறவு இந்த ஏழெட்டாண்டுகளுக்குள் தான். **1951**இல் பொதுத் தேர்தலின்போது அவர் பி.டி.ஐ. நிருபராக எங்கள் மாவட்டத்துக்கு வந்தபோதுதான் அவருடன் எனக்கு அறிமுகம் ஏற்பட்டது.

அந்தச் சிறு அறிமுகம் உடன்பிறப்பைவிட ஆழமான நட்பைத் தோற்றுவித்தது.

துங்க அவர்கள் சாதாரணமான மெலிந்த, வெளுத்த உடலமைப்பை உடையவர். முகத்தில் குறும்புப் புன்னகையொன்று மின்னலிடும். அந்தப் புன்னகையும் ஒளிவிடும் கண்களும் அவருடைய கூர்ந்த அறிவின் சின்னங்கள். அவருடைய அறிவு எந்த அளவுக்குக் கூர்மையானதோ, அதே அளவுக்கு அவருடைய நாவும் கூரியது. நுண்ணறிய அறிவைப்போலவே அவருடைய வெளிப்படையான பேச்சும் அவருடைய இயல்பை எடுத்துக்காட்டியது. நடுத்தர வயதும், துணிவுள்ள மனமும் கொண்ட அவர், பத்திரிகைகளிலும் பி.டி.ஐ. செய்தி நிறுவனத்திலும் புகழ்பெற்றார். அவருடைய நண்பர்களும், அவருடைய வேலை காரணமாக அவருடன் தொடர்புடையவர்களும் எங்கும் நிறைந்திருந்தனர். பாகிஸ்தானில், அவர் இரண்டு மூன்றாண்டுகள் பி.டி.ஐ. நிருபராக இருந்திருக்கிறார். இந்திய அரசாங்கம் அவருடைய திறமையை நன்கு மதித்தது என்று தெரிகிறது. அயூப் சர்வாதிகாரம் தொடங்கியபோது முதன்முதலில் அந்தத் தகவலை வெளியிட்டவரே அவர்தான். பாண்டிச்சேரிப் புரட்சி நடவடிக்கைகளில் ஆசிரமத்துக்கு எந்த அளவுக்குப் பங்கிருந்தது என்று தெரிவித்தவர் அவர்; இறப்பதற்கு ஓரிரண்டு மாதங்களுக்கு முன்பு நேபாவுக்குப் போகவேண்டுமென்று தவித்தார்; அப்போது அஸ்ஸாமில் ஒரு பஸ் விபத்தில் சிக்கி அவர் இறக்க வேண்டி வந்தது. அப்படிப்பட்டவரைப்பற்றி இந்திய அரசாங்கத்தின் தகவல்—ஒலிபரப்பு அமைச்சர் கேஸ்கர் அவர்கள் வெளி

யிட்ட அனுதாபச் செய்தி ஒரு சிறிதும் மிகையற்ற சிறப்புரை யாய் இருக்கிறது.

அவர் மிகுந்த ஏழ்மையில் பிறந்தார்; தந்தையை இளவயதி லேயே இழந்துவிட்டார். தாயின் அன்பையும் அரவணைப்பையும் கூட விரைவில் இழந்து அநாதையாக வாழ்க்கை தொடங்கினார். படித்தது எஸ்.எஸ்.எல்.சி. வரைதான்; துணிவு ஒன்றே அவருடைய வாழ்க்கையை நடத்திவந்த பேராற்றல். பணமோ, புகழோ அவருடைய மதிப்பைப் பெற்றதில்லை. மனித சமுதாயத் தின் எல்லை காணா ஆழத்தைக் கூர்ந்து நோக்குவதே அவருடைய வாழ்க்கையின் குறிக்கோளாயிருந்தது.

'அழிந்த பிறகு' என்னும் நாவலின் யசவந்தர் எப்படி வாழும் மனிதரோ, அவ்வாறே என் நண்பரான திரு. துங்க அவர்களும் தமது நண்பர் பலரின் நினைவில் ஆழ்ந்ததும் உயிரோட்டமுள்ளது மான ஓர் உருவை நிறுத்தியவர்.

நாம் அவருடன் பேசமுடியாவிட்டாலும், காணமுடியாத அவர் ஆன்மா நம்முடன் பேசிக்கொண்டே இருக்கிறது.

29-1-1960
புத்தூர்
தென் கர்நாடகம்

சிவராம காரந்த

## முதல் அத்தியாயம்

வாழ்க்கை என்பது ஒரு நீண்ட காலப் பயணம். அது தொடங்கு கிற நாளிலிருந்து ஆறு, ஏழு ஆண்டுகள் வரை நம்முடைய உணர்வே நமக்கு இருப்பதில்லை. தாய், தந்தை, அண்ணன், தம்பி, உறவினர்கள் முதலிய பலருடைய தொடர்பு, நம் இளவயதில் உண்டாகிறது என்றாலும், பிறருடைய உதவியின்றி நம் வாழ்க்கை அப்பொழுது நடைபெறுவதற்கு இயலாதென்றா லும், அவற்றைப் பற்றிய நினைவு நமக்கு உண்டாவதில்லை. இவ்வாறு குழவிப் பருவம் கடந்து, இளமை துவங்கினால், பள்ளிக் கூடத்தின் உள்ளும் வெளியிலும் சம வயதுடையவர்களின் நட்பு நமக்குக் கிடைக்கிறது; அப்போது நண்பர்களைப்பற்றி மிகுதியாக நினைப்பதில் காலம் கழிக்கிறோம். அந்த நினைவுகளும்கூட நிலை யானவையல்ல. மாணவப் பருவம் கழிந்து, காளைப் பருவத்தில் காலிடும்போது நம் வாழ்க்கை, வேண்டிய அளவு இனிய நினைவு களைக் கொண்டிருந்தாலும் அடுத்து வாழ்க்கைச் சுழலில் அடியிடும் போது, நினைவுக் கருவூலத்தில் எஞ்சியிருக்கும் நண்பர்களின் எண்ணிக்கை ஒன்று அல்லது இரண்டேயாகும். மிகுதியாகப் போனால், பத்து அல்லது பன்னிரண்டாக இருக்கலாம். அதனை அடுத்து வருவது வேறொரு உலகாகும். வாழ்க்கைப் போக்கிலே சந்திக்கும் நண்பர்கள் வேறு வகையானவர்கள். அப்போதும் ஆழ்ந்த நினைவுக்கு அடிப்படையாக அமையும், வாழ்க்கைக் குதவும் அல்லது வாழ்க்கைக்குத் தடையாக வந்து தாக்கி நினைவை ஆழமாகப் பதிக்க வல்ல மக்களின் எண்ணிக்கை மிகுதி யாக இராது.

பிறகு முதுமை தொடங்குகிறது; பழைய நினைவுகள் எல்லாம் மறைந்துவிடுகின்றன. முதுமையில் ஒத்த வயதற்றவருடன் அதிகத் தொடர்பு இருப்பதில்லை. நம்முடைய இன்பம், துன்பம், அமைதி முதலியவற்றிற்கு எழுபதாண்டு வாழ்க்கைப் பயணத்தில் கண்டு, பேசியவர்களின் எண்ணிக்கை, உடன்படித்தவர்களின் எண்ணிக்கை, வேலைசெய்யும் இடத்தில் சேர்ந்து பிறகு பிரிந்து

சென்றவர்களின் தொகை—இவற்றையெல்லாம் கூட்டினால் ஆயிரத்திற்கும் மிகும். முடிவில் இறக்கும்போது யாரும் அறியாமலே இறக்கவும் கூடும். ஓரளவு புண்ணியம் செய்தவனாக இருந்தால், பத்துப் பன்னிரண்டு நண்பர்கள் அவன் இறந்ததை எண்ணி ''பாவம், போய்விட்டானா? வயது ஆயிற்று. இன்னும் என்ன? போகவேண்டியதுதான்'' என்று அவன் மரணத்தை நினைத்து ஒரு சொட்டுக் கண்ணீர் சிந்தலாம்—கண்ணீர் சிந்தாமல்—வெற்றுப் பேச்சுடன் முடித்தும் விடலாம். எவ்வளவு நீண்ட பயணம்? எவ்வளவு நாட்கள் தொடர்ந்தது? எந்தெந்தப் பயன்களை—மனித வாழ்வில் அடைய வேண்டியவற்றை—அடைய முடிந்தது? உழைத்தது எவ்வளவு? விட்டது எவ்வளவு? என்றெல்லாம் கணக்கிட்டால் வீடு வாசல், பணம் காசு—ஓரளவு எஞ்சலாம். ஆனால், பிறருடைய நினைவுத்தடத்தில் ''இத்தகையவர் ஒருவர் இருந்தார்—போய்விட்டார். அவர் போனதால் நம் வாழ்க்கைச் செல்வத்தில் அந்த அளவு குறைந்தது'' என்று பொறிக்க வல்லவர்களின் வாழ்க்கை, உண்மையில் உயர்ந்ததாகும். ஆனால் அது எத்தனை பேருக்குக் கிட்டும்!

வாழ்க்கைப் பயணமே அப்படிப்பட்டதுதான். அந்த நாடகத்தில் ஒரு கணத்தில் நடக்கும் காட்சி—நாம் வெளியூர்களுக்குச் செல்லும் பயணம். இது உண்மையான பயணம். இரயிலிலோ, படகிலோ, பஸ்ஸிலோ ஏறி ஏதோ ஒரு வேலைக்காக நாம் அலைந்து கொண்டே இருக்கிறோம். ஒன்று, வேலையாகப் போகிறோம், அல்லது வேடிக்கைப் பார்க்கப் போகிறோம். நான் நீங்கள்—எல்லோரும் அப்படியே செய்கிறோம். சில மணி நேர பஸ் பிரயாணம் செய்ததை விட்டுவிட்டால், படகிலோ, இரயிலிலோ ஓரிரண்டு நாட்கள் நாமெல்லாம் போயிருக்கிறோம். அவ்வேளையில் நிலைத்துள்ள உலகத்தை நாம் மறந்துவிடுகிறோம், நாம் சென்றுகொண்டே யிருக்கிறோம். அந்தப் படகில் அல்லது வண்டியில் நூற்றுக்கணக்கான, அல்லது ஆயிரக்கணக்கான மைல்கள் பயணம் செய்யும் பிற மக்களும் நிறைந்திருக்கிறார்கள். ஒரு தடவை அந்த வண்டி அல்லது படகில் ஏறிவிட்டால் இறங்கும் வரையில் அதுவே நமது வீடு. அதில் முன்பே மக்கள் நிரம்பியிருந்தால், புதிதாக ஏறும் நாம் அவர்களுடைய பகைவர்களாகக் கருதப்படுவோம். நம்மைப் பார்த்தவுடனே இன்னும் சிறிது பரப்பிக்கொண்டு உட்காருவர் சிலர். நண்பகலானாலும் விரித்த படுக்கையைச் சிறிதுகூட ஒதுக்காமல் தூங்குபவர்களைப் போல்

நடிப்பவர்களும் உண்டு. ''வந்தவனுக்கும் சிறிது இடம் கொடுப்போம்'' என்று நினைப்பவர்கள் மிக மிகச் சிலர். அங்கே இடமேயில்லையென்றால் இடம் கொடுக்கும் பிரச்சினையே இல்லை. மணிக் கணக்காக நின்றுகொண்டே போகவேண்டியதுதான். அத்தகைய வேளையில் நாமும் சீறுகிறோம். வண்டியில் இருப்பவர்களின் மீது நமக்கு ஆத்திரம் பொங்குகிறது. பல்வேறு வகையான விலங்குகளையும், பறவைகளையும் ஒரே காட்சிச்சாலையில் அடைத்து வைத்ததைப்போல், அந்த நிலைமை காட்சி அளிக்கின்றது. அப்படியிருந்தும்கூட மக்கள் கூட்டம் குறைவதேயில்லை. புறப்படும்போது நண்பர்கள் குழுவையும் சேர்த்துக் கொண்டு புறப்பட்டால் பயணத்தில் ஏற்படும் கஷ்டங்களை, வேண்டிய—வேண்டாத பேச்சுக்களைப் பேசி மறந்துவிடலாம். பயணத்தையே ஒரு திருவிழாவாக நினைத்து, அறிமுகமில்லாதவர்களையும் பேச்சுக்கிழுத்து, இரண்டே மணி நேரத்தில் வண்டியிலிருந்தவர்களெல்லாம் நம் பக்கத்து வீட்டு நண்பர்கள் என்று சொல்லும் அளவிற்கு இனிமையாகக் காலம் கழித்து, வண்டியிலிருந்து இறங்கும்போது எல்லோருக்கும் வணக்கம் கூறிவிட்டுப் போகும் மக்களும் இருக்கிறார்கள். அதன் பிறகு அவர்கள் எங்கோ! இவர் எங்கோ!

பயணத்தையே வாழ்க்கையின் ஒரு பகுதியாகக்கொண்டுள்ள மக்களிலும் வெவ்வேறு வகைகளைக் காண்கிறோம். இங்கிலாந்து போன்ற நாட்டில் இரயில் பிரயாணம் செய்தால் மற்றொரு விசித்திரத்தைக் காணலாம். அங்கே ஒருவன் மற்றொருவனுடைய இடத்தைப் பிடித்துக்கொள்வதில்லை. இடமில்லாதவர்கள் நின்றுகொண்டிருப்பார்கள். இடம் கிடைத்தவர்கள் உட்கார்ந்திருப்பார்கள். அருகருகே உட்கார்ந்து பத்துப் பன்னிரண்டு மணி நேரம் பயணம் செய்வார்கள்; கையில் புத்தகமிருந்தால் படிப்பார்கள். இல்லையென்றால் ஊமைப் பிசாசுகளைப் போல் உட்கார்ந்திருப்பார்கள். ''உங்களுக்கு எந்த ஊர்? எந்த ஊருக்குப் போகிறீர்கள்? என்ன வேலை செய்கிறீர்கள்? என்ன வருமானம்?''—இப்படி ஒரு கேள்வியையும் அவர்கள் கேட்பதில்லை. அவரவர் பாடு அவரவர்களுக்கு. இரயில் பயணம் என்பது நட்பைப் பெருக்கிக்கொள்வதற்காக அல்ல, பயணம் செய்வதற்காக மட்டுமே என்று அங்குள்ளவர்கள் நினைக்கிறார்கள். இவற்றில் எது சரி? எது தவறு?

என் வாழ்க்கையில் நான் ஆர்வம் மிருந்து பொங்கும் நிலையி லிருந்து வெறுப்பு உண்டாகும்வரை பலமுறை படகிலும் இரயிலி லும் பயணம்செய்திருக்கின்றேன். அந்தப் பயணங்கள் அனைத்தை யும் பற்றி நான் இப்போது வர்ணித்துச் சொல்ல வரவில்லை. பயணத்தின்போது என் மனநிலை எப்படியிருக்கும் என்பதை எடுத்துக் கூறுவதே என் நோக்கம். எனக்குக் கூட்டத்தைக் கண்டாலே பிடிக்காது. கூட்டம் மிகுதியானாலும், பேச்சு அதிக மானாலும் முழு ஊமையாக மாறிவிடுவது என் இயல்பு. நான் உட்கார்ந்திருந்த வண்டியில் சப்பணமிட்டு உட்கார்ந்திருந்தவர் களையும் பார்த்திருக்கிறேன். பகீரதனைப் போலத் தவம் செய்யும் நிலையில் நின்றிருந்தவர்களையும் கண்டிருக்கின்றேன். சவாசனத் தில் இருந்தவர்களையும் நான் பார்த்திருக்கிறேன். கூட்டம் பெருத்து இரயிலில் மூச்சுத் திணறும்போது, அவர்களையெல்லாம் பார்த்து, ''எப்போது இந்தப் பயணம் முடியுமோ'' என்று நான் வருந்தியதுண்டு. எனவே சில ஆண்டுகளாக, செலவு மிகுதி யென்றாலும் விருப்பம்போலப் பயணம் செய்யவேண்டும் என்ற வேட்கை எனக்கு அதிகமாகி வருகிறது. அப்படிப் பார்க்கும் போது மூன்றாம் வகுப்புப் பயணம் எனக்கு ஒத்து வரவில்லை. தகுதிக்கேற்ற இன்டர் வகுப்பு அல்லது இன்றைய இரண்டாம் வகுப்பில் செல்வது வசதியாக இருக்கும். சுதந்திரம் வந்த பிறகு நாட்டில் நடுத்தர மக்கள் கடைநிலைக்கு இறங்கியதைப்போல, இன்டர் அல்லது இரண்டாம் வகுப்புப் பயணத்தைப் பறிப்பதற்கு மட்டுமே பயன்படுகிறது. வேறு பயன் ஏதுமில்லை. மூன்றாம் வகுப்பில் உள்ள கூட்டம், நெருக்கடி, கூச்சல் எல்லாமே இதிலும் நிரம்பியிருக்கின்றன. ஆகவே விரும்பியோ, விரும்பாமலோ என்பாட்டிற்கு நான் இருக்கவேண்டும் என்னும் ஆசையால் முதல் வகுப்பிலே பயணம் செய்கிறேன். அங்கேயும் நான் விரும்பியதெல்லாம் கிடைத்துவிடுகிறது என்று யாரும் நினைக்க வேண்டாம். பொதுவாக முதலிலேயே டிக்கட் வாங்கி 'ரிசர்வ்' செய்துவிடுவதால் உட்காருவதில் தொல்லை ஏதும் இல்லை. ஒரு மூலையில், காலைத் தொங்கவிட்டோ, மடித்துச் சப்பணமிட்டோ, பக்கவாட்டில் முதுகைச் சாய்த்தோ, உட்கார வசதி கிடைத் தால் அதுவே எனக்குப் போதுமானது. இனி, பயணத்தின்போது உடன்செல்லும் மற்றவர்களுடைய போக்கு விசித்திரமாகவே யிருக்கும் என்பதைத் தனியே சொல்லவேண்டியதில்லை. முதல் வகுப்பிற்குப் பணம் கொடுத்துவிட்டு, இது நம் வீடு, இங்கே

மற்றவர்க்கு இடமேயில்லை என்னும் நினைப்பில் நான்கைந்து படுக்கைகள், பத்துப் பன்னிரண்டு பெட்டிகள், பழக்கூடைகள், சிற்றுண்டிப் பாத்திரங்கள், குழந்தைகளின் 'கமோடு' முதலிய வற்றையெல்லாம் 'பிரேக்' வேனில் போட்டு அடைப்பது போன்றே அடைத்து, தாம் கொடுத்த பணத்திற்கு முழுப் பயனையும் அனுபவித்துத் தீர்க்கும் துரைமார்களும் வருகிறார்கள். மிகுதியாகச் சாமான்கள் இல்லாவிட்டாலும், இரயிலையே விலைக்கு வாங்கிவிட்ட தோரணையில் நடந்துகொள்பவர்களும் இருக்கிறார்கள். மக்கள் மக்களேதான். பணம் காசு—இவற்றால் மட்டும் அவர்கள் தேவர்கள் ஆகிவிடுவார்களா? அவர்களில் ஓரளவு அறிவும், பண்பாடும் அதிகமாக இருக்கும் என்று நாம் எதிர்பார்க்கிறோம். அவையில்லாவிட்டாலும் இந்த ஜனங்கள் மூன்றாம் வகுப்புப் பிரயாணிகள் பலரைவிட ஒழுங்காய் இருக் கிறார்கள். இந்த ஒரு காரணத்தினாலாவது பயணம் இனிமை யாக அமைகிறது. அதுவுமின்றி இவ்வாறு தண்டச் செலவு செய்ய வல்லவர்களின் தொகை குறைவானதால் பயணம் செய்ப வர்களின் எண்ணிக்கை குறைவாக இருக்கும். மிகுதியான மக்கள் இங்கே முண்டி அடித்து ஏறுவதில்லை. இரவில் தூக்கம் கெடுவதுண்டு. நானோ தூக்கத்தை இழக்க விரும்பாதவன். ''வாழ்க்கையில் மிகவும் இன்பமயமாகக் கழியும் நேரம் எது?'' என்று கேட்டால் ''இன்ப துன்பத்தின் தாக்குதல் அற்ற அமைதி யான தூக்கம்'' என்று சொல்லக்கூடியவன் நான். ஆனால் என் தூக்கத்திற்கும் ஓர் அளவுண்டு. வேறு பலரைப்போல முதல் வகுப்பைப் பார்த்தவுடனேயே எனக்குத் தூக்கம் வருவதில்லை. நண்பகலில் ஒரு மணி நேரமே தூக்கம். எனவே மற்ற நேரமெல் லாம் விழித்திருக்கவேண்டும். ஆம், நான் விழித்தேயிருப்பேன், அந்த நேரத்தில் ஏதாவது ஒரு நூலைப் படித்துக்கொண் டிருப்பேன். படிக்காத நேரத்தில் சும்மா சாய்ந்துகொண்டு உட்கார்ந்து இருப்பேன். பயணம் என்ற நாடகத்தில் என் எதிரில் உள்ள மேடையில் நடமாடும் பாத்திரங்களுடைய பேச்சு, நடை, செயல் முதலியவற்றை ஊமையாக இருந்து பார்த்திருப் பேன். பெரும்பாலும் நானாகவே பேச்சுக் கொடுப்பதில்லை. அதிர்ஷ்டவசமாக நல்ல நண்பர்கள் கிடைத்தால் பேசமாட்டேன் என்பதல்ல. எப்போதோ ஒரு முறை அப்படிப்பட்டவர்கள் கிடைக்கவும் செய்கிறார்கள். ஒருவரிடம் மற்றவர்க்கு மதிப்பு ஏற்படும் வகையிலே அமைந்த பிரயாண நண்பர்கள் சிலர் என்

நினைவில் நிலைத்திருக்கிறார்கள். இப்பொழுது அப்படிப்பட்ட ஒருவரின் கதையைச் சொல்லத்தான் தொடங்கியிருக்கிறேன்.

ஒரு பயணத்தின்போது அரைநாள் பொழுது என்னுடன் இருந்து கழித்த 'முதிய குடும்பி' ஒருவனைப் பற்றி ஒரு நாவலை எழுதத்தொடங்கியிருக்கிறேன் என்றால் உங்களுக்கு வியப்பாகவும் இருக்கும். அந்தப் பயணத்தில் அந்த மனிதருடன் சிறிது அறிமுகம் ஏற்பட்டு, பல்வேறு காரணங்களால் அவர்மீது எனக்கிருந்த பற்று வளர்ந்து, பிறகு ஆழ்ந்த நம்பிக்கை மிகுந்ததால் இதை எழுதிக்கொண்டிருக்கின்றேன். வாழ்க்கைப் பயணத்தில் சந்தித்த அந்த மனிதர் என் நினைவுத்திரையில் பதிந்து, என் ஆவலைப் பெருக்கி, அந்த ஆவலுக்கு வழிவகுக்கும் முறையில் மேலும் ஓரிரு குடும்பத் தலைவர்களும், குடும்பத் தலைவிகளும் அவர் விட்டுச் சென்ற ஒரு நாட்குறிப்பும் எனக்குக் கிடைத்ததால், ஒரு வாழ்க்கை வரலாற்றைப்போல எழுத நேர்ந்தது. அதில் கைநழுவிப்போன காட்சிகளும், அரைகுறையான சித்திரங்களும் பலப்பல இருக்கலாம். இப்படி ஒரு வாய்ப்பு எனக்குக் கிடைக்கும் என்று தெரிந்திருந்தால், அந்த மனிதர் உயிருடன் இருந்தபோது அவருடைய தனி வாழ்க்கையில் அவ்வளவு அனுபவங்கள் புதைந்து கிடந்தன என்று தெரிந்திருந்தால், என்னுடைய இந்த எழுத்தோவியம் இன்னும் சுவையானதாக இருந்திருக்கும். நாவலுக்குப் பதிலாக ஒரு வாழ்க்கை வரலாறே தோன்றியிருக்கலாம். எனக்குத் தெரிந்த பகுதிகளையும், புரியாத பிரச்சினைகளையும், அவர் வாழ்ந்திருந்த காலத்தில் அவரையே கேட்டுத் தெரிந்துகொண்டிருக்கலாம்.

எனக்கும் அவருக்கும் நட்பு ஏற்பட்டு ஐந்தாறு ஆண்டுகளே ஆயிற்று. அதுவும் ஆண்டுக்கு இரண்டொரு முறை, இரண்டொரு நாட்கள்; அந்த நாட்களிலும் ஓரிரு மணி நேரமே வளர்ந்துவந்த நட்பு. விரும்பியவர்களுடன் விரும்புகிறபோது நான் எவ்வளவு வாயாடியாவேனோ அதில் பாதி அளவுகூட அந்த என் நண்பர் பேசமாட்டார். நான் அவரை அறிமுகம் செய்துகொண்ட தொடக்க நாட்களில் அவர் நூற்றுக்குப் பத்து சொற்கள்கூடப் பேசியதில்லை. அந்தப் பத்து வளர்ந்து நூற்றுக்கு ஐம்பது ஆவதற்கு ஐந்து ஆண்டுகள் பிடித்தன. இடையில் நாங்கள் மிகுதியாகக் கடிதங்களும் எழுதிக்கொண்டதில்லை; அவருடன் அறிமுகம் ஏற்பட்ட பிறகு அவரை அவர் வீட்டிலேயே கண்டு பேசி, ஊர் திரும்பிய பிறகு நான் சும்மா இருந்து

விடுவேன். மீண்டும் அவர் வாழும் ஊருக்குப் போகும் வாய்ப்பு ஏற்படும்போது, ''நான் உங்கள் ஊருக்கு நான்கு நாட்களுக்காக வரவிருக்கின்றேன். வந்தால் உங்களைச் சந்திக்கின்றேன்'' என்று கடிதம் எழுதுவேன். அவர் ''கண்டிப்பாக வாருங்கள். எனக்கு எப்போதுமே ஓய்வுதான். வாராமலிருக்கக்கூடாது'' என்று பதில் எழுதுவார். எங்களுக்கிடையில் நடைபெற்ற கடிதப் போக்குவரத்து இவ்வளவுதான். கடைசி இரண்டு ஆண்டுகளில் மட்டும் மாதத்திற்கு ஒரு முறை அல்லது நான்கு மாதங்களுக்கு ஒரு முறை அவர் எனக்குக் கடிதம் எழுதிக்கொண்டிருந்தார். நானும் அவர்க்கு எழுதினேன்.

அவர் என்னைவிட மூத்தவர். அவருடைய ஆழ்ந்த அனுபவ மிகுந்த வாழ்க்கையில் எனக்கு நம்பிக்கையிருந்தது. இளையவனை எனக்கு அவர் கடிதம் எழுதவேண்டிய காரணமேயில்லை. பல விஷயங்களில் பழுத்த அனுபவம் உடையவர் அவர். அரை வேக்காடு வாழ்க்கை நடத்தும் என்னிடம், அவர் ''இது எப்படி? அது ஏன்?'' என்று கேட்கும்போது எனக்கு வியப்பாக இருக்கும். வாழ்க்கையின் பிரச்சினைகள், என்னைத் துளைப்பதுபோலவே, எல்லோரையும் துளைப்பதுபோலவே, அவரையும் அதிகமாகத் தாக்கியிருக்கவேண்டும் என்று அவர் கடிதங்களிலிருந்து எனக்குத் தோன்றியது. அவர் எழுப்பிய பிரச்சினைகள் ஆழ்ந்தவையாக இருந்ததால் என்னுடைய யூகங்களைப் பெரி தாக்கி 'அது இப்படியிருக்கலாமல்லவா?' என்னும் ஐயங் களையே, அவருடைய கேள்விகளுக்குப் பதிலாக நான் எழுதிக் கொண்டிருந்தேனே தவிர, அதைவிட அதிகமாக எழுதுவதற்குத் துணிந்ததில்லை. அவர் எழுப்பிய பிரச்சினைகள் வெறும் விவாதத் திற்கு எழுப்பப்படும் பிரச்சினைகள் அல்ல. மற்றவர்களைவிட நான் மிகுதியாக அறிவேன் என்பதைக் காட்டிக்கொள்வதற்காக எழுப்பிய பிரச்சினைகளும் அல்ல.

'வாழ்வது ஏன்? வாழ்வது எப்படி?' என்பது போன்ற அந்தப் பிரச்சினைகள் தர்க்கம், அறிவு ஆகியவற்றோடு தொடர்புள்ளவை யல்ல; சிந்தனை, காட்சி ஆகியவற்றோடு தொடர்புள்ளவை. நம் முடைய நம்பிக்கையைக் குலைத்து, தகர்த்த பிரச்சினைகள்; மூட நம்பிக்கையினால் விடை காணமுடியாதவை. அப்படியிருக்கும் போது அவருடைய கடிதங்களுக்கு நான் தகுந்த கடிதங்கள் எழுதுகின்றேன் என்று நான் என்றுமே நம்பியது இல்லை. அதிக

மாகப் போனுல், ''உங்களைப்போலவே எனக்கும் அந்த ஐயம் தோன்றுகிறது'' என்று பதில் எழுதுவதுண்டு.

வாசகர்களுக்கு இந்த நாவலின் முன்னுரையே ஒரு பெரும் சுமையாகத் தோன்றும். ஆம், வாழ்வு எவ்வளவு பெருஞ் சுமையோ, என் நண்பரின் வாழ்வும் அவ்வளவு பெருஞ்சுமை யாகவேயிருந்தது. எனது அந்த நண்பர் எனக்கு எழுதிய இறுதிக் கடிதம்: ''நீங்கள் மீண்டும் பம்பாய்க்கு எப்போது வருவீர்கள்? மூன்று மாதங்களுக்கு முன்புதான் வந்து போனீர்கள். என்னுடைய ஆத்திரத்திற்கு என்னை மன்னிக்க வேண்டும். ஏனோ என் மனத்தில் இன்னும் ஒரு முறை உங்களைக் காண்பேன் என்ற உறுதி தோன்றவில்லை. அதனுலேயே இந்தக் கேள்வியைக் கேட்கின்றேன்; நீங்கள் கூடிய சீக்கிரம் வந்தால் நன்ருயிருக்கும். நான் சிற்சில சொற்களைக் கிறுக்கி வைத்திருக் கின்றேன். அவற்றை இதுவரை யாரிடமும் காட்டியதில்லை. இப்போதைக்குக் காட்டும் எண்ணமும் இல்லை, நான் இருக்கும் வரை அதைக் காட்டப்போவதில்லை. அப்படியானுல் எழுதியது வீணுகத்தானே போகும். அப்படியாகக் கூடாது என்பதற்காக அதை உங்கள் கையில் கொடுக்கவேண்டும். என் காலம் முடிந்த பிறகு நீங்கள் அதைப் படிக்கவேண்டும் என்பது என் ஆசை. வேறு ஏதுமில்லை.

''ஒரு விஷயம், பாருங்கள், நமது மூதாதையர்களான பல்வேறு முனிவர்கள் உலகம், பிறப்பு முதலியவற்றைப்பற்றி இது இப்படி, இதுவே உண்மை, இதுதான் இறுதியான முடிவு—என்றெல்லாம் கூறியிருக்கிருர்கள் அல்லவா? அவற்றை வேதம் என்ருவது 'சொல்லுங்கள், உபநிடதம் என்ருவது சொல்லுங்கள்—தவத்தி னுல் அறிந்துகொண்டது என்ருே, கடவுளே வந்து காதில் கிசுகிசுத்தது என்ருே சொல்லுங்கள். எனக்கு ஓர் ஐயம், இந்த உலகம், படைப்பு முதலியவற்றைப் பற்றி நான் ஏதோ சிறிது படித்துத் தெரிந்துகொண்டிருக்கின்றேன். உயிர்க் கூட்டத்தின் இந்த யாத்திரை எங்கோ தொடங்கி எங்கோ போய்க்கொண் டிருக்கிறது. பயணம் தொடங்கிய எவ்வளவோ காலத்திற்குப் பிறகு, வழியில் இரயில் நின்ற இடத்தில் வண்டியேறும் பிரயாணியைப்போல மனிதன் என்னும் பிராணி உள்ளே நுழைந் தான். நுழைந்தவன், நுழைந்ததுபோலவே இறங்கியும் போய் விட்டான். வாழ்வு என்னும் பயணம் மட்டும் இன்னும் தொடர்ந்துகொண்டிருக்கிறது. அதனுடைய குறிக்கோள் இன்று

வரை தெரியவில்லை. இன்னும் கடக்கவேண்டிய வழி எண்ணிப் பார்க்க முடியாத அளவு நீண்டிருக்கிறது. அத்தகைய வேளையில் அவன் எப்படிப்பட்டவனேயாகட்டும், 'நான் இதன் இரகசியத்தைக் கண்டுபிடித்துவிட்டேன், இதுவே உண்மை' என்று முழங்குவானுனால் அது நகைப்பிற்குரியதாகிறதல்லவா?'' என்று அவர்தம் கடிதத்தில் எழுதியிருந்தார். அவருடைய இந்தக் கேள்வி எல்லா மருங்களுடைய ஆணிவேரகளையும் அசைக்கும்படியாக இருக்கிறதல்லவா!

அந்த நண்பர், வாழ்வை அக்கறையோடும், ஆதாரத்தோடும் கண்டு, ஆராய்ந்து, நான் அறிந்தது மிகக் குறைந்த அளவு உண்மையே என்பதை உணர்ந்துகொண்டு வாழ்ந்துவந்த ஒரு மனிதர். அவர் ஏதாவது சில விஷயங்களைப் பற்றி நாலு வரிகளை எழுதினுல் அவை வெற்றுப் பேச்சாக இருக்க இயலாது. நான் உயிருடன் இருக்கும்வரை அதை யாரும் பார்க்கவேண்டியதில்லை என்று கூறும் அந்த மனிதர் பெருமைக்காக அப்படிச் செய்திருந்தால், எழுதியது ஏன்? யாருக்காக? அதில் என்ன இருக்கலாம்? இப்படிப் பல்வேறு கேள்விகள் என் மனத்திரையில் எழுந்ததுண்டு. எப்படியானுலும் அவர் இருக்கும்வரை அவர் எழுதியது எனக்குக் கிடைக்காது. அவர் ஏன் இப்படி இந்த விசித்திரமான ஆசையைக் கொண்டிருந்தார் என்று எனக்குத் தோன்றியது. அவர் புற வாழ்க்கையில் ஏமாற்றம் அடைந்து, அதனுல் ஆமையைப் போல் தன் கைகால்களை உள்ளே இழுத்துக்கொண்டு தனி வாழ்க்கையை நடத்தினுரோ என்ற ஒரே ஓர் ஐயம் எனக்கு ஏற்பட்டது. புறத்திலும் அப்படியே இருந்தார். அகத்திலும் அப்படியே. தன் பேரில் தனக்கு நம்பிக்கையில்லை என்பதல்ல; தன் கருத்துக்கள் பிறரிடத்தில் நகைப்பை விளைவிக்கலாம்—தான் செத்த பிறகு யார் என்ன நினைப்புக் கொண்டாலும் கவலையில்லை—என்னும் காரணத்தால் அவர் அப்படி நினைத்திருக்கலாம் என்று எனக்குத் தோன்றியது.

அவர் வாழும் பம்பாய்க்குப் போகும் வேலை எனக்கு அப்போது இல்லை. அப்படி ஒரு வேலை ஐந்தாறு மாதங்களுக்கு ஏற்படாது என்ற நிலை. அவருக்காக நான் பம்பாய் போய்வந்தால், என்ன என்னும் ஆசையும் ஒரு முறை எழுந்தது. ஆசைக்கேற்றவாறு செயலில் ஈடுபடும் சுறுசுறுப்பு எனக்கில்லை. ஆசை ஆவலாய், ஆவல் தணியாத வேட்கையாய் என்னைத் துளைக்கவேண்டும். பல்வேறு தொல்லைகளுக்கு இடையே, அவற்றையெல்லாம்

கடந்து இந்த வேலையைச் செய்யும் அளவு வேகம் எனக்கு உண்டாகவில்லை. அதாவது அவருடைய 'இக' வாழ்க்கை முடிவுபெறுவதற்குள் நான் அவரைக் காணமுடியவில்லை. அதற்காகப் பம்பாயிலிருந்து ஒரு தந்தி வரவேண்டியிருந்தது. அவருடைய அடுத்த வீட்டுக்காரர், ''உங்கள் உறவினருக்கு உடல் நலமில்லை; உடனே புறப்பட்டு வாருங்கள்'' என்று தந்தி கொடுக்க வேண்டியதாயிற்று. நான் அவருடைய உறவினன் என்ற எண்ணம் தந்தி கொடுத்தவர் மனத்தில் இருந்திருக்க வேண்டும். அதைக் கொடுப்பதற்குக் காரணம் அந்த என் நண்பர் சொல்லியிருந்திருக்கவேண்டும். அப்பொழுது நான் தாமதம் செய்யாமல் பம்பாய் சென்றேன். அவர் வீட்டுக்குப் போனேன். அவர் அங்கேயில்லை. அடுத்த வீட்டுக்காரரிடமிருந்து அவரை கே. இ. எம். மருத்துவ நிலையத்திற்குக் கொண்டுசென்றிருந்தார்கள் என்பதை அறிந்து, அங்கும் ஓடினேன். வேறு யாரும் தனக்கு உற்ற நண்பர்களோ, உறவினர்களோ இல்லாதவரைப்போல அந்த நண்பர் என்னைக் காண விரும்பியதற்கு அவருக்கு நான் கடமைப்பட்டிருந்தேன். ஆனால், அவர் என்னிடம் வைத்திருந்த நம்பிக்கையைக் காப்பாற்றிக்கொள்ளும் தகுதி எனக்கில்லாமல் போயிற்று; இருந்திருந்தால் அவருடைய இறுதிக் கடிதத்திற்கு விடையாக நானே நேரில் அன்றே சென்று கண்டிருப்பேன்.

இப்பொழுது அவரைக் காண்பதற்கு மருத்துவ நிலையத்திற்குப் போய் அறிந்துகொள்ள வேண்டியதாயிற்று. உடம்பிற்கென்ன என்பதை அடுத்த வீட்டுக்காரர்கள் தெளிவாகச் சொல்லவில்லை. அவர்களுக்கு அவ்வளவு அக்கறை தோன்றவேண்டிய காரணமில்லை. ''உங்கள் முகவரி எழுதிய ஒரு துண்டுக் காகிதத்தை அவர் காட்டினார். அப்போது அவருக்கு மிகுதியான காய்ச்சல் வந்திருந்தது. உடனே அவரை ஒரு மருத்துவரிடம் காட்டினேன். இவரை உடனே மருத்துவ நிலையத்திற்குக் கொண்டுசெல்லுங்கள், என்று அவர் சொன்னார். இரண்டு மூன்று நாட்களாகவே அவர் படுத்துக்கொண்டிருந்தார். அவருடைய அறைக்கதவு திறவாதது கண்டு, நானே உள்ளே சென்று அவருடைய நிலைமையைக் கண்டு அஞ்சினேன். நாங்கள் பார்க்கும்போது அவருக்குப் பேசுவதற்குக் கூட வலிமையில்லை. உங்கள் முகவரி எழுதிய, மேஜைமேலிட்டிருந்த ஒரு துண்டுக் காகிதத்தை நடுங்கும் தன் கையால் காட்டினார். உடனே தந்தி கொடுத்தோம். நீங்களும் வந்துவிட்டீர்கள்.

இனி, பொறுப்பு உங்களுடையது'' என்று முடித்தார். இதைக் கேட்டு என் மனம் சிந்திக்கும் திறனற்று நடுங்கிற்று. அவர் சொல்லியபடியே மருத்துவ நிலையத்திற்கு ஓடினேன். அதற்குச் சிறிது நேரத்திற்கு முன்புதான் அவர் உடலைக் கட்டிலிலிருந்து அகற்றி, சவக்கிடங்கில் இட்டிருந்தார்கள்.

நான் இப்போது வந்தும், வாராததுபோல் ஆயிற்று; இருந்தும் இல்லாததுபோல்தான். அங்கேயே நின்றேன்; அரை மணிநேரம் எந்தவித வேதனையும் இல்லாமல் அமைதியாகக் கிடந்த அவருடைய மூப்பு மிகுந்த முகத்தைக் கண்டேன். நீண்ட சிந்தனைக்கு அங்கே நேரமில்லை. ''மேலே ஏற்பாடுகளைச் செய்யவேண்டாமா'' என்று வினவினர். ''மரித்தவுடனேயே வாழ்கிறவர்களுடைய வேலை முடிந்துவிடுவது இல்லை'' என்று நினைத்து, பம்பாயிலிருந்த என்னுடைய சில நண்பர்களை நினைவிற்குக் கொண்டுவந்தேன். அங்கிருந்து வெளிவந்து, தொலைபேசிமூலம் தொடர்புகொண்டு, என் நெருங்கிய நண்பர் ஒருவரை வரவழைத்தேன். அவர் உதவியுடன் அந்த நண்பருடைய ஈமச் சடங்குகளை முடித்தும் விட்டேன்.

இனி என்ன செய்வது? அவருடைய அறைக்குத் திரும்பிப்போக வேண்டுமா, வேண்டாமா? நான் யார்? அவர் யார்? என்னும் கேள்வி எழுந்தது. நான் அவருடைய நண்பன் என்பது உண்மை. அதிர்ஷ்டம் கெட்ட நண்பன் என்பதும் உண்மை. ஆனால், அவருடைய சொத்துக்களின்மேல் எனக்கு என்ன உரிமையிருக்கிறது என்றெல்லாம் தோன்றியது. எனக்குத் துணையாக வந்த, அந்த நண்பர் ''அப்படியல்ல, அங்கே போங்கள்; அவருடைய அறையில் உள்ள பொருட்களை வசப்படுத்திக்கொண்டு, அவருடைய உறவினர்கள் யார், யார் எங்கேயிருக்கிறார்கள் என்பதைத் தேடி, அவற்றையெல்லாம் ஒப்படைக்கும்வரையில் உங்களுக்குப் பொறுப்பு உண்டு. அவருக்கு உங்களிடம் அவ்வளவு நம்பிக்கையில்லாவிட்டால் அவராகவே உங்கள் பெயரை ஏன் எழுதிக் காட்டினார்?'' என்று கேட்டார். ஆகவே, நானும் அவருமாக அந்த நண்பர் இருந்த அறைக்குத் திரும்பிச் செல்லவேண்டியதாயிற்று. அடுத்த வீட்டுக்காரர்களின் அனுமதியுடன், அந்த ஒரு நாளைக்காவது அந்த அறை, அதிலிருந்த சாமான்கள் அனைத்திற்கும் எஜமானனாக நான் இருக்கவேண்டியிருந்தது.

பம்பாயில் ''மலபார் ஹில்'' பகுதியில் அந்த நண்பர் வாழ்ந்து வந்தார். மலபார் ஹில் வசதிகளெல்லாம் செல்வர்களுக்கே

உரியவை என்று பொதுவாக அனைவரும் நினைக்கிறார்கள். பெரும் செல்வர்களின் வீடுகளுக்கு இடையிடையே நூற்றுக்கணக்கான சிறு சிறு குடில்களும் உண்டு. ஒரு காலத்தில் செல்வர்களின் மாளிகையாக இருந்தது சிதிலமடைந்து, இப்போது குடிசைகளைப்போலக் காட்சியளிக்கும் வீடுகளும் அங்கே இருக்கின்றன. என்னுடைய நண்பர் வாழ்ந்து வந்தது அப்படிப் பட்ட ஒரு வீட்டில்தான். "Back Bay" கடலை ஒட்டி ஒரு சிறு நிலப் பரப்பு உண்டு. அங்கே பழைய குடியிருப்பை ஒட்டி "out house" அமைப்பில் அதைக் கட்டியிருந்தார்கள். அதன் கீழ்ப்பகுதியில் கடைகள் இருக்கின்றன. பின்பகுதியில் மிகவும் வறிய குடும்பம் ஒன்று வசித்துவருகின்றது. மாடி மிகவும் பெரியது, கடலை நோக்கிய தாழ்வாரம் ஒன்று உண்டு. அதன் எதிர்ப்பக்கத்தில் இரண்டு குடும்பங்கள் தங்குவதற்குரிய பகுதிகள் இருக்கின்றன.

படிகளுக்கு மிக அருகில் இருந்த பகுதியிலே எனது பழைய நண்பராகிய ''யசவந்தராயர்'' இருந்தார். மூன்று அறைகள் இருந்த அந்தப் பகுதி, பம்பாய் மக்களைப் பொறுத்தவரை, அதுவும் நடுத்தர வகுப்பினரைப் பொறுத்தவரை, பெரிதாகத் தோன்றும். அறைகளும்கூடச் சிறியவையல்ல; காற்று, வெளிச்சம், இடம் எல்லாமே நிறைய இருந்தன. அந்தக் கடைசிப் பகுதியில் இருந்த குடும்பத்தினரையே நான், முதலில் அடுத்த வீட்டுக்காரர்கள் என்று குறிப்பிட்டேன். அது ஒரு பார்சிக் குடும்பம். குடும்பத்தின் தலைவர் ஜாம்சேட்ஜி, கண்டி ராக்டர். தந்தி கொடுத்து என்னை வரவழைத்தவர்.

இப்பொழுது எனக்குத் துணையாக வந்தவரும், யசவந்தராயரின் ஈமச் சடங்குகளை நிறைவேற்ற உதவியாக இருந்தவருமான நண்பர் பம்பாயில் பல ஆண்டுகளாக வாணிபம்செய்து வருபவரான மாதவராயர்; அவரும் நானும் சேர்ந்து, இருட்டிய பிறகு, நண்பர் யசவந்தராயரின் வீட்டில் காலிட்டோம். அங்கே வந்து, எனக்கு மிகவும் அறிமுகமான அந்த வீட்டின் கதவைத் திறந்து, விளக்கு ஏற்றி, அங்கிருந்த இரண்டு பிரம்பு நாற்காலிகளில் அமர்ந்தோம். ''மாதவராயரே, நீங்கள் இன்றெல்லாம் எனக்காக அலைந்திருக்கிறீர்கள். கடைசியாக, இறுதி யாத்திரையையும் முடித்துக் கொடுத்தீர்கள். உங்களுக்கு மிகவும் களைப்பாக இருக்கும். நானோ இன்று உணவைப்பற்றிச் சிந்திக்கிற நிலைமையில் இல்லை. இங்கேயே சும்மா படுத்திருந்து, காலையில் ஒய்வாக எல்லாவற்றையும்பற்றிச் சிந்திக்கப் போகிறேன்'' என்றேன்.

''உங்களுக்கு இவர் உறவினரா? நீண்டகாலமாகவே அறிவீர்களா?'' என்று அவர் கேட்டார், அதற்குள் யாரோ பூட்ஸ் காலுடன் தடதடவென்று வரும் ஒலி கேட்டது. நான், ''இப்போது வேண்டாம்—நாளை விவரமாகக் கூறுகிறேன்'' என்றேன். அதற்குள் அடுத்த வீட்டுக் கண்டிராக்டர் வந்தார். கதவைத் திறந்து, விளக்கு ஏற்றியிருப்பதைப் பார்த்து, பழக்கம் காரணம் போலும்—''ஹல்லோ'' என்றார்; யசவந்தராயரின் பெயரையும் கூறியிருப்பாரோ, என்னவோ! நாங்கள் இருவரும் அவருக்குப் புதியவர்கள். என்னை அவர் சில முறை பார்த்திருக்கிறார், இப்பொழுது என் பெயரும் அவருக்குத் தெரியும். ஆகவே, மகிழ்ச்சியோடு, ''என்னால் ஆஸ்பத்திரிக்கு வரமுடியவில்லை. நாங்கள் எல்லாம் அன்றாடக் கடமைகளுக்கு அடிமைகள். போகட்டும், நம் யசவந்தர் எப்படியிருக்கிறார்?'' என்று கேட்டார்.

நான் கைச் சைகையாலே ''போய்விட்டார்'' என்று குறிப்பிட்டு, ''இந்த நண்பரின் உதவியால் ஈமச் சடங்குகளையும் முடித்துவிட்டு, தாதரிலிருந்து இப்போதுதான் திரும்பிவந்தோம்'' என்றேன். அவர், ''என்ன! போய்விட்டாரா!'' என்று கேட்டு உடனே தன் மனைவியைக் கூவி அழைத்து இந்தச் செய்தியைச் சொன்னார். அவருடைய குடும்பமே அங்கே வந்து கூடியது. கண்டிராக்டர் சோகம் நிறைந்த குரலில் ''உங்கள் பெயர்—கார்நாத் அல்லவா'' என்று கேட்டார்.

''ஏதோ ஒன்று.''

''இல்லை; சரியான பெயர் என்ன?''

''காரந்த.''

''இவர்?''

''என் நண்பர், மாதவராயர்.''

''காரந்தரே, நீங்கள் இங்கே ஆண்டுக்கு இரண்டொரு முறை வந்துகொண்டிருந்ததால் உங்களை எனக்கு நினைவிருக்கிறது. உங்களுக்கு அவரை நன்றாகத் தெரிந்திருக்கும். உங்களுக்கு மிகவும் நெருங்கியவரல்லவா? நானும் அவருக்கு நெருக்கமானவன்; நாங்கள் இருவரும் ஒரே நேரத்தில் இந்த வீட்டுக்கு வந்தவர்கள். அப்பொழுது போர் நடந்துகொண்டிருந்தது. அதனாலேயே இந்த வீடு மிகவும் எளிதாக எங்களுக்கு வாடகைக்குக் கிடைத்தது. உங்கள் உறவினர் யசவந்தராயர், மிகவும் குறைவாகவே பேசுவார். என் குழந்தைகள் அவரைத்

''தாத்தா'' என்று அழைப்பார்கள். என் மனைவிக்கும் அவரிடம் மிகுந்த மரியாதையுண்டு; குழந்தைகளைவிட்டால் பெரியவர்களிடம் அவர் பேசுவது மிகவும் குறைவு. அவர் என் குழந்தைகள் தொந்தரவுபடுத்தியபோதெல்லாம் ஓவியம் வரைந்து கொடுப்பார்; கதைகளைச் சொல்வார். அவர் அப்படியொன்றும் சிறந்த ஓவியர் அல்ல. ஆனால், அது வேறு விஷயம் . . . ஆனால், அவர் ஒரு துறவி என்றே எனக்குத் தோன்றியது. அவர் எவ்வளவு தாராளமாகப் பழகினாரோ அந்த அளவுக்கு அவர் விலகியும் இருந்தார் என்றே சொல்லலாம். வயதை மட்டும் நினைத்து நான் இப்படிச் சொல்வதாக நினைக்காதீர்கள். அவருடைய அன்றாட வாழ்க்கையில், நடவடிக்கைகளில், எப்பொழுதும் சிந்தனை தங்கிய முகத்தில் ஏதோ ஒருவகையான அபூர்வமான களை காணப்பட்டது! ''உங்களுக்கு அப்படித் தோன்றவில்லையா?'' என்று கேட்டார்.

''உண்மை'' என்றேன் நான்.

''அவர் எப்போதாவது என்னுடன் பேசுவதுண்டு. ஆனால், அவை நிறுத்துப் பேசியது போன்று இருக்கும்! அந்தப் பேச்சு வாழ்க்கையின் அனுபவத்தையும் சுவைகளையும் எடுத்துக்கூறும். அற்பமான விஷயத்தைப்பற்றி அவர் பேசியதேயில்லை. உண்மையில் மிக உயர்ந்த வாழ்க்கை அவருடையது. ஆமாம், அவர் உங்களுக்கு என்னவாக வேண்டும் என்றீர்கள்?''

''இவ்வளவு விரைவில் அவர் நம்மிடமிருந்து போய்விடுவார் என்று நான் நினைக்கவேயில்லை. முந்தாநாள் கே. இ. எம்.-க்குப் போய் விசாரித்துக்கொண்டு வந்தேன். அது 'செரிபிரல் மலேரியா'வாக இருக்கலாம் என்றார்கள். அதுவுமன்றி நான் அழைத்துக்கொண்டுவந்த டாக்டர், பிழைப்பார் என்ற நம்பிக்கையை முதலிலிருந்தே கொடுக்கவில்லை . . . புண்ணியவசத்தால் அவருடைய மேசைமேல் Will you contact this friend for me என்று எழுதி வைத்த காகிதம் என் கண்களில் பட்டு, உங்களுக்குத் தந்தி கொடுத்தேன்.''

''மிகவும் உதவி செய்திருக்கிறீர்கள்.''

''எனக்கென்னவோ அவர் இல்லாத இந்த மாடி சூனியமாகத் தோன்றுகிறது. நான் வருந்திக் கவலைப்பட்டபோதெல்லாம், எனக்கு அறிவுரை கூறியிருக்கிறார்; ஊக்கமூட்டியிருக்கிறார். ஒரு முறை நான் பண நெருக்கடியிலிருந்ததை, எங்கள் பேச்சி

லிருந்தே தெரிந்துகொண்டு, தாமாகவே வந்து, 'என்ன வேண்டும் சொல்லுங்கள், கொஞ்ச நாளைக்காக நான் பணம் கொடுக்கிறேன்' என்றார். இதைக் கேட்டதும் நான் திகைத்தே போனேன். 'செக்' புத்தகத்தை எடுத்து ஆயிரம் ரூபாய்க்குச் 'செக்' எழுதிக்கொடுத்தார். அதுவரையில் அவரிடம் பணம் இருக்கும் என்றே நான் நினைக்கவில்லை. அவரை, சொந்தக்காரர்களைப்பற்றிக் கேட்டபோதும் அவர் ஏதும் சொன்னவரல்ல. அவருக்குச் சம்பாதிக்கிற வயதில் பிள்ளைகள் இருக்கவேண்டும், அவர்கள் தொலைவில் இருந்துகொண்டு, இவருடைய செலவுக்குப் பணம் அனுப்பிக்கொண்டிருக்கிறார்கள் என்றே நான் நினைத்திருந்தேன். அன்று என் மானத்தை இழக்கும் ஒரு நெருக்கடியில், நான் கேட்காமலேயே, அவ்வளவு பணம் கொடுத்து என்னைக் காப்பாற்றினார். நானும் விரைவிலேயே அதைத் திருப்பிக் கொடுத்துக் கடனிலிருந்து விடுதலை அடைந்தேன்.

''அவர், இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒரு முறை மகாபலேஸ்வரம், பூனா, போர்டி என்று போய்க்கொண்டிருந்தார் அல்லவா, ஓவியம் வரைவதற்காக! அந்தச் சமயங்களில் எங்களுக்கு இந்த வீடு வெறிச்சோடியதைப்போலக் காட்சி அளிக்கும். அவர் இங்கே குடியிருந்தது, ஒரு ரோஜாச்செடி பூவிட்டுச் சிவப்பை அள்ளி வீசியதைப்போலத் தோற்றம் அளித்துக்கொண்டிருந்தது.''

அவர் பேச்சை நிறுத்தினார், நான் மாதவராயரை நோக்கி, ''நீங்கள் இப்போது போய் வாருங்கள்'' என்று வற்புறுத்தி அனுப்பி வைத்தேன். கண்டிராக்டரும் தான் இப்போதே வருவதாகச் சொல்லித் தன் வீட்டுக்குப் போனார். அங்கேயும் அந்த ஆள் பேசிக்கொண்டிருந்தது யசவந்தராயரைப்பற்றியே தான். அவர் இறந்த செய்தி கேட்ட அவர் மனைவியும், இரண்டு சிறிய குழந்தைகளும் அழுதது எனக்குக் கேட்டது. எனக்கு இப்போது நான் எங்கேயிருக்கிறேன், ஏன் வந்தேன், இனி என்ன செய்யவேண்டும் என்ற எதுவுமே தோன்றாமல், அமர்ந்திருந்த நாற்காலியிலேயே தூங்கிப்போனேன். ஜாம்சேட்ஜி திரும்பி வந்து என் முன்னால் நின்றதுகூடத் தெரியவில்லை. அவர் வந்து ''உங்களுக்கு மிகவும் களைப்பாய் இருக்கும். படுத்துக்கொள்ளலாமே . . . ஆனால், உணவிற்கு என்ன செய்வீர்கள்? . . . 'தாதா,' அவர் நோய்வாய்ப்படுவதற்குச் சரியாக எட்டு நாட்களுக்கு முன்பே சண்டை போட்டுவிட்டுப் போய்விட்டான்.

ஐந்து ஆண்டுகள் அவருடைய நிழலைப்போல இருந்த அவன், ஒரு நாள் அவரிடம் கடன் கேட்டு, அவர் கொடுக்கவில்லை என்பதால், 'நீங்கள் சாகும்போது இதையெல்லாம் கொண்டுபோகப் போகிறீர்கள் அல்லவா?' என்று கேட்டு உமிழ்ந்து, திட்டிவிட்டுப் போனான். 'எவ்வளவு நன்றிகெட்டதனம்!' என்றே எனக்குத் தோன்றியது. சாப்பாடு போட்டு, துணிமணி எல்லாம் கொடுத்து, மாதம்தோறும் அவனுக்கு நாற்பதுக்கும் அதிகமான ரூபாய்களைச் சம்பளமாகக் கொடுத்திருக்கவேண்டும். அப்படியும் அவனுக்குத் திருப்தி ஏற்படவில்லை.

''அவன் கூச்சலைக் கேட்டு யசவந்தராயர் சொன்னாராம்— 'தாதா நான் சாகும்போது என்னவாகும் என்று எனக்குத் தெரியாது. பணத்தை மட்டுமல்ல, என் பிணத்தையும்கூட விட்டுவிட்டுத்தான் போவேன் . . . ஆனால், அப்படிப்பட்ட பேச்சு உன்னைப் போன்றவன் வாயிலிருந்து வந்திருக்கக்கூடாது. நீ அன்றொரு நாள் மேசைமேல் வைத்திருந்த நூற்றுச் சில்லரை ரூபாய்களை எடுத்துக்கொண்டு, 'நான் எடுக்கவே இல்லை' என்று ஏதேதோ ஆணையிட்டுக் கூறினாய். அன்று முதலே நீ ஒரு மனிதனல்ல என்பதாக நான் முடிவு செய்தேன். அன்று முதல் நீ சுட்டுத் தந்த ரொட்டி என் தொண்டைக்குள் இறங்கவில்லை. என்றாலும் நானாக உன்னைப் போ என்று சொல்லவில்லை. இப்போது அந்த நேரம் வந்துவிட்டது. போ' என்று சொல்லி அனுப்பிவைத்தார். அவனை அனுப்பும்போது அவருக்கே துக்கம் தாங்க முடியாமல் 'தாதா, தாதா! பணம் வரும், போகும். நான் எவ்வளவோ சம்பாதித்திருக்கிறேன், இழந்துமிருக்கிறேன். ஆனால், இழந்துவிட்ட நம்பிக்கையை மீண்டும் சம்பாதிப்பது கஷ்டம்' என்றார். தாதா வெறிபிடித்தவனைப்போல, 'உங்கள் நம்பிக்கை யாருக்கு வேண்டும்? இந்தக் கிழவனுக்குப் பணக் கொழுப்பு' என்றெல்லாம் திட்டத் தொடங்கினான். அப்போது என் மனைவி இங்கே வந்து, தாதாவைக் கடிந்து வெளியே அனுப்பினாள். அதன் பிறகு அவரே ஸ்டவ் பற்றவைத்து டீ, டோஸ்ட் செய்துகொண்டு நாளைக் கழித்தார்.''

இவ்வாறு ஜாம்சேட்ஜி சொல்லிக்கொண்டிருக்கும்போது அவருடைய மனைவி தன் மக்களிடம் எனக்காகச் சிறிது பால், ரொட்டி, பழம், வெண்ணெய் ஆகியவற்றைக் கொடுத்தனுப்பினாள். அந்த நேரத்திற்கு என் கண்ணெதிரில் யசவந்தரே உயிருடன் வந்து நின்றதைப் போலிருந்தது; கண்டிராக்டர் என்

நிலைமையைப் பார்த்து, ''கொஞ்சமாவது சாப்பிடுங்கள்'' என்றார். நான் ''வேண்டாம்'' என்றேன். எனக்கு எதுவும் பிடிக்கவில்லை.

''காலையிலிருந்து எதுவுமே சாப்பிட்டிருக்கமாட்டீர்கள் நீங்கள் . . .''

''நேற்றிலிருந்தே . . .''

''அப்படியானால், நீங்கள் இதை எடுத்துக்கொண்டே ஆக வேண்டும். உங்கள் உறவினருடைய நினைவு வந்து துன்பப்படுத்துவது இயல்பே. ஆனால், யாரேனும் சாவிலிருந்து தப்பியதுண்டா?''

''நான் அதற்காக வருந்தவில்லை. ஒரு மாதத்திற்கு முன்பு 'நீங்கள் எப்போது திரும்பவும் வருவீர்கள்?' என்று அவர் என்னைக் கேட்டிருந்தார். நான் அப்போதே வந்திருக்கவேண்டும். அவரிடமிருந்து தெரிந்துகொள்ளவேண்டியவை எவ்வளவோ இருந்தன.''

''உண்மை. அவர் மிகவும் பெரியவர், ஆனால், பாருங்கள், பத்துக்கு ஒன்று அல்லது இரண்டு சொற்களிலேயே அவர் பதில் அளிப்பார். நான் இவ்வளவு அருகிலிருந்தும் என்னால் அவருடன் தாராளமாகப் பேசமுடியவில்லை . . . அது இருக்கட்டும், உங்களுக்கு அவர் என்ன உறவு?''

அந்தக் கேள்விக்கு அப்போதே விடையளிக்கும் உறுதி எனக்கு இல்லை. அவருடைய நண்பன் என்று கூறியிருக்கலாம். கூறியிருந்தால் அவருடைய சொத்துக்களை நான் தொடமுடியாது. அவை எனக்குத் தேவையும் இல்லை. ஆயினும், அவர் என்னை வரும்படி கடிதம் எழுதியது ஏன் என்பதைத் தெரிந்துகொள்வதற்காகவாவது முயலவேண்டாமா? அவருடைய கடிதங்கள் முதலியவற்றிலிருந்து அவருடைய உறவினர்களில் யார் உயிருடன் இருக்கிறார்கள், எங்கேயிருக்கிறார்கள் என்று தெரிந்துகொண்டு, அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டாமா? இதனாலேயே நான் ஜாம் சேட்ஜி கேள்விக்கு விடையளிக்கத் தயங்கினேன்.

நான் விடையளிக்கத் தாமதம் ஆவதைக் கண்டு, அவரே ''உங்களுக்கு அவர் தூரத்து உறவோ, என்னவோ'' என்றார்.

''ஆம்,'' என்றேன். அதே நேரத்திற்குக் களைப்பு மிகுதியால் எனக்குத் தூக்கம் வந்தது. அதைக் கண்டு கண்டிராக்டர் ''முதலில் சிற்றுண்டியை முடியுங்கள்'' என்று வற்புறுத்தினார்.

நான் எதைத் தின்றேன், எதை விட்டேன் என்பதொன்றும் தெரியவில்லை. களைப்பு, தூக்கம், நண்பரைப்பற்றிய கனவு— இவையெல்லாம் ஒன்ருகக் கலந்ததுபோல் தோன்றியது. கண்டி ராக்டர் கொடுத்தவற்றில் சிறிது பாலைக் குடித்தேன் என்று நினைக்கிறேன். அவர் புறப்பட்டுப் போன பிறகு கதவைத் தாழிட்டேன். விளக்கை அணைத்தேன். பக்கத்திலிருந்த ஒரு பழைய சோபாவின்மேல் காலை நீட்டிச் சாய்ந்தேன். இரவெல் லாம் ஒரே கனவு. நான் உடல்நலம் குன்றிப் படுத்திருந்தது போலவும், யசவந்தராயர் தமது கையை என் நெற்றியின்மேல் இட்டுக்கொண்டு, என் பக்கத்தில் உட்கார்ந்திருந்ததைப்போல வும் தோன்றியது. நான், ''சாவு அச்சத்தைத் தருகின்றது'' என்றேன். அவர், ''அச்சம் ஏன்? இங்கே வேலை முடிந்துவிட்ட தல்லவா? நீ வந்த வேலை முடிந்தது. முடிந்ததற்கு நீ மகிழ வேண்டும்'' என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே, ''நாளை என்ன ஆகும்?'' என்று அவரைக் கேட்டேன்.

''நாளைய வேலையைத் தொடர்ந்து செய்வது மற்றவர்களின் பொறுப்பு.''

''நான் என்ன ஆவேன்?''

''நீ இல்லை யாவாய்.''

''மறுபடியும் பிறவியா?''

''யாருக்குத் தெரியும்?''

''இல்லையா?''

''அது உனக்கேன்? நீ இன்றைய தினத்தைச் சேர்ந்தவன். நேற்றையவனுமல்ல; நாளையவனுமல்ல.'' அதற்குள் எனக்கு உறக்கம் வந்திருக்கவேண்டும். காலையில் சாளரத்தின் வழியே வெயில் மேலே பட்ட பிறகே எழுந்தேன். உடல் களைப்பெல்லாம் மறைந்துவிட்டிருந்தது. எனக்குப் புது வாழ்வு வந்ததுபோல் இருந்தது. யசவந்தராயரை நினைத்து, அவருடைய மறைவுக் காக வருந்திய வருத்தம்கூடக் கழிந்துவிட்டதைப்போலத் தோன்றியது. நாம் ஒரு நாடகத்தைப் பார்க்கிறோம்; அதைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது நாமும் உணர்ச்சி மிக, நடிகர்க ளோடு கலந்து அதில் பங்கு பெறுவதுபோலத் தோன்றும். நாடகம் முடிந்து வீட்டுக்குப் புறப்படும்பொழுது மிஞ்சுவது நினைவு மட்டுமே. அந்த நினைவு இனிமையாகவோ, கசப்பாகவோ இருக்கின்ற அளவுக்கு அது தொடர்ந்து நிற்கின்றது.

யசவந்தராயருடைய நினைவு எனக்கு மிகவும் விருப்பமானது; இனிமையானது; அந்த அனுபவம் மறக்கமுடியாதது. என்னுடைய சொந்த உபயோகத்திற்காக அவர் இனிக் கிடைக்கமாட்டார். ஆனால், அவர் என் வாழ்க்கையில் பொறித்துச் சென்ற நினைவு என்றென்றும் என் கைக்கு எட்டக்கூடியது. அதை நான் இருத்திக்கொள்ளலாம் அல்லது மறந்தும்விடலாம். ஒரு மனிதனின் அடையாளம் நீடிப்பதோ அல்லது அழிவதோ அவனுடைய வாழ்க்கையினால்தான். அந்த வாழ்க்கை நம்முடைய நினைவுகளுக்கு உயிர் ஊட்டி, நம் வாழ்க்கையின் மூலம் அழியாது நின்று, கலந்து தொடர்ந்தால், அதுவே மறுபிறப்பாகும் என்று எனக்குப் பட்டது.

நான் யசவந்தராயரைப் பலமுறை கண்டிருக்கின்றேன். இப்பொழுது அவர் விட்டுச் சென்றுள்ள காலடிகளின் குறிகளைக் காண்பதற்கு வந்திருக்கிறேன். அவரை நான் உண்மையிலேயே நன்றாகத் தெரிந்துகொண்டிருந்தால், அவருடைய காலடிகளின் குறியே அவர் வாழ்க்கை நடத்திய முறையை எனக்குக் காட்டித் தரும்—என்றெல்லாம் நினைத்தேன்.

எழுந்து உடம்பை முறித்து முகத்தைக் கழுவிக்கொண்டு வந்து, கண்ணாடியெதிரில் நின்று முகத்தை வழித்துக்கொண்டே எதிர்ச் சுவரைப் பார்த்தேன். அந்தக் கண்ணாடியின் இரண்டு புறங்களிலும் பத்துப் பன்னிரண்டு ஓவியங்கள் தொங்கிக்கொண்டிருந்தன. யசவந்தராயரே எழுதிய ஓவியங்கள் அவை. அவர் ஓவியம் தீட்டுவதைக் கற்றுவந்தார். ஓவியக்கலை பயிலாமல், அதனுடைய நுணுக்கங்களை அறிந்துகொள்ளாமல், தமது பொழுதைப் போக்குவதற்காக அதை ஒரு பொழுதுபோக்காக அவர் வைத்திருந்தார். அந்த ஓவியங்களை நான் முன்பே எத்தனையோ முறை கண்டிருக்கின்றேன். அவை என்னைக் கவரவில்லை. அவர் ஓவியக் கலைஞர் என்ற தகுதியைப் பெறத்தக்கவரல்லர். அதனால் என்ன, தமது மனத்தில் தோன்றிய உருவங்களுக்கு வண்ணம் தீட்டி எழுதவில்லை என்று தோன்றியது. அதனால் எந்தவிதமான தொல்லையுமில்லையல்லவா—என்று நினைத்துக்கொண்டிருந்தேன்.

இந்தத் தடவை அதே ஓவியங்களைப் பார்க்கும்போது, அவற்றில் நுணுக்கம் ஏதும் தெரியாவிட்டாலும், யசவந்தராயர் இவற்றையெல்லாம் வெறும் பொழுதுபோக்கிற்காக மட்டுமே எழுதவில்லை என்று தோன்றியது. ஓவியக்கலை அவருடைய

மொழியாகவில்லை என்பது உண்மை. மொழி தெரியாத ஒருவன் வேற்று நாட்டுக்குச் சென்றால் கை, வாய் முதலியவற்றின் குறிப்பினால், தனக்கே உரிய முறையில், 'நான் இன்ன இடத்துக்குப் போகவேண்டும், வழிகாட்டுங்கள்' என்று சொல்வதற்கு முயலக் கூடாது என்பதுண்டோ?

அப்படியானால் இவர் தமது ஓவியங்களில் எதை எடுத்துச் சொல்ல முயன்றார் என்பதை அறியும் ஆவல் ஏற்பட்டது. அரை மணி நேரம் கழிந்த பின்பும் அவை ஓவியங்களாகவும் தோன்றவில்லை; எந்தப் பொருளையும் எடுத்துக் கூறவுமில்லை.

அப்படியானால், விரைவாக ஏதேனும் ஒரு சிற்றுண்டிச் சாலைக்குச் சென்று, சிற்றுண்டியை முடித்துக்கொண்டு அவருடைய சொத்து விவரங்களை அறிய முயல்வேன்; முடிந்த அளவு விரைவிலேயே சொந்த ஊருக்குத் திரும்புவேன் என்ற முடிவுக்கு வந்தேன்.

## இரண்டாம் அத்தியாயம்

அன்று காலையில், நான் எதிர்பாராதிருந்தும்கூட எனது நண்பராகிய மாதவராயர் தமது வேலையிலிருந்து விடுப்புப் பெற்றுக்கொண்டு நான் இருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தார்; தம்மால் முடிந்த உதவியைச் செய்வதற்காகவே அவர் வந்தார். குருடனுக்குக் குருடன் துணை ஆனதுபோல, நாங்கள் இருந்தோம். அடுத்த வீட்டு ஜாம்சேட்ஜி காலையிலேயே வந்து தம் முகத்தைக் காட்டி, வணக்கம் சொல்லிவிட்டுப் போய்விட்டார். நாங்கள் இருவரும் கதவைத் தாழிட்டுக்கொண்டு, அடுத்து என்ன செய்வது என்று சிந்திக்கத் தொடங்கினோம். முதலில் நண்பர் மாதவராயருக்கு, யசவந்தராயருக்கும் எனக்கும் இருந்த அறிமுகத்தை எடுத்துச் சொன்னேன். ''அவர் என்னிடமிருந்து பெற விரும்பியது என்ன உதவி அல்லது வேலை என்பதே தெரியவில்லை'' என்பதையும் குறிப்பிட்டேன்.

''அவையெல்லாம் அவருடைய குறிப்புகளையும், கடிதங்களையும் பார்த்த பிறகு தெரியவரும்'' என்று மாதவராயர், யோசனை கூறினார். அதையொட்டி அந்த வேலையைத் தொடங்கினோம். அந்த அறையிலிருந்த பெட்டிகளில் புத்தகங்கள் நிரம்பி யிருந்தன. அவற்றின் இடையில் ஒழுங்காக எழுதப்பட்டிருந்த இரண்டொரு கணக்குப் புத்தகங்களும் இருந்தன. 'பாங்க்' பாஸ் புத்தகமும் இருந்தது. சரியாக ஐந்து நாட்களுக்கு முன்பே ரூபாய் 15,000 அவர் பாங்கியிலிருந்து பெற்றிருந்தார் என்று தெரியவந்தது. அதன் பிறகு அவர் கணக்கில் பாங்கில் இருந்த தொகை ரூபாய் 1,500 மட்டுமே. இப்படி பாங்கியிலிருந்து எடுத்த பணம் என்னவாகியிருக்கும்; அது அந்த அறையிலேயே இருக்கவேண்டும்; அவருடைய வேலையாளான தாதா, முன்பு நூறு ரூபாய்களைத் திருடியது போலவே இதையும் திருடிக் கொண்டு ஓடிப்போயிருப்பானோ? இப்படியும் ஓர் ஐயம் ஏற்பட்டது. ஐயம் என்ன? ஒரே அச்சம். உண்மையிலேயே அது களவாடப்பட்டிருந்தால், போலிசுக்குத் தெரிவிக்க வேண்டாமா? அதனுடைய முடிவு தெரியும் வரையில் நான் பம்பாயிலேயே இருந்துகொண்டு இந்த வேண்டாத விவகாரத்தில் திண்டாடவேண்டுமே! என்ற கவலையும் எழுந்தது. இந்தக் குழப்பத்தைத் தீர்த்துக்கொள்வதற்காக, அடுத்த வீட்டிலிருந்த கண்டிராக்டரின் மனைவியிடம் ''தாதா என்றைக்கு வேலையை விட்டுப் போனான்?'' என்று கேட்டுவிட்டு வந்தேன். இவ்வளவு பணத்தை அவர் பாங்கியிலிருந்து எடுத்து வருவதற்கு முன்பே அவன் வேலையை விட்டுப்போனான் என்பது தெரியவந்தது. என்றாலும் என் ஐயம் தீரவில்லை. அதன் பிறகு அவன் இவர் இல்லாத நேரத்தில் திரும்பி வந்திருப்பானோ? பகைமை காரண மாக அவர் உண்ணும் உணவில் ஏதேனும் நஞ்சைக் கலந்திருக்க லாமோ? இப்படிப் பல்வேறு ஐயங்கள் தலையெடுத்தன.

பிறகு யசவந்தராயருக்கு யாருடனெல்லாம் கடிதப் போக்கு வரத்து இருந்தது என்று தேடினோம். பல்வேறு கடிதங்கள் கிடைத்தன. அவர் குறிப்பாக அவருக்கு வந்த கடிதங்களைச் சேர்த்து வைத்துக்கொள்ளவில்லை. அவர் எனக்கு ஏதோ எழுதிவைத்திருப்பதாகத் தெரிவித்திருந்தாலும் எனக்கு அது கிடைக்கவில்லை. அறையில் அதுபற்றிய குறிப்புகளும் இல்லை. அங்கிருந்த காகிதக் குறிப்புகள், கடிதங்கள் புத்தகங்கள் எல்லா வற்றையும் அலசிப் பார்த்துக் களைப்படைந்துவிட்டோம்.

கடைசியாக ஒரு யோசனை தோன்றியது. சுவரில் தொங்கிக் கொண்டிருந்த அவருடைய சட்டையை எடுத்து, பைகளை ஆராய்ந்தேன். அதில் 'செக்' புத்தகம் கிடைத்தது. அதன் நடுவே தபால் ரசீது ஒன்று இருந்தது. அதைப் பார்த்தபிறகு அவர் ஏதோ ஒன்றை 'ரெஜிஸ்டர்' மூலம் அனுப்பியிருந்தார் என்று தெரியவந்தது. அதைத்தவிர அவருடைய ''பர்ஸி''ல் ரூபாய் 150-ம் ரொக்கமாக இருந்தது. பாங்கியிலிருந்து எடுத்துவந்த அந்தப் பெரும் தொகையை அவர் என்ன செய்திருப்பார் என்று என்னால் யூகித்துப் பார்க்கமுடியவில்லை. அவருடைய பணம் களவாடப்பட்டிருந்தால் 'பர்ஸி'ல் 150 ரூபாய் இருந்திருக்காது. நான் எங்கள் ஊருக்குப் போய் அவர் எனக்கு அனுப்பியது என்ன என்பதைத் தெரிந்துகொள்ளும் வரையில், வேலையாளான தாதாவின்மீது ஐயம்கொள்வது நியாயமாகாது.

சும்மா யோசனை செய்துகொண்டே உட்கார்ந்திருந்தால் வழியேதும் புலப்படுவதாய் இல்லை. நாங்கள் இருவருமாக அங்கிருந்த எல்லாப் பொருட்களையும் ஒன்றாகச் சேர்த்தோம். ஓவியங்களையெல்லாம் ஒருங்கே சேர்த்து ஒரு பெட்டியில் நிரப்பினோம். அவர் படித்துவந்த புத்தகங்களைப் பார்த்தோம். பெரும்பாலானவை, சமயம், அறம், நீதி முதலியவற்றுடன் தொடர்பு உள்ளவை. எல்லாவற்றையும் படித்து, அங்கங்கே சிவப்பு, நீலப் பென்சில்களால் கோடிட்டு இடையிடையே கேள்விக் குறிகளையும், வியப்புக் குறிகளையும் போட்டிருந்தார். அந்த நேரத்தில் என் நண்பருடைய ஆர்வத்தைப் பெருக்கிய செய்திகள் என்னவாக இருக்கும் என்பதை அறிந்துகொள்ள நான் முயலவில்லை. என் மனம், நண்பரின் மறைவினாலும், பணம் காணாமற்போன கவலையினாலும் மிகவும் நொந்து போயிருந்தது. அங்கிருந்த பொருட்களையெல்லாம் ஒழுங்காகக் கட்டிவைத்த பிறகு நாங்கள் அவருடைய பெட்டிகளில் கிடைத்த கையெழுத்துக் குறிப்புக்களையும், கடிதங்களையும் முதலிலிருந்து படிக்கத் தொடங்கினோம். அவற்றில் யாருடைய முகவரி காணப்பட்டாலும் நாங்கள் மகிழ்ச்சியடைந்தோம். யசவந்தராயருக்கு அவர்கள் எந்த வகையில் உறவு என்று சிந்திக்கத் தொடங்கினோம். அவரிடம் பண உதவி கேட்டு வேண்டியவர்கள் உண்டு. இவர் செய்த உதவிக்காக நன்றி தெரிவித்தவர்கள் உண்டு. கடிதம் எழுதியவர்கள் ஏதேதோ ஊர்களில் இருந்தார்கள்.

அவ்வப்போது அவர் பாங்கியிலிருந்து பணத்தை யெடுத்துப் பலருக்கும் அனுப்பினார் என்பது தெரியவந்தது. சிலருக்கு ஐந்தாறு மாதங்களுக்கு ஒரு முறை பணம் அனுப்பி வந்ததாகத் தெரிந்தது. இவையெல்லாம் சேர்ந்து அவருடைய வருவாயில் பெருமளவு பணத்தைக் கரைத்துவிட்டது. பிறகும் 15,000, 1,500, 150 ரூபாய்கள் எஞ்சியிருந்தன என்பதும் தெரிந்தது.

அங்கே கிடைத்த கடிதங்கள், குறிப்புக்கள் முதலியவற்றில் காணப்பட்ட முகவரிகளின் பட்டியல் ஒன்றைத் தயாரித்தேன். எத்தனையோ கடிதங்களின்மீது அவர் சிலவற்றைக் குறித்திருந் தார். ''தக்கவன் அல்ல'' ''தானத்துக்கும் தகுதி வேண்டாமா?'' ''பணம் கேட்பது எத்தனையாவது முறை?'' ''உன் காலின் மேலேயே நீ நிற்பது எப்போது?'' முதலான பல்வேறு வாசகங் களைக் கடிதங்களின்மேல் குறித்திருந்தார். அவர் குடியிருந்த வீட்டுக்காரனைச் சந்திக்கும் எண்ணத்தோடு எழுதிவைத்த கணக்குகளைப் பார்த்தோம். அந்த ஆண்டு முழுவதற்குமாக வாடகை கொடுத்துவிட்டிருந்தார். ஆனால், அதுவரையில் அந்த ஆண்டில் கழிந்தது மூன்று மாதம் மட்டுமே. இன்னும் ஒன்பது மாத வாடகை முன் பணமாகத் தங்கியிருந்தது. ஓரிரண்டு நாட்கள் எனக்கும் அந்த நண்பருக்கும் இதே வேலையாயிருந்தது. நானும் இதற்குள் என் வீட்டுக்கு ஒரு தந்தி கொடுத்தேன். பம்பாயிலிருந்து ''ரிஜிஸ்டர்'' கடிதமோ வேறு வகையான கடிதமோ வந்திருந்தால் அந்தச் செய்தியை உடனே தந்தி மூலம் தெரிவிக்குமாறு குறிப்பிட்டிருந்தேன். அந்தச் செய்தி வரும் வரையில் அடுத்த வீட்டு ஜாம்சேட்ஜி தம்பதிகளிடம் என் நண்பரின் அன்றாட வாழ்க்கையைப்பற்றிப் பேசிக்கொண் டிருந்ததே என் வேலை. இடையில் ஓய்வு கிடைத்தபோதெல்லாம் மாதவராயரின் வீட்டுக்குப் போய் மேலே என்ன செய்யலாம் என்பதைப்பற்றி அவருடன் கலந்து கொள்வேன். அவர் வீட்டி லேயே உண்டுவிட்டு யசவந்தராயர் வீட்டுக்குத் திரும்பிவந்து சோபாவின்மேல் படுத்துப் புரளுவேன். சலிப்பாகத் தோன்றும் பொழுது, படிப்பதற்குப் பொறுமையில்லாததால், அவருடைய பெட்டிகளைத் திறந்து அவர் தீட்டிய ஓவியங்களைப் பார்ப்பேன். அவர் தொழில் முறை ஓவியர் அல்ல என்பதை முன்பே சொல்லி யிருக்கிறேன். ஓவியத்திற்கென கான்வாஸ், ஆயில் கலர் முதலிய விலையுயர்ந்த பொருட்களை அவர் பயன்படுத்தியதில்லை. பென்சில், கிரியோன், பேஸ்டல், வாட்டர் கலர் முதலியவற்றைக்

கொண்டே அவர் ஓவியம் வரைந்துவந்தார். அவர் எழுதாத விஷயங்கள் இல்லை. அவருடைய ஆர்வத்தைக் கிளறாத விஷயங்களும் இல்லை. அத்தகைய நூற்றுக்கணக்கான காகிதத் துண்டுகளில் பத்துப் பன்னிரண்டு ஓவியங்கள் மட்டுமே ஏதோ காரணத்தால் என்னைக் கவர்ந்தன. அழகினாலோ, வர்ணக் கலவையினாலோ அல்ல, அவற்றில் நிரம்பியிருந்த ஓவியனின் இயல்பான உணர்ச்சிப் பெருக்கே என்னைக் கவர்ந்தது. எந்த நுணுக்கமும் இல்லாமல், வர்ணங்களும் நன்றாக இணைந்து நில்லாமல் இருந்த அந்த ஓவியங்களின் பின்னணி என்ன என்பதைச் சிறிதுகூட அறியாத நான்—ஓவியத்தைப்பற்றிச் சாதாரணமாகவே அறிந்திருந்த நான்—அவற்றைப் புரிந்துகொள்வது எளிதாக இல்லை. அவ்வளவு ஓவியங்களில் சிலவற்றில் மட்டுமே 'யசவந்த்' என்று தம்முடைய பெயரை எழுதியிருந்தார். சித்திரங்களில் எழுதிய பொருளைப் பற்றியும் குறித்திருந்தார். அத்தகையவற்றைத் தேடியெடுத்து, தனியாகக் கட்டி வைத்தேன்.

நான் பம்பாய்க்கு வந்த ஆறாம் நாளோ, ஏழாம் நாளோ draft, will, manuscripts received என்னும் தந்தி என் மனைவியிடமிருந்து வந்தது. அது என்னுடைய வியப்பை மேலும் மிகுதியாக்கியது. என்ன உயில்? பணத்தை எனக்கு அனுப்பவேண்டிய காரணமென்ன? யசவந்தராயர், தற்செயலாக அறிமுகமான என்னிடம் அவ்வளவு நம்பிக்கைவைத்து அனுப்புவதற்கு என்ன காரணம்? ஒன்றுமே எனக்குத் தெரியவில்லை. அவரிடமிருந்து பணம் களவாடப்படவில்லை. அதுவே ஓர் அமைதியை தந்தது. அதை நான் யாரிடம் சேர்ப்பிக்கவேண்டும் என்பது ஊருக்குப் போனால் தெரியவரும்; இது மட்டுமின்றி எனக்கு வியப்பளித்த மற்றொன்று—யசவந்தராயருக்குத் தாம் அவ்வளவு விரைவில் சாகப்போகிறோம் என்ற எச்சரிக்கை எப்படி ஏற்பட்டது? என்னை வருமாறு கூறி அவர் எழுதிய கடிதத்திலும் அப்படியொரு குறிப்பு இருந்தது. இப்போது அவர் செய்துவைத்துள்ள ஏற்பாடு தம் சுய நினைவுடனே செய்த ஏற்பாடாகும். தமது வாழ்க்கை யாத்திரை முடிந்தது என்பதைத் தெரிந்துகொண்டவரைப்போலவே அவர் இவற்றைச் செய்திருந்தார். அவருடைய மூளையில் 'மலேரியா' தாக்கியது என்பது தற்செயலாக ஏற்பட்டதொன்றாகும். அதனால் அவர் படுக்கையில் வீழ்ந்த பிறகு இவற்றையெல்லாம் செய்வது என்பது இயலாது. தானே பாங்கிற்குப் போயிருக்கமாட்டார், எனக்கு அவற்றை அனுப்பி

யிருக்கவும் மாட்டார். அல்லது அவருக்கு வந்த நோய் 'செரிபிரல் மலேரியா' என்று மருத்துவர் முடிவு செய்ததே தவருகவு மிருக்கலாம். அவருக்கு ஏதோ உடல் நலக்குறைவின் அறிகுறி காணப்பட்டிருக்க வேண்டும். இவ்வாறெல்லாம் ஏதேதோ எண்ணினேன். அதன் பிறகு அந்த வீட்டின் உரிமையாளனிடம் சென்று எல்லாவற்றையும் கூறிவிட்டு, அவருடைய சொத்துக் களுக்கு எல்லாம் நானே 'வாரிசு' என்னும் கற்பனையை வளர்த்துக்கொண்டு பம்பாயைவிட்டுப் புறப்பட்டேன். எங்கள் ஊரை அடைந்து, எனக்கு வந்த கடிதங்களையெல்லாம் பார்க்கும் வரையில் நான் நானுகவேயில்லை. ஒவ்வொரு கணமும் மனத் திலேயே யசவந்தராயரின் வாழ்க்கைச் சித்திரத்தை எப்படி யெப்படியோ தீட்டிக்கொண்டு, அவர் என்மீது சுமத்தி இருக்கும் பொறுப்பு எப்படிப்பட்டதாய் இருக்கும் என்பதை ஊகித்துக் கொண்டே, பம்பாயிலிருந்து மங்களூருக்குப் புறப்பட விருந்த கப்பல் ஒன்றில் ஏறி உட்கார்ந்தேன். 500 பேர் அமர்ந்திருந்த அந்தக் கப்பலில் நான் மட்டுமே தனித்துக் காணப்பட்டேன். நீலக்கடலில் மிதந்துகொண்டிருந்த அந்தக் கப்பல் எப்படித் தனியே இருந்ததோ, அதேபோல அந்தக் கப்பலில் இருந்த மக்கள் கடலில் நானும் தனித்திருந்தேன். இப்படியே இரண்டு நாட்கள் கழிந்தன. மூன்ரும் நாள் கப்பல் மங்களூர் துறை முகத்தை அடைந்தது. அங்கிருந்து இரண்டு மணிநேரப் பயணம் எங்கள் ஊருக்கு. மிக விரைவாக, கொண்டுவந்த எல்லாச் சாமான்களையும், பெட்டிகளையும் ஆட்கள்மேல் ஏற்றிக்கொண்டு வந்து வீட்டுத் திண்ணையின்மேல் இறக்கி, உட்காரும் வரையில் வழிகெட்டு அலையும் மனிதனைப்போல நான் இருந்தேன். யசவந்தராயரைத் தவிர வேறு எதுவுமே என் கண்ணுக்குப் புலப்படவில்லை.

வந்து குளித்து, உண்டு, இளைப்பாறி, அதன் பிறகு என்னை எதிர்பார்த்துக் காத்திருந்த கடிதங்களைப் பார்வையிட்டேன். யசவந்தராயர் அனுப்பிவைத்திருந்த கடிதம், பத்திரங்கள் அடங் கிய அந்தப் பை அவ்வளவு பெரிதாக இல்லை. அவருடைய நாட் குறிப்பு என்று சொல்லத் தகுந்த ஒரு சாதாரணக் குறிப்பேடு அதில் இருந்தது. அந்த நாட்குறிப்பில் அவர் தமக்கு எழுதத் தோன்றிய நாளில், உதித்த எண்ணங்களை, மனம் போன போக்கில் எழுதிவைத்திருந்தார். அந்தக் குறிப்பு மிகவும் பழையது. அதில் அவர் தமது நீண்ட வாழ்க்கையில் ஏற்பட்ட

அனுபவங்களை குறிக்கோள் ஏதுமில்லாமல் எழுதிவைத்ததுபோல இருந்தது. இவை யெல்லாம் ஓய்வாகப் படிக்கவேண்டியவை என்று எடுத்து வைத்தேன். மேலும் எனக்கு விரிவாக எழுதப் பட்ட கடிதம் ஒன்றும் அந்தப் பையிலிருந்தது. அதனுடன் தாம் பாங்கிலிருந்து எடுத்து வந்த 15,000 ரூபாய்க்குரிய 'டிராப்ட்' ஒன்றை அவர் இணைத்திருந்தார். அதைக் கண்ட பிறகு, தாதா வின்மீது நான் கொண்டிருந்த ஐயம் ஆதாரமற்றது என்பது தெளிவாயிற்று. அவர் தொலைவிலிருந்த என்னை நம்பி அதை ஏன் அனுப்பவேண்டும்? அந்தப் பொறுப்பை நான் எப்படி நிறை வேற்றுவேன்? இந்தக் கேள்விகளுக்கு அவருடைய கடிதத்தைப் படித்த பிறகும் விடை தெரியாமல் போகலாம். கடிதத்தில் முதல் வாக்கியமே ''இதை உங்களுக்காக அனுப்பவில்லை. நான் நீண்ட நாட்கள் வாழமாட்டேன், என்னும் எண்ணம் உண்மையாகு மாளுல், நீங்கள், நானே என்னும் கருத்தில் செலவழிக்கவேண்டிய பணம் இது. உங்களுக்கும் அது கடினமானதாகத் தோன்றலாம். என்னுடைய அச்சம் பொய்த்துப்போளுல் அந்தப் பணத்தை என் பெயரிலேயே வைத்திருங்கள். என் அச்சம் உண்மையாகவும் மாறலாம். அப்போது நான் இருக்கமாட்டேன். பணம் ஏதாவது ஒரு நல்ல செயலுக்கு பயன்படும். நன்கொடைக்குரிய ஒரு நற்செயலோ, மனிதர்களோ இருக்கக்கூடும். உங்கள் விருப்பம் போலச் செலவிடுங்கள். அதில் சிறிது மட்டும் எடுத்து, நான் இதுவரையில், ஓரளவிற்கு ஆதரவு கொடுத்துவந்த மூன்று, நான்கு பேர்களுக்கு, அவர்கள் உயிரோடிருக்கும்வரையில், ஒவ் வொரு மாதமும் ரூ. 25 அனுப்பிவையுங்கள். வட்டியிலிருந்தோ அல்லது முதலிலிருந்தோ நீங்கள் இதைச் செய்யலாம். அவர் களுக்கு இந்த உதவி கிடைக்கட்டும்'' என்று அவர்களுடைய முகவரிகளைக் குறிப்பிட்டிருந்தார். கடிதத்தின் பிற்பகுதி மிகவும் நீண்டதாய் இருந்தது. அதன் சுருக்கத்தை மட்டும் இங்கே தருகின்றேன்:

* * * *

''எத்தனையோ நாட்களாக இவ்விஷயத்தைப்பற்றி உங்களுடன் பேசவேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆளுல் உங்களுக்கு ஏன் தொல்லை தரவேண்டும் என்று நினைத்து, நீங்கள் இங்கே வந்தபோதும் இதைப் பற்றி உங்களிடம் நான் பேசிய தில்லை. இரண்டு நாட்களுக்குமுன் திடீர் என்று என் மனத்தில்

நான் நெடுங்காலம் வாழமாட்டேன், நெடுங்காலமல்ல, நெடு நாட்கள் என்ற எண்ணம் தோன்றியது. வாழ்வே இன்னும் சில நாட்கள்தான் என்று எனக்குப் பட்டது. சாவைப் பற்றிய அச்சம் எனக்கு இல்லவே யில்லை. ஆனல் நான் வாழ்ந்து யாருக்கு என்ன பயன் ஏற்பட்டது—என்னும் மதிப்பீடு எனக்கு மிகவும் தொல்லை தந்தது. சுருக்கமாக, சில நாட்களாக என்னை வாட்டிவந்த ஒரே ஒரு சங்கதி என்னவென்றல்—வாழ்க்கைக் கணக்கேட்டில் நான் பெற்றதைவிடக் கொடுத்தது குறைவாக இருக்கக்கூடாது என்னும் எண்ணம்தான். இது வெறும் பணத்தைப் பற்றிய கணக்கு அல்ல. மனித வாழ்க்கையின் வரவு செலவு. மனிதன் சமுதாயத்துக்குக் கடன்பட்டவனுகப் பிறக்கிறன், அந்தக் கடனி லேயே வளர்கிறன். இறக்கும்போது தான் பெற்றதைவிட அதிக மாகத் திருப்பித் தராவிட்டால் அவனுடைய பிறவி பயனற்றதா கிறது. அவன் பிறந்ததால் சமுதாயத்திற்கு இழப்பே என்பது என் கருத்து. பணம், காசு முதலியவை யெல்லாம் இந்த நோக் கில் பார்த்தால் மிகவும் அற்பமானவை யாகும். ஆனல் அவை யும் வாழ்க்கையை நடத்துவதற்கு இன்றியமையாது வேண்டிய பொருள்கள் ஆகும்.

* * * *

"என்னுடைய இளமை வாழ்க்கை எல்லாபுர வட்டத்துக் கிரா மம் ஒன்றில் கழிந்தது. வளமான குடும்பத்திலே தான் பிறந்தேன்; படித்தேன்; வளர்ந்தேன். இளமையிலேயே பெரியவர்களின் சொத்துக்கு அதிகாரியானேன். பிறருடைய துன்பத்தை என்னல் தாங்கமுடியாது, கண் கலங்குவேன். அந்தக் காலத்தில் கண்ணீர் விட்டவர்களுக்கெல்லாம், நான் பிடிப்பிடியாக வாரிக் கொடுத்த துண்டு. அப்போது என் மைத்துனன், மாமா முதலிய உறவினர் கள் என்னை எச்சரித்தார்கள். 'நீ பணத்தைப் பாழாக்குகிறய்' என்று கண்டித்தார்கள். நான் செல்வத்தை அழித்தது உண்மை. உலக அனுபவம் இல்லாமல், நாமாகத் தேடாத பணத்தை, மற்ற வர்களுக்கு வாரிக் கொடுப்பதற்கு நமக்கு அதிகாரமேது? பிறகு இந்த அறிவு எனக்கு வந்தது. இருந்ததையெல்லாம் இழந்து மற்றவர்களுடைய சிரிப்புக்கு இலக்கானபோது இந்த அனுபவ மேற்பட்டது. அதனல் ஏற்பட்ட மற்றெரு விளைவு—நான் யாரை யும் எந்த அளவுக்கும் நம்பக்கூடாது என்பதுதான். மனித இனத்தையே நம்பக்கூடாது என்ற அளவிற்கு மனம் கசந்து விட்டது.

''ஏறக்குறைய இருபத்தைந்து ஆண்டு வாழ்க்கை எந்தவிதமான சிந்தனையும் இல்லாமல் விளையாட்டிலேயே கழிந்தது என்று கூறுவதும் தவருகாது. அதற்குள் எனக்குத் திருமணமாகியது. நான் உண்மையிலேயே இல்லறத்தான் ஆகி, ஒரு குழந்தைக்குத் தந்தையும் ஆனேன். அப்போது என்னிடமிருந்ததெல்லாம் போய், கடன் தொல்லை ஏற்பட்டு மனக் கவலை மிகுந்தது. பூவில் தேன் இருக்கும் வரையில்தான் வண்டுக்குப் பூவின்மீது ஆசை என்னும் கசப்பான உண்மையை அறிந்து கொண்டேன். என்றாலும் நான் மனம் தளரவில்லை. முன்னோர்கள் தேடிவைத்த சொத்து இருந்தது. கடனுக்குள்ளான சொத்தும் இன்னும் எஞ்சியிருந்தது. எதுவுமே யில்லாமல், வெறும் கையோடு பிறந்து, வளர்ந்து, வாழ்க்கை வண்டியை நடத்துபவர்கள் இல்லையா என்று எண்ணினேன். அப்போது நானே என் வாழ்க்கைக் களத்தை மாற்றிக் கொண்டேன். என் மாமனார் வீட்டுக்கு அருகிலிருந்த 'குமட்டி' என்னும் ஊரில் சேர்ந்து வசிக்கத் தொடங்கினேன். மற்ெருரு வியாபாரியுடன் சேர்ந்து வாழ்க்கையின் புதிய அத்தியாயத்தைத் தொடங்கினேன். இந்த வாழ்க்கை, தொடக்கத்தில் மிகவும் துன்பந் தந்தாலும் என் உழைப்பின் பயனுகவும், ஒத்து வந்த வாய்ப்புக்களின் காரணமாகவும் மீண்டும் பணம் குவித்தேன். இழந்ததைவிட அதிகமாகச் சேர்த்தேன். ஆனல் அதனல் ஒரு தற்பெருமை எனக்கு ஏற்படவில்லை. அந்தப் பெருமை வெறும் பணத்தை மட்டும் ஒட்டிய பெருமை. நான் மனித இனத்தில் அவநம்பிக்கை, வெறுப்பு ஆகியவற்றைக் கொண்டிருந்ததால்தான், அவ்வளவு பணத்தைச் சேர்க்க முடிந்தது, என்றே நான் நினைத்தேன். செல்வம் இருக்கும் இடத்தில் பற்று, பேராசை, பொறாமை, வெறுப்பு எல்லாமே இருக்கின்றன. அதன் காரணமாகத்தான் என் மனைவி மக்கள் எல்லோரும் எனக்குப் பகைவர்களைப்போல் ஆனர்கள். நான் சிறிது கஞ்சத்தனமாக நடந்துகொண்டது என்னவோ உண்மை. ஆனல் அந்த வாழ்க்கை இனி முடியட்டும் என்று நினைத்து எனக்கு முன்னோர்களிடமிருந்து கிடைத்த செல்வத்தைவிடச் சிறிது அதிகமாகவே சேர்த்து மனைவி மக்களுக்கு வைத்துவிட்டு, நான் அந்த ஊரிலிருந்து தலைமறைவானேன். நீங்கள் என்னைப் பம்பாயில் பார்க்கும்பொழுது நான் ஒரு விசித்திரமானதொரு 'வானப்பிரஸ்த நிலை'யில் வாழ்ந்து வந்தேன். முற்காலத்தில் இல்லறத்தார்கள் வானப்பிரஸ்தத்திற்காகக் காட்டுக்குப் போவார்களாம். நான் அப்படி ஒரு காட்

டைத் தேடமுடியாமல் மக்கள் நெருக்கடி மிகுந்த காடாகிய பம்பாய்க்கு வந்து சேர்ந்தேன். அங்கே யாருக்கும் தெரியாமல் வாழ்ந்தேன். அடுத்த வீட்டு ஜாம்சேட்ஜி கண்டிராக்டர் குடும்பத்தைத் தவிர வேறு யாருடனும் நான் தொடர்பு வைத்துக் கொள்ளவில்லை. அந்தப் பார்சி குடும்பத்தாருடனும் நான் கொண்டிருந்த தொடர்பு அவ்வளவு நெருக்கமானதல்ல. அங்கிருந்தவர்களில் நான் மனம் விட்டுப் பேசியது என் வேலையாளாக இருந்த தாதாவிடத்தில் மட்டும்தான். தாதா வயிற்றுக்கில்லாமல் வந்து என்னிடம் வேலையாளாகச் சேர்ந்தவன். நாம் மனிதத் தொடர்பு வேண்டாமென்றாலும்கூட அது இல்லாமல் நம்மால் வாழமுடியாது. என் வயிற்றில் பிறந்த குழந்தைகளையே விட்டுப் பிரிந்து வந்த என் அன்பு, இந்த தாதாவின்மீது மிகுதியாக வளர்ந்தது. அதுவே என் பலவீனம் என்று அவன் மனத்தில் தோன்றி யிருக்கவேண்டும். வேலையாளாக வந்தவன் தாதா. தாதா என்ற என் அன்புக் குரலுக்கு உரியவனானாலும், வர வர என் அண்ணனைவிட அதிகமாக என்மீது அதிகாரம் செலுத்தினான். அது என்னுடைய பொறுமையின் எல்லையை மீறியதாக இருந்தது. நான் ஒரே நிமிடத்தில் அவனை வேலையிலிருந்து விலக்கியிருக்கலாம். ஆனால், மனம் கரைந்து நின்ற ஒரு நேரத்தில் 'நான் இருக்கும் வரையில் உன்னைக் காப்பாற்றுவேன்' என்று சொல்லிவிட்ட ஒரே காரணத்திற்காக நான் அப்படிச் செய்யவில்லை. அவன் என்னை வஞ்சிக்கத் தொடங்கினான்; நான் வைத்திருந்தபணத்தைத் திருடத்தொடங்கினான். அடுத்தவீட்டுக் குழந்தைகள்மீது சந்தேகம் ஏற்படும்படியும் செய்தான். கடைசியில் ஒருநாள் அவனாகவே, சண்டை போட்டுக் கொண்டு போய் விட்டான். இப்போதெல்லாம்—கடந்த ஓர் ஆண்டாக—என் உடல் வலிமை குறைந்து வருவதுபோல் தெரிகிறது. ஆனால் குமட்டியிலுள்ள நல்ல நிலையில் இருக்கக்கூடிய உறவினர்களிடம் திரும்பிச் செல்வதற்கு நான் விரும்பவில்லை. அவர்களைப் பற்றி எந்தவிதமான தகவலும் எனக்குத் தெரியாது.

''பூனாவிலிருந்து பம்பாய்க்கு நாம் இருவரும் சேர்ந்து பயணம் செய்த அந்த நாள் உங்களுக்கு நினைவிருக்கிறதா? அன்று முதலே நம் நட்பு பெருகி வந்துள்ளது. நீங்கள் என் வாழ்க்கையின் சுடர் ஆகத் தோன்றினீர்கள். ஏதோ ஒருவகையான உடன் பிறந்த பாசம் நம்மிடையே இருப்பதாக எனக்குப் படுகிறது . . . என்னுடைய தனி வாழ்க்கைக்கு இதுவரை பம்பாய் இடமளித்தது.

என்றாலும் இறுதி நாட்களுக்கு இது தகுந்த ஊர் அல்ல என்று தோன்றுகிறது. உங்கள் அருகிலிருந்தாலாவது என் வாழ்க்கைக் கதையை உங்களிடம் தெரிவிக்கலாமே என்று நினைக்கின்றேன். வாழ்க்கையில் எனக்கு ஏற்பட்ட சந்தேகச் சுமையை உங்கள் தலையில் சுமத்திவிட்டிருப்பேனோ என்னவோ? அதற்காகவே என்றைக்கு வருகிறீர்கள் என்று கேட்டு எழுதினேன். உங்கள் வரவை எதிர் பார்த்துக் காத்திருப்பேன். தாதா புறப்பட்டுப் போன பிறகு என்ன காரணத்தாலோ 'என் நாடகம் முடியும் காலம் வந்து விட்டது; விரைவில் திரை விழுந்துவிடும்' என்ற எண்ணம் தோன்றத் தொடங்கி யிருக்கிறது. அது விழாவிட்டால் நான் உங்கள் ஊருக்கு ஒருமுறை வரக்கூடும். திரை வீழ்ந்தால்? அப்போது என்னோடு என் நினைவுகளும் மறைந்துபோகும். அத்தகைய ஆயிரக்கணக்கான நினைவுகளில் ஏழெட்டாவது நல்லவையாக இருக்காதா? அவற்றை யாருக்காவது தெரிவிக்க வேண்டும் என்று பட்டதால் நான் எழுதியதை அனுப்பி வைக்கின்றேன்.

''இந்த இரண்டு நாட்களாக, நான் படுத்துக் கண்ணை மூடியதும், என்னை வளர்த்த தாயின் நினைவுமுகம் கண்முன்னால் தோன்றி, 'வா, குழந்தாய் இங்கே நாடகம் முடிந்துவிட்டதல்லவா! உன் வேலையை நீ முடித்துவிட்டாய்' என்று சொல்வது போலவும், என்னை அழைப்பது போலவும் தோன்றுகிறது. நாடகத்தில் வேடம் போடுபவன் ஏதோ ஒருநாள் முகச் சாயத்தைக் கழுவவே வேண்டும். தனது வேடத்தைக் கண்ட இடத்தில் கழற்றி எறியாமல் அடுத்து வருபவனுக்கு உதவும் வகையில் எடுத்துக் கொடுத்தல் வேண்டும். அவன் கடமை அது. நான் அனுப்பியிருப்பது அப்படிப்பட்ட வேடமே.''

* * * *

இது ஒரு விசித்திரமான கடிதம். விலை மதிப்பற்ற கருவூலம் என்றாலும் பொருந்தும். அதனுடன் வந்திருக்கும் ரூ. 15,000 'டிராப்ட்' அற்பமானதாகும். அந்தப் பணம் அவருடையது. அவருடைய விருப்பப்படியே செலவழிக்கவேண்டியது. பம்பாயிலிருந்து அவர் எங்கள் ஊருக்கு வந்திருந்தால் அந்தத் தொல்லை கூட எனக்கு இருந்திராது. அது அவருடைய சேமிப்புப் பணம். அதைப்பற்றிய சிந்தனையைக்கூட நான் விரைவில் மறந்துவிட்டேன். அவர் மிகவும் நம்பிக்கையோடு எனக்கு அனுப்பிவைத்த நாட்குறிப்பில், புதைந்துகிடக்கும் எண்ணக் குவியல்களை நான்

ஒவ்வொன்ருக ஊன்றிப் பார்க்கவேண்டும். அவருடைய அறையிலிருந்து நான் கொண்டுவந்துள்ள ஓவியங்களைப்போலவே அவற்றிற்கும் ஆழ்ந்த பகைப்புலன் ஒன்று உண்டு. அந்தப் பகைப் புலன்களைத் தெரிந்துகொள்ளவேண்டும். அவர் பிறந்த ஊர், வளர்ந்த வீடு, ஓதுக்கிய இல்லறம், மேற்கொண்ட வாழ்க்கை, அதில் உள்ள இனிய, கசப்பான கனிகள்—இவையெல்லாவற்றையும் தெரிந்துகொள்ளவேண்டும். இறுதிவரையில் அவர் பணி உதவி செய்துவந்த அந்தச் சிலர் எப்படிப்பட்டவர்கள் என்பதைப் போய்ப் பார்க்கவேண்டும். அவர் தெரிந்துகொண்ட வாழ்க்கை எப்படிப்பட்டது என்பதை நான் தெரிந்துகொண்டால் அவருடைய நினைவு எனக்கு பயன்பட்டதாகும்—அவரிடமிருந்து எனக்கு, என்னிடமிருந்து பிறர்க்கு. இந்த நினைவுகள் எல்லாம் பேச்சில் வெளிப்படுகின்றன. அவை வெறும் சொற்களின் கூட்டம், பொருள்களின் நிழலைத்தரும் வாக்கியங்களின் சேர்க்கை. ஆனல் அந்தச் சொற்கள் எல்லாவற்றையுமே எடுத்துக் கூறமாட்டா. உபநிடதத்து வாக்கியங்கள்போல, புத்தரைப் போன்றவர்கள் சொல்லிச் சென்ற சொற்களைப்போல, நமக்கெல்லாம் சமயத்தைப்பற்றிய அறிவு ஏற்பட்டிருக்கிறது அல்லது ஏற்படலாம் என்று பலரைப்போல நான் நினைத்தால் அந்த நினைவு என் அறியாமையே ஆகும்; முழு முட்டாள் தனமும் ஆகும். ஒரு சமுதாயம், ஒரு காலப்பகுதி, அந்தக் காலப் பகுதியின் நம்பிக்கை, அந்தச் சமுதாயத்தின் பல்வேறு சூழ்நிலைகள், அந்தச் சூழ்நிலையில் பங்குகொண்ட பல்வேறு வகையான மக்கள் கூட்டம்—எதையோ சொல்லவேண்டுமென்று தொடங்கி ஏதோ வெளிவருகிறது. அந்தக் காலம் கழிந்த பிறகு அந்தப் பகைப்புலனைத் தெரிந்துகொண்ட மனிதன் இறந்த பிறகு நமக்குத் தெரிவது வெறும் வாக்கியங்கள் மட்டும்தான். பல்வேறு பொருள்களைக் கொடுக்கக்கூடிய ஒவ்வொரு சொல்லையும் சேர்த்து வைத்ததைப்போன்ற வாக்கியங்களின் தொடர்ச்சி. அவற்றைப் பற்றி, புத்தர் இவ்வாறே சொன்ஞர், வால்மீகி ராமனை இப்படிச் சொல்லவைத்தார், கண்ணன் சொன்னது இதுதான் என்ற உறுதிப்பாடு ஏனே அறியேன். சொல்லியவர்களின் காலம் கழிந்து ஆயிரம், இரண்டாயிரம் ஆண்டுகள் கழிந்துவிட்டன. அந்தக் காலத்துப் பகைப்புலன் இப்பொழுது தேய்ந்துபோய் விட்டது. எடுத்தாலும் ஒவ்வொரு சொல்லும் முதன்முதல் தந்த பொருளை இழந்துவிட்டிருக்கவேண்டும். புதிய பொருளின் நிலையையும்

அது பெற்றிருக்காலம். இப்பொழுது உள்ள மொழியை அறிந்ததலேயே முதலில் வழங்கிய பொருள் உள்ளது உள்ளபடியே நமக்குப் புலப்படுமா?

யசவந்தராயருடைய நாட்குறிப்பின் தாள்களைப் புரட்டிப் பார்க்கும்பொழுது, ஆங்காங்கே குறிப்பிட்டிருந்த வாக்கியங்கள்கூடத் தகுந்த பகைப்புலன் இன்றி எனக்கு முழுப் பொருளையும் காட்டவில்லை. அவரே தீட்டிய பத்துப் பன்னிரண்டு ஓவியங்களை என் முன்னால் வைத்துக்கொண்டால் அவை எதையோ சொல்ல விரும்புகின்றன என்பதுபோலத் தோன்றியது. ஓவியம் என்பது காலம் என்னும் நெளிவுகள் அற்ற ஒரு பொம்மை. ஒரு கணத்தில் நிலைத்த உணர்ச்சியை எடுத்துக்காட்டுவது ஓவியம். அந்த ஓவியத்தில் இருக்கிறவன் யார், என்ன சூழ்நிலை என்பது தெரிந்தால் அதேபோன்ற உணர்ச்சியை அனுபவித்துள்ள ஒருவனுக்கு அந்த ஓவியம் பொருள் தரும். நான் சொல்லும் இவையெல்லாம் உங்களுக்கு வெறுப்பையும் ஊட்டலாம். எனக்குப் புலப்பட்ட முறையில், கதை வடிவத்தில் என்னால் இயன்றவரை, தொடர்ச்சியாக அவற்றைக் கோத்துச் சொல்லுகின்றேன். கதை தொடங்குவதற்கு முன்பு, எனக்கும் யசவந்தராயருக்கும் ஏற்பட்ட முதல் அறிமுகத்தின் பின்னணியை விளக்குகின்றேன்: இன்றைக்குச் சுமார் ஆறு ஆண்டுகட்கு முன்பு, நான் கோடைக் காலத்தில் தாரவாடவிலிருந்து இரயில் ஏறி பம்பாய்க்குப் போய்க்கொண்டிருந்தேன். முந்திய இரவெல்லாம் வண்டியில் உட்கார்ந்திருந்து காலையில் பூனாவுக்கு வந்து அங்கிருந்து வேறொரு வண்டியைப் பிடிக்கவேண்டியதாயிற்று. பம்பாய்க்குப் புறப்படவிருந்த வண்டியில் ஏறினேன். அது நீளமாயிருந்த ஒரு முதல் வகுப்புப் பெட்டி. நான் போவதற்குள்ளேயே அங்கே மக்களின் நெரிசல், சாமான்களின் அடைசல், வழி நெடுகிலும் நிரம்பியிருந்தன. என்னிடம் சாமான்கள் அதிகமாக இல்லை; வெறும் படுக்கை மட்டுமே. அதை எடுத்துக்கொண்டுவந்த கூலி ஒரு வழியில் நுழைந்தான். நான் மற்றொரு வழியில் ஏறினேன். ஒருவரை ஒருவர் தேடுவதிலேயே சிறிது நேரம் கழிந்தது. இடம் தேடி அமர்வதில் தாமதம் ஏற்பட்டது. சாளரத்தின் அருகே உட்கார்ந்து, வழியில் தென்படும் காட்சிகளைக் காணவேண்டும் என்னும் என் ஆசை நிறைவேறவில்லை. சிறிது தள்ளி உட்கார்ந்தேன். சாளரத்தை ஒட்டி ஒரு பெரியவர் இருந்தார். அவருடைய உடை, சாதாரணமாகவே இருந்தது. எங்கள் எதிரில்

'கறுப்புத் துரை'யின் குடும்பம் ஒன்று உட்கார்ந்திருந்தது. அவர்கள் கோவாவிலிருந்து வந்திருக்கவேண்டும். ஆனல் தாங்கள் நேராக இங்கிலாந்திலிருந்து வந்தவர்கள் என்ற எண்ணம் அவர்கள் மனத்தில் இருந்தது. என் பக்கத்தில் இருந்தவர்க்கு என்னை விடப் பத்து வயது அதிகமாக இருக்கலாம். என்னை அடுத்து இன்னெருவர் இருந்தார். அவரும் ஒரு துரையே. துரைமார் எல்லாம் பேச்சிலே ஒன்ருகக் கூடினர்கள்.

நான் காலைச் சிற்றுண்டி ஏதும் உட்கொள்ளவில்லை. காப்பி குடிக்கவேண்டும் என்ற வேட்கை எல்லைமீறி இருந்தது. அதற்காக இங்குமங்குமாக உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தேன். என் பக்கத்திலிருந்தவர் ''ஏதாவது சாமான் களவு போய்விட்டதா?'' என்று கேட்டார். அவரே யசவந்தராயர்; என்னைவிட வயதில் மூத்தவர் என்று குறிப்பிட்டதும் இவரைத்தான்.

''இல்லை; சிற்றுண்டி ஆகவில்லை; இரவிலும் சரியாகச் சாப்பிடவில்லை. அதனல் 'ரெஸ்டாரெண்ட்' ஆளுக்காகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்'' என்றேன்.

''அவன் வருவான். இப்போது வருவது அவன் கடமை'' என்ருர் அவர். வண்டி புறப்பட்டது. 'ரெஸ்டாரெண்ட்' ஆட்களும் பத்துப் பேரின் தேவைக்காக ஓடியாடத் தொடங்கினர்கள். நான் அண்டிக் கூப்பிட்டது அவர்கள் காதில் விழவேயில்லை. திரும்பிப் பார்க்கவுமில்லை. அதற்குக் காரணம் என் எளிய உடைதான். துரைகளின் கூட்டத்தில் நான் பிச்சைக்காரனைப்போல அவர்களுக்குத் தோற்றமளித்திருக்கவேண்டும். என்னுடைய புதிய நண்பர் ''பாய்'' என்று ஒருவனை அழைத்தார். ''இதோ வருகிறேன்'' என்று சொல்லிப்போன அந்த ஆள் வரவேயில்லை. அப்பொழுது அவர் என் பக்கம் திரும்பி ''உங்களுக்கு என்ன சிற்றுண்டி வேண்டும்?'' என்று கேட்டார். ''எதற்கும் 'பாய்' வரவேண்டுமல்லவா?'' என்றேன் நான். ''பரவாயில்லை. எனக்கும் சிற்றுண்டி வேண்டும். நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள்?''

''ஆள் வந்த பிறகு...''

''டோஸ்ட், காப்பி அவ்வளவுதானே! அல்லது ஆம்லட்...?''

''அந்த வழக்கம் எனக்கில்லை'' என்று சொல்வதற்குள்ளேயே அவர் எழுந்து போய்விட்டார். மேனேஜரிடம் போய் என் சார்பில் புகார் கூறி, இருவருக்கும் வேண்டிய சிற்றுண்டியைத்

தமது பின்னலேயே கொண்டுவரச் செய்தார். வந்து உட்கார்ந்து ''நம்மைப் போன்றவர்கள் காப்பி, சிற்றுண்டிக்குப் பணம் தர மாட்டோம் என்று அந்தப் பையன்கள் நினைத்திருக்கவேண்டும்'' என்பதாகக் கேலி செய்தார். நானும் சிரித்தேன். அவரும் சிரித்தார். ஒரு 'பாய்' இரண்டு தட்டுகளில் சிற்றுண்டியை வைத்தான். டோஸ்ட், வெண்ணெய், ஜாம், காப்பி ஆகியவை இருந்தன. பசியினல் துடித்துக்கொண்டிருந்த என் கவனமெல் லாம் சிற்றுண்டிமீதே இருந்தது. அதை நான் முடிக்கும்போது அவரும் முடித்தார். எங்கள் கால்களுக்கு அடியில் காலித் தட்டு களை வைத்தோம். ஆனல் அவற்றை எடுத்துச்செல்ல நெடுநேரம் வரை யாரும் வரவில்லை. அதற்கும் அவர்களைக் கூப்பிடவேண் டியதாயிற்று. பின்னலேயே 'பில்' வந்தது. ஒரே பில்லைக் கண்ட நான் திடுக்கிட்டேன். பையிலிருந்து 'பர்சை' எடுத்துப் பணம் கொடுக்கப்போனேன். அவர் என்னை விடவில்லை. ''ஆர்டர் கொடுத்தவனே நான்'' என்ருர். ''வேண்டும் என்றவன் நான்தானே? என்னுடையதற்காவது பணம் தர வேண்டாமா?'' ''இரயிலில் இந்த நான், நீ எங்கிருந்து வந்தது?'' என்று கூறிச் சிரித்தார். அவர் என்னைப் பணம் கொடுக்கவிட வில்லை. எப்படிப்பட்ட மனிதர் இவர்! என்று எனக்குத் தோன்றியது.

''ஒருவனே உட்கார்ந்துகொண்டு தனியாகத் தின்பது எனக்குப் பிடிக்கவில்லை. அதனல் அப்படிச் செய்தேன்'' என்ருர்.

''நீங்கள் பெரியவர்.''

''வயதில் இருக்கலாம்'' என்ருர் அவர். நான் சிரித்தேன். அப்போது இரயில் 'லோனவளா' நிலையத்தைத் தாண்டியிருந் தது. பக்கத்தில் உள்ள காண்டாலா மலை பிரயாணிகளின் கண் களுக்கு ஒரு பெரு விருந்து. ஆனல், நான் சாளரத்தின் அருகே உட்கார்ந்திருக்கவில்லை. நின்று பார்க்கலாம் என்ருலோ எதிரில் உட்கார்ந்திருந்த துரைசானிமார்களின் கால்கள் தடையாக இருந்தன. இருந்த இடத்திலேயே கழுத்தை நிமிர்த்தி வளைத்து, சாய்த்து . . . என் கவனமெல்லாம் ஓடிக்கொண்டிருந்த இயற்கைக் காட்சியில் கலந்திருந்தது. அதை இடையில் வந்த சுரங்கப் பாதைகள் துண்டித்தன. முதல் சுரங்கத்தைக் கடந்து வண்டி வெளிவந்ததும் எனது நண்பர் எழுந்து நின்ருர். என் தோள்மீது கைவைத்து, ''சாளரத்தின் அருகே உட்காருங்கள்'' என்று வற்புறுத்தினர்.

''பரவாயில்லை, நீங்களே உட்காருங்கள்.''

''உங்களுக்கு வெளியே பார்ப்பதில் ஆர்வம் இருக்கிறது. நான் வருடத்தில் பத்து முறையாவது பூனு வந்து போகிறவன்'' என்றார் அவர். என்னை இழுத்துத் தம் இடத்தில் உட்கார வைத்தார் என்று கூறுவதும் தவறல்ல.

இந்த மனிதர் யார்? மற்றவர்களுடைய தேவைகளை நன்றாக அறிந்துகொண்டு அந்த வகையிலேயே உதவிசெய்கிற இவர் யாராக இருக்கலாம் என்றெல்லாம் எண்ணினேன். முதலில் சிறிதுநேரம் சாளரத்தின் வழியே ஊன்றிப் பார்ப்பதில் ஆழ்ந்திருந்தேன். பிறகு மலைத்தொடர் குறைந்துகொண்டே வந்தது. அதன் பின்பு புலப்பட்ட காட்சிகள் மிகவும் சாதாரணமானவைகளாக இருந்தன. எனவே, எழுந்து நின்று ''இனியாவது உங்கள் இடத்தில் வந்து அமருங்கள்'' என்று வேண்டினேன்.

''இன்னும் இரண்டு மணிநேரம்தான் . . . உட்கார்ந்திருங்கள்'' என்று சொன்னார் அவர். அவருடைய அறிமுகம் எனக்கு மிகவும் மகிழ்ச்சியை அளித்தது, என்றாலும் உரத்துப்பேச முடியவில்லை. எதிரில் இருந்த ஜனங்கள் நாடக மேடை நடிகர்களைப்போல ஒரேயடியாய்க் கத்திக்கொண்டிருந்தார்கள். இரயிலே அவர்கள் வீடு; எதிரில் உட்கார்ந்திருந்த நாங்கள் இருந்தும் இல்லாதது போல அவர்கள் நடந்துகொண்டார்கள். அதுவே ஒருவகைச் சலிப்பை உண்டாக்கியது. என்றாலும், நான் தணிந்த குரலில் ''எதுவரை உங்கள் பயணம்?'' என்று அவரைக் கேட்டேன்.

''ஊருக்கு.''

''நீங்கள் பம்பாய்க்காரரா?''

''அதுதான் நான் விரும்பித் தேர்ந்த ஊர், பிறந்தது வேறிடத்தில். இப்போது வாழ்வது பம்பாயில். நீங்கள் பம்பாய்க்குப் போகிறவர்களாக இருக்கவேண்டும். நீங்கள் வீட்டில் கன்னடம் பேசுகிறீர்கள் அல்லவா?''

இதுவரை எங்கள் பேச்சு ஆங்கிலத்தில் நடந்துவந்தது. நான் கன்னட மொழியினன் என்பதை இவர் கண்டுபிடித்தது மிகவும் வியப்பாக இருந்தது. ''நான் கன்னடியன் என்பதை எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?'' என்று கேட்டேன்.

''அந்த ரெஸ்டாரெண்ட் பையன்கள் வராதிருந்தபோது உங்களுக்குள்ளேயே 'அப்ப, இந்த ஜனங்கள்' என்று முணுமுணுத்தீர்கள், அதிலிருந்து.''

''உங்களுக்குக் கன்னடம் தெரியுமா?''

''பேசிப் பல ஆண்டுகள் ஆயின; என்றாலும் தாய்மொழி மறந்துபோகுமா?''

''ஊர்?''

''வடக்கு மைசூரில் ஒரு கிராமம். இப்போது பம்பாயில் வசித்துவருகின்றேன்.''

''ஏதாவது வேலையா?''

''சொந்த வேலை செய்துகொண்டிருக்கின்றேன்.''

''அப்படியானால் சொந்த வியாபாரம், இல்லையா?''

''வியாபாரம் செய்து அலுத்துப்போய் இப்பொழுது அதி லிருந்து விடுதலைபெற்றிருக்கின்றேன்.''

''ஓய்வு பெற்ற வாழ்க்கை.''

''வாழ்க்கையிலிருந்து ஓய்வு பெறவில்லை'' என்று கூறிச் சிரித் தார். பிறகு அவரே மெல்ல மெல்ல என்னைப்பற்றிய கேள்வி களைக் கேட்கத் தொடங்கினார். நான் அவரைப்போல் ஓரிரண்டு சொற்களில் விடை கூறாமல், சில வாக்கியங்களையே தொடர்ந்து கூறியிருக்கவேண்டும். இல்லாவிட்டால், நான் இன்னான்; பம்பாய்க்கு இன்ன வேலையாக வருகின்றேன்; இத்தனை நாட்கள் தங்கியிருப்பேன் என்று சொல்லி முடிக்கும்போது இரயில் 'தாதர்' நிலையத்தில் நின்றிருக்குமா? ''இது தாதர் அல்லவா?'' என்று விரைவாக எழுந்து நின்றேன். அந்த அவசரத்தில் முட்டாளைப் போல அவரிடம் சொல்லிக்கொள்ளாமலே இறங்கிவிட்டிருப் பேனோ என்னவோ? நல்லவேளை, ''பத்து நிமிடம் வண்டி நிற்கும்'' என்று சொல்லிக்கொண்டே படுக்கையைத் தூக்குவதற்கு முன்னாலேயே அவருக்கு வணக்கம் கூறினேன். கடன்பட்டவனைப் போல ''இனி நாம் சந்திப்பது எங்கேயோ? உங்கள் பெயரைக் கூட நான் கேட்டுக்கொள்ளவில்லை'' என்றேன். என் மனநிலை அப்போது அப்படியிருந்தது. அவர் தமது கைப்பையிலிருந்து தமது முகவரி எழுதிய சீட்டு ஒன்று எடுத்து என் கையில் திணித்து, ''இதில் இருக்கின்றன என் பெயரும் விலாசமும். நேரமிருந்தால் இன்று அல்லது நாளை, இந்தத் தடவையில்லா விட்டாலும் அடுத்த முறை வரும்போதாவது என் வீட்டுக்கு வாருங்கள். அங்கே இதைவிட ஓய்வாகப் பேசுவோம்'' என்று கூறினார்.

''ஆகட்டும்'' என்று கூறி அவரிடமிருந்து விடைபெற்று, வண்டியிலிருந்து இறங்கினேன். எனக்காக வந்து காத்துக்கொண்

டிருந்த நண்பர் ஒருவர் ''ஹலோ'' என்று கூறி என்னைத் தழுவிக்கொண்டார். அப்போது அந்தப் பெரியவரின் நினைவு வந்தது. அதுவரை யசவந்தர் கொடுத்த கார்டை நான் சரியாகப் பார்க்கவில்லை.

என் மனம் கட்டின்றி அலைந்துகொண்டிருந்தது. ஓர் இருட்டறையில் குழந்தைகளின் முன்னால் மின்மினிப்பூச்சி தோன்றி இரண்டேயிரண்டு விநாடிகள் விளையாடி மறைந்துவிட்டால் எவ்வளவு ஏமாற்றம் உண்டாகும்! எனக்கு அப்போது அப்படித்தான் இருந்தது. ஒருபுறம் அந்த நண்பர் என்னிடம் பேசிக்கொண்டிருந்தார். நான் அவருக்குப் பதில் கூறிவந்தேன். டாக்சியை வரவழைத்து என்னைத் தூக்கிக்கொண்டு செல்வதைப்போல அவர் என்னைத் தம்முடைய வீட்டுக்கு அழைத்துக்கொண்டும் போனார். நான் அவருடைய வசத்தில் இருந்தேன். என் மனம் மட்டும் என் வசத்தில் இல்லை, இதற்குக் காரணம் யசவந்தராயரின் பெருமையே யாகும்.

பம்பாயில் அந்தத் தடவை நான் ஐந்தாறு நாட்கள் இருந்தேன். ஒருநாள் மாலை நான்கு மணிக்கு ஒய்வாக மலபார் ஹில்லிலிருந்த அவருடைய வீட்டுக்குப் போனேன். கடற்கரையில் இருந்த பழங்காலத்து ஓட்டு வீடு ஒன்று—குடிசை என்றாலும் பொருந்தும்—மாடியில் ஒரு பக்கத்தில் அவர் வசித்துவந்தார். அந்தக் கட்டடத்தின் ஒரு பக்கத்தின் சாலையில் மலபார் மலைகளும் காட்சியளித்தன; அதன் மற்றொரு பக்கத்தில் அழகிய கடல் இருந்தது. மாடிப்படி வழியே ஏறும்போது அந்தக் கடல் என்னை ஈர்த்தது. அதனால் அங்கேயே நின்று பார்த்துக்கொண்டிருந்தேன்.

என் நண்பர் இருக்கிறாரா இல்லையா என்பதைப்பற்றிக்கூட நான் சிந்திக்கவில்லை. அதற்குள் அவருடைய வேலைக்காரன் கீழேயிருந்து மேலேயேறி வந்தான். ''என்ன வேண்டும்? ஏன் நின்றுகொண்டிருக்கிறீர்கள்?'' என்று என்னை அதிகாரத்துடன் கேட்டான். அவனே இந்தக் கதையில் வரும் 'தாதா.' அவனுடைய உருவத்தைப் பார்த்தால் வேலையாளாகத் தோன்றியது; ஆனால், அவன் படியேறி வந்த வேகம், என்னைக் கேட்ட முறை எல்லாம் அவனை எஜமானனாகக் காட்டின. எனக்கு அது பிடிக்கவில்லை, நான் அவனையே பார்த்துக்கொண்டு நின்றேன். அவன் உடனே திரும்பி அந்த வீட்டுக்குள் போனான். நான் சிறிது நேரம் அங்கேயே நின்று கடற் காட்சியில் என்னுடைய அழகுப் பசியைத்

தணித்துக்கொண்டு, மூடியிருந்த அவர் வீட்டுக் கதவைத் தட்டி ''யசவந்தராய்'' என்று அழைத்தேன்.

குரலைக் கண்டுகொண்டவரைப்போல ''நீங்களா, வாருங்கள்'' என்று சொல்லிக்கொண்டே கதவைத் திறந்து வெளியே வந்து கையைக் குலுக்கி என்னை உள்ளே அழைத்துச் சென்றார். பின்பு அதே அறைக்கு நான் அடிக்கடி போயிருக்கின்றேன். இதே தாதா என்னைப் பலமுறை பார்க்கவும் நேர்ந்தது. நான் யசவந்த ராயருடைய மதிப்பிற்குரியவன் என்பது தெரிந்த நாளிலிருந்து தாதாவின் போக்கு மிகவும் மாறியது. அவன் என்னைப் பலவாறாக உபசரிக்கத் தொடங்கினான். யசவந்தர் என்னைக் கண்டதும், ''வந்து எவ்வளவு நேரமாயிற்று?'' என்று கேட்டார். ''கால்மணி நேரம்'' என்றேன் நான்.

''எங்கேயிருந்தீர்கள்?''

''வெளியே, வராந்தாவில், கடலைப் பார்த்துக்கொண்டே நின்றிருந்தேன். மிகவும் அழகான காட்சி. இந்த இடம் கிடைப்பதற்கு நீங்கள் எவ்வளவோ புண்ணியம் செய்திருக்கவேண்டும்'' என்றேன். அவர் அதற்குப் பதில் கூறாமல், ''தாதா, இவர் வராந்தாவில் நின்றுகொண்டிருந்தது உன் கண்ணில் படவில்லையா?'' என்றார். தாதா ஏதேதோ உளறினான். உடனே அவர், ''ஏன் எனக்குத் தெரிவிக்கவில்லை?'' என்றார். அவன் மௌனமாக நின்றான். அப்போது ''இல்லை, அவன் என்னை விசாரித்தான். நானே பதில் கூறவில்லை. அவன் பேசிய முறை . . . '' என்று நிறுத்தினேன். அவர் சிரித்துக்கொண்டே, ''இந்த வீட்டின் எஜமான் தானே என்பதாகக் காட்டிக்கொண்டான் அல்லவா?'' என்று கேட்டார்.

சில ஆண்டுகளுக்கு முன்னால் அவ்விடம் வந்து சேர்ந்த தாதாவின் குணம் அவருக்கு மிகவும் நன்றாகத் தெரிந்திருக்கவேண்டும். உடனே அதை மறந்துவிட்டவரைப்போல, ''தாதா, ராயருக்கும் எனக்கும் டீ போடு'' என்று கூறி அந்த நெருக்கடியிலிருந்து அவனைத் தப்புவித்தார். தாதா வேகமாக ஓடிப்போய் பழம், பிஸ்கட், டீ கொண்டுவந்து கொடுத்தான். பிறகு நான் அவரிடம் பேச்சுக் கொடுத்தேன். ''இந்த வீட்டில் நீங்கள் இரண்டுபேர்களே யிருக்கிறீர்களா?''

''இந்த தாதாவும் நானும்.''

''அவன் உங்களுக்கு உறவா?''

''என்ன உறவு? கடன் உறவுதான்'' என்று கூறிச் சிரித்தார். ''அந்த மாதிரிக் கேள்விகளைக் கேட்காதீர்கள், நான் என் பழைய வாழ்க்கையை அழித்துக்கொண்டு இங்கே வந்திருக்கிறேன். என்னுடையவர்கள் என்று சொல்லிக்கொள்ளத் தகுந்தவர்கள் எல்லாம் இருக்கிறார்கள். ஆனால், யாருமே எனக்கு வேண்டாம். விருப்பம்போலத் தனியாக இருக்கலாம் என்று வந்திருக்கின்றேன். வந்து இப்போது பத்து ஆண்டுகள் ஆயின. என்ன வேண்டும்? உடல் நலமாக இருந்தால் பிறர் யாரும் நமக்குச் செய்யவேண்டியது ஒன்றுமேயில்லை . . . உலகத்திலிருந்து தூர விலகிப்போய் அதைப் பார்த்துக்கொண்டிருப்பதே ஓர் அழகு, இல்லையா?''

''பொழுதை எப்படிப் போக்குகிறீர்கள், வேலை ஏதும் இல்லாமல் . . . ''

''வேலையில்லாமலா! ஏன் வேலையில்லாமல் இருக்க வேண்டும்? . . . பாருங்கள்; நான் ஒரு 'அமெச்சூர்' ஓவியன். எனக்குச் சித்திரக்கலை வரும் என்று நான் நினைக்கவில்லை. ஆனால், அது என்னுடைய மனக் கோணல்களுக்கு ஒரு வாய்ப்புக் கொடுக்கிறது. இனி, புத்தகங்கள் இருக்கின்றன, வாங்குகிறேன்; இல்லாவிட்டால் படிப்பகங்களிலிருந்து வரவழைத்துக்கொண்டு படிக்கிறேன். நாள்தோறும் இரண்டுவேளை காலையிலும், மாலையிலும் உலாவி வருகின்றேன். அதுவும் சலித்தால் அடுத்த வீட்டுக் குழந்தைகள் இருக்கின்றார்கள், விளையாடுவதற்கு. இன்னும் மாற்றம் தேவைப்பட்டால் பூனாவிற்கோ, மகாபலேஸ்வரத்துக்கோ, காண்டாலுக்கோ போய் வருகிறேன்.''

''அங்கே—?''

''ஓவியம் எழுதுதல், உலகத்தைப் பார்த்தல்! இலக்கியம் படைக்கும் நீங்களே இப்படிக் கேட்டால் என்ன செய்வது?''

நான் சிரித்து என் தவறை ஒப்புக்கொண்டேன். ''சிந்தனையும் ஒரு வேலைதான் என்பது எல்லோரும் அறிந்த ஒன்று. ஆனால், அது சிந்தனையா, அல்லவா என்பதை யார் தீர்மானிப்பது? மற்றவர்கள் கண்களுக்குச் சிந்திக்கிறவன் சோம்பேறியாகப் படுவான். சோம்பேறியும்கூடத் தான் சிந்தனையில் காலம் கழிப்பதாகக் கூறிக் கொள்ளலாம்.''

''நான் கேட்பது தப்பா?''

''அப்படி ஒன்றும் இல்லை, நீங்கள் என்னைக் கேட்கலாம். உங்களுக்கு நான் பதில் கூறவேண்டும் என்னும் கட்டாயம் ஏதும்

இல்லை. நான் பதில் கூறுவது என்னுடைய திருப்திக்காக. நான் எந்த வேலையும் செய்வது இல்லை என்று சொன்னால் யார் கேட்கிறார்கள்? என்னால் வேலையில்லாமலும் உட்கார்ந்திருக்க முடியாது . . . பொழுதுபோவது கஷ்டமாக இருந்தால், அடுத்த வீட்டுக் குழந்தைகளுடன் நானும் ஒரு குழந்தையாக விளையாடி என்னை மறந்துவிடுவேன்'' என்று சொல்லிக்கொண்டிருக்கும் போது ஆறு வயது பார்சிக் குழந்தை ஒன்று ''தாதா'' என்று அழைத்தது. தாதா வாய் திறக்கவில்லை. யசவந்தர் என் முகத்தைப் பார்த்து, ''அவளுடைய தாதா நான்'' என்று சொல்லி ஓடிப்போய் அந்தக் குழந்தையைத் தூக்கிக்கொண்டு வந்தார். ''நமக்கு உலகம் இன்பமாகக் காணவேண்டும் என்றால் எல்லாக் குழந்தைகளும் நம் குழந்தைகள் என்று நினைத்தால் போதும்.''

''ஆம், அவர்களும் குழந்தைகளாக இருக்கும்வரைதான் அப்படி; அதன் பிறகு அவர்கள் எங்கோ, நாம் எங்கோ?''

''ஆம். ஆனால், அவர்கள் பெரியவர்கள் ஆவதற்குள் ஆயிரம் புதுக் குழந்தைகள் பிறக்கின்றன. குழந்தைகளே இல்லாமல் போவதில்லை.''

''குழந்தைகள் பெரியவர்களானபோது நம்முடைய அன்பும், அவர்களுடைய அன்பும் ஒரே மாதிரி இருக்கமுடியுமா?''

''பெரியவர்களான பின்பு அவர்கள் குழந்தைகள் அல்ல; அவர்கள் உலகமே வேறாகிவிடுகிறது. அவர்கள் சுதந்திரம் பெற்றுவிடுகிறார்கள். நாம் அப்படிப்பட்டவர்களிடம் அன்பு செலுத்தவேண்டியதில்லை. நம்முடைய பற்றையும், அன்பையும், தம்முடைய வாழ்க்கையைத் தாமே நடத்திக்கொள்ள முடியாத இளம் குழந்தைகளின் விஷயத்தில் மட்டுமே, அது போதாதா?''

அந்தக் குழந்தையைத் தன் மடிமீது இருத்திக்கொண்டார். அந்தக் குழந்தை குதிரைவேண்டும் என்று கேட்டது. உடனே யசவந்தர் ஒரு காகிதத்தை எடுத்துப் பென்சிலால் ஒரு குதிரை வரைந்து கொடுத்தார். அந்தக் குழந்தை, ''இந்தக் குதிரைக் கதையைச் சொல்'' என்றது. யசவந்தராயர் தொடங்கினார்: ''ஓர் ஊரில் ஒரு குதிரை இருந்தது.'' ''ஒரே குதிரையா?'' என்று கேட்டது குழந்தை, ''சீ, சீ நிறைய குதிரைகள். இனிமேல் அவை ஒவ்வொன்றாக வரும் பார்'' என்று அதனுடைய ஏமாற்றத்தைப் போக்கினார். கதைத் தொடர்ந்தது. நானும் ஒரு குழந்தையாகி, கதையைக் கேட்டுக்கொண்டிருந்தேன்.

அன்று அவருடன் அதிகமாகப் பேசவில்லை. ''இனி எப்போது உங்களைக் காண்பது?'' என்று அவர், நான் எழுந்து நின்றதும் கேட்டார். ''அடுத்த ஆண்டில்'' என்றேன் நான். ''ஆகட்டும். கட்டாயம் வாருங்கள்'' என்றார் அவர். இதுவே எனக்கும், யசவந்தராயருக்கும் ஏற்பட்ட முதல் அறிமுகம்.

## மூன்றும் அத்தியாயம்

தம் உறவினரின் தொடர்பை அறுத்துக்கொண்ட யசவந்தராயர், தாதாவைப்போன்ற வேலைக்காரனை அவ்வளவு அன்போடு அருகிலிருத்திக் கொண்டு எப்படிக் காலம் தள்ளினார் என்பது வியப்பிற்குரிய தொன்றாகும். அவன் செய்ய வேண்டியது இவர் ஒருவருடைய வேலை மட்டுமே; மற்ற நேரங்களில் அவனே எஜமானனாகத் திரிந்தான். அவருடைய கணக்குப் புத்தகத்தைப் பார்த்தபோது மாதம்தோறும் முதல் தேதியன்றே முப்பது ரூபாய்க்குக் குறையாமல் அவனுக்குக் கொடுத்து வந்தார். அது ஐந்து ஆண்டுகளில் நாற்பதாக வளர்ந்தது. உணவு அவருடையது. உடை அவருடையது. எத்தனையோ தடவை தாம் பார்த்து இரசித்த சினிமாவிற்கு, ''பகற் காட்சி யிருக்கிறது, போய்ப் பார்த்துவிட்டு வா'' என்று எதிரிலேயே பணத்தைக் கொடுத்து அனுப்பியிருக்கிறார். தாதா அவரிடத்திலும் உண்மையாக நடந்துகொள்ளவில்லை என்று எனக்குப் பட்டது. அவர் எதிரில் மட்டும் மிகவும் அன்புடையவனைப்போல நடித்து வந்தான் என்றே நான் நினைக்கிறேன். அவனைவிட யோக்கியமான வட இந்திய 'பையா'க்களை வேலைக்கு வைத்துக் கொள்வது கஷ்டமல்ல. ஓரிரு முறை அவன் என் எதிரிலேயே துடுக்காகப் பேசியதைக் கேட்டிருக்கிறேன். நான் அவன் இல்லாத நேரத்தில் ''எப்படித்தான் இவனை நீங்கள் பொறுத்துக்கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டதும் உண்டு. அவர் சிரித்துக்கொண்டே ''அது முற் பிறவியின் கடன்'' என்று சொல்லியிருக்கிறார்.

''உங்களுக்கு முற் பிறவியில் நம்பிக்கையுண்டா?'' என்று கேட்டேன். ''எனக்கு முற் பிறவியும் இல்லை; பிற் பிறவியுமில்லை'' என்றார் அவர்.

''அப்படியானால்?''

''இங்கே வழியில் கிடந்தான் அந்தப் பையன். இதே வீட்டில் கீழேயுள்ள கடையின் திண்ணையில் நோயுடன் போராடித் துடித்துக் கொண்டிருந்தான். ஒருநாள் பார்த்தேன், அங்கே இருந்தான்; மறுநாளும் அங்கேயே கிடந்தான். அப்போது கடைக்காரன் 'இங்கிருந்து தொலைந்து போ' என்று விரட்டிக்கொண்டிருந்தான். அவனுக்கு அப்போது இருபத்திநான்கு வயது இருக்கலாம். வற்றி மெலிந்து, நைந்து, உயிர்மட்டும் ஒட்டிக்கொண்டிருந்தது. அவன் பலமுறை தனது உடலை இழுத்துக் கொண்டு பின்பக்கம் உள்ள கடற்கரைக்குப்போய் வருவதை நான் பார்த்திருந்தேன். இங்கே தெருவில் வாழும் பிச்சைக்காரர்களுக்கு, பம்பாய்க் கார்ப்பரேஷன் கக்கூஸ் வசதிகூடச் செய்து தரவில்லை. அவன் அடிக்கடி பெரும் துன்பத்தோடு போய் வருவதைப் பார்த்ததில் ஏதோ நோய் என்பது தெரிந்தது. கடைக்காரனால் இந்த அவலட்சணப் பிண்டம் தன் கடைக்கு முன்னால் இருப்பதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. முதலில் பொறுமையாகச் சொன்னான். பிறகு திட்டினான். பின்னர் ஒரு கழியையே எடுத்துவிட்டான். மாடியில் உட்கார்ந்திருந்த எனக்கு இந்தக் கூச்சல் கேட்டது. அடிக்கும் சத்தமும் காதில் விழுந்தது. 'அகமத்' என்று கூவி அறிமுகமான அந்த கடைக்காரனை அழைத்தேன். எனக்குக் கோபம் என்பதை அவனும் தெரிந்து கொண்டான். மேலே ஏறி வந்து தன்னுடைய சங்கடத்தைச் சொன்னான். 'எங்காவது ஆஸ்பத்திரியில் போய் விழுந்துகிடக்கலாம் அல்லவா? என் கடையின் முன்னால் இந்த அசிங்கம் கிடந்தால், டீ குடிக்க வருகிறவர்கள் திரும்பிப் போய்விடுகிறார்கள்' என்றான்.''

'அதற்காக அடிப்பதா? அவனுக்கு நடப்பதற்குக்கூட வலிமையில்லை.'

'நல்லபடியாகச் சொன்னேன். போகவில்லை என்றால் நான் என்ன செய்வேன்? போலீசை அழைத்துக் காட்டினேன். ''இது எங்கள் வேலை அல்ல'' என்றார்கள்.'

'நமக்கும் ஒருநாள் அப்படி ஏற்படாது என்று உனக்கு நிச்சயமாகத் தெரியுமா?'

''அப்பொழுது அகமதுக்குக் கோபம் வந்தது. அவன் பொறுமை இழந்து 'அப்படியானல் நீங்களே அவனை மேலே அழைத்துக் கொண்டு வந்து வளர்த்துக் கொள்ளுங்கள்' என்று சொல்லி, கீழே இறங்கிவிட்டான். அவனை நான் அவமானப்படுத்துகிறேன் என்று நினைத்தானோ என்னவோ! கீழே போய், தனது கோபம் தணிவதற்காக 'பார், மேலே உன் தாதா (அண்ணன்) இருக்கிறார், அங்கே போ; உன்னை நல்ல படுக்கையில் படுக்கவைத்து நன்றாகக் கவனித்துக் கொள்வார்' என்றான். அந்தக் குரலில் இருந்த வேகம் அதிலிருந்த குத்தல் எல்லாமே எனக்குக் கேட்டன. நான் கீழே இறங்கிப் போனேன்; பார்த்தேன்; கடைக்கு முன்னால் கிடந்த அது மனித உருவாகவே காணவில்லை. நான் அகமதுவிற்குக் கொடுத்த அறிவுரையை நானே கடைப்பிடிக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. அந்தப் பையனை என் இரண்டு கைகளாலும் தூக்கி எடுத்துக் கொண்டு, படி ஏறி, மேலே வந்து, என் படுக்கையிலேயே கிடத்தினேன். அப்போது அந்தப் பையனுக்கு மிகவும் அச்சமாய் இருந்திருக்கவேண்டும். எனக்கும் என்ன செய்வதென்று தெரியவில்லை. கடைக்கார அகமத் மேலே வந்து என்னிடம் மன்னிப்புக் கேட்டான். 'சேட்ஜி, நாம் இருவரும் சேர்ந்தே டாக்ஸி அழைத்து இவனை ஏதாவது ஒரு ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டு வருவோம். இவனை இங்கே வைத்துக்கொண்டு பார்த்துக்கொள்வது உங்களால் முடியுமா? நான் உங்களை அவமானம் செய்தேன். மன்னிக்கவேண்டும்' என்று வேண்டினான். நான் ஒன்றுமே பேசவில்லை. நேராகக் கீழே இறங்கிப் போனேன். பத்துக் கட்டடங்களுக்கு அப்பால் இருந்த ஆஸ்பத்திரியில் தேடி, டாக்டர் தாரோராவை அழைத்து வந்தேன். அவருக்கும் இந்த அநாதைப் பையனுக்குச் சிகிச்சை செய்ய மனமில்லை. அவன் வழியில் கிடந்த பையன் என்பதும் தெரிந்தது. 'இவனை ஏன் ஆஸ்பத்திரியில் சேர்க்கக்கூடாது?' என்று அவரும் கேட்டார். அதற்கு நானும் 'வேண்டாம், நானே அவனைப் பார்த்துக் கொள்கிறேன். அவன் செத்தால் ஒரு வேலையே முடிந்ததுபோலத்தான்; இல்லாவிட்டால் பிழைத்துத் தேறட்டும். அதன் பிறகு நினைத்த இடத்திற்குப் போகட்டும்' என்றேன்.''

''இரண்டு மாதங்கள் பிடித்தன—அவன் ஒரு மனிதனாக ஆவதற்கு. மிகக் கடுமையான வயிற்றுப்போக்கு அவனைப் பற்றியிருந்தது. அவனுடைய அழுக்குத் துணிகளைக் களைந்து எறிந்து

விட்டு வேறே கொடுத்து, படுக்கவைத்து, அந்த அசிங்கமான நோயிலிருந்து அவனைப் பிழைக்கவைப்பதற்கு நெடுநாட்களாயின. அதெல்லாம் டாக்டர் தாரோவாலரின் அருள். பிழைக்கிற விதி இருந்தது, பிழைத்தான். அந்தப் பையனின் மலத்தை ஒரு நாளைக்குப் பத்துத் தடவை நானே எடுக்கவேண்டியிருந்தது. தானாகக் கக்கூஸிற்குப் போகும் நிலை வருவதற்கு இரண்டு மாதங்கள் ஆயிற்று. முதல் பதினைந்து நாட்கள் வயிற்றுப்போக்கோடு வேறு பல நோய்களும் இருந்தன. டாக்டர் என்னுடைய துன்பத்தைக் கண்டு தம்முடைய ஆஸ்பத்திரியில் நர்ஸாக இருந்த மேரி என்பவளை ஒரு நாளைக்கு இரண்டு முறை அனுப்பிவைத்தார். அவனுடைய உண்மையான பெயர் தாதா அல்ல. அகமதுவினுடைய கிண்டல் பேச்சிற்காகவே நான் அவனைத் 'தாதா' என்று அழைக்கத் தொடங்கினேன். அவன் ஒரு மராத்திப் பையன். கணபத் என்று பெயர். அவன் உடல் நன்றாகத் தேறிய பிறகு இங்கேயே இருக்கட்டும் என்று நினைத்து வேலைக்கு அமர்த்திக் கொண்டேன். சதாராவில் அவனுடைய அக்காளோ தங்கையோ —யாரோ உறவினர்கள் இருக்கிறார்களாம். அதன் பிறகு ஆண்டுக்கொருமுறை அவன் சதாராவுக்குப் போய் வந்துகொண்டிருந்தான்.''

அப்போது நான், ''அப்படியானால் மிகவும் செலவழித்து வாங்கிய பொருள் அல்லவா இது? அப்படியிருக்க அவனுக்கு உங்களிடம் எவ்வளவு பணிவு இருக்க வேண்டும், என்ன கதை?'' என்று என் வியப்பைக் காட்டினேன்.

அவர் சிரித்தார். ''செலவு செய்தது என்னவோ உண்மை. ஆனால் ஓர் உயிரைக் காப்பதற்காகக் கொடுத்த விலையைச் செலவு என்று சொல்லலாமா? பணத்துக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்?'' என்றார்.

''அது சரி; இவனிடம் நல்ல குணமாவது இருக்கவேண்டாமா? 'எனக்கு உயிர் கொடுத்தவர் இவர்' என்னும் எண்ணம் இருக்க வேண்டாமா?''

''அப்படியானால் ஒவ்வொரு நிமிடமும், தெய்வங்களைப் போற்றுவதைப்போல 'நீயே துணை, நீயே எனக்குக் கதி' என்று சொல்லிக்கொண்டிருக்க வேண்டுமா?''

''நடந்துகொள்கிற முறையிலாவது இருந்தால் நல்லது.''

''இந்தப் பையன் வளர்ந்த முறை அப்படி என்று எனக்குத் தோன்றுகிறது. பண்பாடு போதாது. அவன் தாய்க்கு இரண்டு

பெண்களாம். ஒரே பையனும். அந்தத் தாய் செல்லம் கொடுத்துக் கொடுத்து இவனை வளர்த்திருக்க வேண்டும். தாய் அன்பு தனக்கே உரிமையானது என்று இவன் நினைத்து வந்திருக்க வேண்டும். தொடக்கத்திலிருந்தே என்மீதும், அதே போன்ற எண்ணம் வளர்ந்து வந்திருக்கிறது.''

''அதற்காக?''

''இவனைத் துரத்திவிட்டு இன்னொருவனை அழைத்து வைத்துக் கொள்கிறேன்—என்றே வைத்துக் கொள்ளுங்கள். இந்த தாதாவுக்கு வேறொரு இடத்தில் வேலை கிடைக்கலாம்; எனக்கும் வேறே ஆள் கிடைக்கலாம். புதிதாக வந்தவன், இந்தவகையில் இல்லாவிட்டால் இன்னொருவகையாக இருப்பான், ஆகையினால் அதிக வேறுபாடு இராது.''

''இராது என்று சொல்லுகிறீர்கள்?''

''என் மகனிடமிருந்தே எனக்கு கிடைக்கவேண்டியது கிட்டவில்லை.''

''உங்களுக்கு . . . எத்தனை குழந்தைகள்?''

''அவர்களையெல்லாம் மறந்து வந்துவிட்ட பிறகு அந்தப் பேச்சு வேண்டவே வேண்டாம். அது முடிந்துபோன கதை. இந்த தாதா எனக்கு மிஞ்சியிருக்கிற ஒரு மகன். என் குழந்தைகளைப் போல அவன் கெட்டவனோ நல்லவனோ, அது போதும்'' என்று சொல்லி நிறுத்தினார். முகத்தில் கவலை படிந்தது.

நான் பம்பாய்க்கு இரண்டாவது முறை வந்து யசவந்தராயரின் வீட்டுக்குப் போனபோது மேலே குறித்த பேச்சு நடந்தது. அவருடைய போக்கு எனக்கு விளங்கவேயில்லை. முன்பின் தெரியாதவனை தாதா அவருடைய இரக்கத்தைப் பெற்றதற்குத் தகுந்தபடி கடமைப்பட்டவனாக நடந்து கொள்ள வேண்டும் என்ற உணர்வே அவனுக்கு இல்லை என்றே நான் நினைத்தேன். பெரும்பாலும் அவருக்கு, தாதாவின் இயல்பு இன்னும் சரியாகத் தெரியவில்லை. நன்றாகத் தெரிந்த பிறகு ஒரு நாள் அவன் விஷயத்தில் அவருக்கு ஏமாற்றமே உண்டாகும். இத்தனை நாட்களுக்குப் பிறகு நான் யசவந்தரின் நாட்குறிப்பை எடுத்துப் பார்த்தபோது, அவர் எழுதிய அந்த ஒரு சித்திரத்தைப் பார்த்தபொழுது, என் கருத்து முழுவதும் தவறு என்று தோன்றுகிறது.

''குளிர், காற்று, மழை ஆகியவற்றுக்குப் பயந்து நடுங்கிக் கீழே விழுந்த கிளிக்குஞ்சைக் கொண்டுவந்து வளர்த்தேன். கிளிக்குஞ்சு அழகானது என்ற எண்ணத்திலேயே நான் அதனைக்

கொண்டுவந்திருக்க வேண்டும். அது செத்துப்போய்விடுமோ என்ற எண்ணம் வந்தாலே மிகவும் துன்பமாய் இருந்தது. நல்லவேளையாக அது பிழைத்துக் கொண்டது. முன்னைப்போலவே ஆகியது. பேச்சு கற்றுக் கொண்டது. நான் சொன்னதை யெல்லாம் தணிந்த குரலில் திருப்பிக் கூறியது. கிளிக்குப் பேச்சு வருமா? பொருள் தெரியாவிட்டாலும் திருப்பிக் கூறும் குணம் அதனுடையது. அதற்கு என்மேல் அன்பில்லையா? கூண்டிலேயே விட்டால் கீச்சிடுகிறது. வெளியே விட்டால் பறந்து வந்து கைமேலும், தோள்மேலும் உட்கார்ந்து கொள்கிறது. தன்னுடைய மகிழ்ச்சிக்காகக் கூவி இறக்கையை அடித்துக் கொள்கிறது. பிடிக்கப் போனால் கையைக் கடிக்கிறது. நான் கோபம் கொண்டு சிறிது நேரம் பேசாமல் இருந்தால் அதுவும் அதற்குத் தெரிகிறது. அந்த நேரத்தில் தோளின்மேல் ஏறி என் கன்னத்தைத் தன் அலகால் தடவிக் கொடுக்கிறது. அப்போது அதை எடுத்துக் கூண்டில் விடுகிறேன். நல்ல குணம், கெட்ட குணம் இரண்டுமே அந்தக் கிளியிடம் இருக்கின்றன. அதுவும் ஓர் உயிரே. பிழைத்திருக்கும் காலம் வரை என்னிடமே வாழட்டும்.''

மேற்கண்டவற்றை அவர் தாதாவைப்பற்றியே தமது நாட்குறிப்பில் எழுதியிருக்கவேண்டும். இவைகளுக்கு வேறு பொருள் தெரியவில்லை. தீமையும், நன்மையும் சேர்ந்தவனே மனிதன். மனித சமூகத்தில் வாழ்ந்திருக்கும் வரையில் மனிதனுக்கு மனிதன் உறவு. நம்முடைய தன்னலத்திற்காக, சலிப்பைப் போக்குவதற்காக மற்றவர்கள் தேவைப்படுகிறார்கள். நாம் தனி வாழ்க்கை நடத்துவது இயலாது என்பதற்காகவாவது ஒருவன் மற்றொருவனுக்கு நண்பனாக அமைகிறான். தன்னந்தனியாக இருந்து, மக்களுடைய தொடர்பு இல்லாமலேயே வாழ்ந்து, நடுத்தெருவில் வீழ்ந்து சாவதற்கு யாராவது விரும்புவார்களா?

யசவந்தராயரின் இத்தகைய கருத்து ஒன்று அவர் எழுதிய ஓர் ஓவியத்தில் எனக்குப் புலப்பட்டது. தாதாவின் இயல்பான பண்பை என்னைவிட அதிகமாக அவர் உணர்ந்திருக்கவேண்டும். அவர் எழுதிய பல ஓவியங்களில் மனித உடல்கள் இருக்கின்றன. அவை வடிவம், கை கால்கள், நீள அகலங்கள் முதலிய நோக்கில் சிறிதும் நன்றாகவேயில்லை. அந்த ஓவியங்களுக்கு அவர் விரும்பித் தீட்டியதே நிறம் என்று படுகிறது. வர்ணச் சேர்க்கை பொருத்தமாக இல்லை. நிறம், துணைநிறம் ஆகியவற்றின் கலவையும் ஒழுங்காகவே யில்லை. அவர் எழுதிய மனித உடல்களில் பெரும்

பாலானவற்றில் உடலின் அளவு இருமடங்கு பெருகியும், வலத்தில் ஒரு நிறம் இடதுபுறத்தில் ஒரு நிறம் பெற்றும் இருந்தன. ஒரு புறம் கடுமையான கறுப்பாளுல் மறு புறம் தூய வெள்ளை நிறம். ஒரு பக்கத்தில் சிவப்பு என்ருல் மற்ருென்றில் நீலம். சிவப்பு நிறத்துக்கு வேற்றுமையாக அமையக்கூடியது பச்சை என்பதைக்கூட அவர் அறிந்திருக்கவில்லை. அப்படிப் பார்த்தால் கறுப்பும், வெள்ளையும் பொருத்தமாக இருக்கும். ஓர் இளைஞனின் ஓவியத்தை கறுப்பு—வெள்ளை நிறத்தில் அவர் வரைந்திருக்கிருர். அந்தப் பையன் 'பைஜாமா' அணிந்திருக்கிருன். உடலின்மீதும் தலையின்மீதும் ஒன்றும் இல்லை. கையில் கப்பும் சாசரும். இடது கையில் தேநீர்க் கெட்டிலைப் பிடித்து தேநீர் ஊற்றுகிருன். அவன் நேராக நின்றிருந்தாலும்கூட ஓவியத்தின் இரண்டு பகுதிகளில் ஒன்று வெள்ளை மற்ருென்று கறுப்பு. இரண்டையும் ஒன்ருக இணைத்ததுபோலிருக்கிறது. முகத்தில் ஒரு பாதி ஒரு மாதிரியாகவும், மறு பாதி வேருெரு பொருள் தருவதாகவும் இருக்கின்றன. மார்பின் பகுதியும் அப்படியே. 'பைஜாமா' அணிந்திருந்ததால் கால்கள் விகாரமாகக் காணப் படவில்லை. மனித உடலில் வலம், இடம் சிறிது வேறுபட்டே யிருக்கின்றன. அதிலும் மனிதனின் முகம் அப்படியிருக்கும். முகத்தின் புகைப்படத்தை எடுத்து இரண்டாகக் கிழித்துப் பார்த்தால் இவ்விரண்டு பகுதிகளும் சற்று ஏறக்குறையத் தோற்றமளிக்கும். ஆனுல் யசவந்தர் எழுதிய ஓவியத்தில், இயல்பாகக் காணக்கூடிய இந்த வேற்றுமை மிக விபரீதமாகக் காட்சியளிக்கிறது. இயல்பான முகத்தின் இரண்டு பகுதிகளில் சிறிது வேற்றுமை தோன்றினுலும் அவற்றில் ஓர் இணைப்பு (பொருத்தம்) இருக்கும். ஓர் உதட்டின் பாதி தடித்தோ, மெலிந்தோ இருக்கலாம். மற்ருென்று நீளமாகவும், சிறிது தடிமனுகவும் இருக்கலாம். புருவம், கண், மூக்கின் அமைப்பு, கன்னம் முதலியவற்றில் ஒரு சிறிது வேற்றுமை இருந்தேயிருக்கும். யசவந்தர் இந்த வேறுபாட்டைக் கேலிச் சித்திரக்காரனைப்போல மிகுதியாக்கி எழுதியிருக்கலாம் என்று நினைத்தால், அது அப்படியுமில்லை. அவர் எழுதிய உருவம் இரண்டு வெவ்வேறு உடல்களில் இருந்து வெட்டியெடுத்த மாமிசத்தை ஒன்ருகச் சேர்த்துவைத்ததைப்போல இருந்தது. கப்பும் சாசரும் பிடித்திருந்த வலக்கை மெலிந்து எலும்பு மேலே தெரியும்படியிருந்த வலுவற்ற கையாகும். அந்தப் பீங்கான் பாத்திரங்கள் கைநழுவி விழுந்து

விடுமோ என்று நினைக்கத் தோன்றுகிறது. தேநீர்க் கெட்டிலைப் பிடித்த மற்றொரு கை தசைப் பிடிப்புள்ளதாக, கோடரியைப் பிடித்த கை என்பதைப்போலத் தோன்றியது. அவ்வளவு வலிமை, அவ்வளவு உறுதி. அவனுடைய மார்பும், வயிறும் பார்க்கத்தக்கவை. வலப்பக்கத்து மார்பு காசநோய் பிடித்த தைப்போல வளைந்திருந்தது. இடது மார்பு அப்படியில்லை. உடற்பயிற்சி செய்த பயில்வானுடையதைப்போல இருந்தது. அந்த உடல் மிகவும் விகாரமாகக் காணப்பட்டது.

முண்டத்துக்குத் தகுந்த முகம். வலது உதடு கீழேயிறங்கி மெலிந்திருந்தது. வலது கன்னமும் தாடை எலும்பைக் காட்டி நிற்கின்றன. புருவம் கீழே இறங்கியிருக்கிறது. தலைமயிர் உண்டோ இல்லையோ என்று எண்ணும்படி வழுக்கையாக இருக்கிறது. அந்தப் புருவத்திலும், கண்ணிலும் உயிர்க் களையே இல்லை. எழுந்துகொண்ட பிணத்தின் கண்ணைப்போல இருந்தது. மூக்கின் இடது பகுதி அப்படி இல்லவேயில்லை. உதடு இறுக மூடி, இடது மூக்கின் மடல் விரிந்திருக்கிறது. கறுப்பு நிறத்தில் எழுதப் பட்ட அந்தப் பக்கத்துக் கண்ணும் மலர்ந்திருக்கிறது. கண்ணின் கருவிழியும் ஓர் ஓரமாகச் சரிந்து வஞ்சகம், குயுக்தி ஆகியவற் றைக் காட்டுகிறது. அதன்மீது தடித்த புருவத்தை எழுதியிருக் கிறார். இந்த விசித்திரங்களைப் பார்த்து "இது என்ன கேலி? இடக்கண் சிறியது, வலக்கண் இரு மடங்கு பெரியது" என்று நான் ஓவியத்தைக் கீழே வைத்தேன். யசவந்தர் உடலின் அளவுகளையெல்லாம் கற்றதில்லை என்று தாமாகவே கூறியிருக் கிறார். அவருடைய ஓவியங்களும் அந்தக் குறையை நன்றாக எடுத்துக்காட்டுகின்றன. அப்படியிருக்கும்போது அந்த ஓவியத் தைப் பிடித்துக்கொண்டு "இது யாருடைய ஓவியம்?" என்று நான் நினைக்கவேண்டுவதே இல்லை. அவர் தம்முடைய நாட் குறிப்பில் கிளிக்குஞ்சின் உதாரணத்தைக் கொடுத்திருந்தா ரல்லவா? அதனால் எனக்குத் தாதாவின் நினைவு வந்தது. தேநீர்க் கெட்டிலைப் பிடித்த பையன் அவருடைய தாதாவாக ஏன் இருக்கக்கூடாது? என்று எனக்குத் தோன்றியது. தாதா வின் முகத்தை அவர் எழுதுவதற்கு முயன்றிருக்கமாட்டார். அந்தப் பையனிடம், "இது உன்னுடைய படம்" என்றால் தேநீர்க் கெட்டிலை முகத்தின்மீது வீசி எறிந்துவிட்டுப் போய்விடுவான். அவனுடைய முகத்துக்கு எதிரில் கண்ணாடி பிடிப்பது அவருடைய நோக்கமல்ல. "உன் முகம் இவ்வளவு விகாரமாக இருக்கிறது"

என்று கூறினால் உலகத்தில் யாருக்குமே பிடிக்காது. ஆகவே அப்படிப்பட்ட முயற்சியில் அவரும் இறங்கியிருக்கமாட்டார். அவர் எழுதிய சித்திரம் அவருடைய வேலையாளின் சித்திரமே யாகும். அவன் சமையல்காரன் என்பதைக் காட்டத் தேநீர்க் கெட்டில், கப், சாசர் முதலியன. அந்தச் சித்திரம் தாதாவி னுடையது என்று எனக்குத் தோன்றியதும், அவர் அவனைப் பிழைக்கவைத்த, வளர்த்த நிகழ்ச்சிகளெல்லாம் நினைவுக்கு வந்தன; உடன் சிரிப்பும் வந்தது. ஓவியத்தின் வலப் பக்கத்தில் உள்ள அரைப்பகுதி, அவரை அநாதையாக வந்து அடைந்த தாதாவின் நல்ல போக்கைக் காட்டுகிறது. அதனாலேயே அந்தப் பகுதியை வெள்ளையாகக் காட்டுகிறார். மற்றப் பகுதி கறுப்பு; தாதாவின் தன்னலம், முரட்டுத்தனம் எல்லாவற்றையும் காட்டு கிறது. அந்தக் கண், உதடு, மூக்கு, எல்லாமே அதே பொரு ளைக் கொடுப்பவனவாக இருக்கவேண்டும். இடது பக்கத்து மார்பு அகன்று தசை நிரம்பி வலிமை பெற்றிருந்தது. வலப் பக்கத்து மார்பு மார்பே அல்ல என்று சொல்லும் அளவிற்கு மெலிந்திருந்தது. உண்மையில் மனிதனின் இதயம், உடலின் இடப்பக்கத்தில் இருக்கிறது—பெரும்பாலானவர்களுக்கு. அவ் வாறே தாதாவின் கறுப்பான இடப்பகுதியில் இதயம் என்னும் பொருள் புதைந்துவிட்டதைப்போல தசை மூடிக்கிடந்தது. அவனுக்கு இதயம் இருந்தும் இல்லாததுபோல் ஆனது. இந்த உண்மை மனத்திற்பட்டதும் வேகமாகச் சென்று பெட்டியி லிருந்த அந்தப் படத்தை எடுத்து நெடுநேரம் பார்த்துக்கொண் டிருந்தேன். யசவந்தருக்கு மனித இயல்பு தெரியவில்லை; அதிலும் தாதாவின் இயல்பு தெரியவில்லை என்று நான் எப்படிச் சொல்லமுடியும்? நன்றாகத் தெரிந்துகொண்ட அவர் அவனைப் பிழைக்கவைத்தார்; வளர்த்தார்; வல்லமையுடையவனாக்கினார். ஏன் என்றால் அவரே சொன்னதுபோல் மனிதனுக்கு மற்றொரு மனிதன் தேவை. இடம்—வலம், கறுப்பு—வெளுப்பு, சுத்தம்—அசுத்தம் இவையெல்லாம் உண்மையல்ல. மனிதனின் சீலம் குன்றி. கெட்டவற்றோடு கலந்திருக்கிறது. ஒன்றைவிட்டு, மற்றொன்றைத் தேர்ந்தெடுக்கையில் மனிதன் என்னும் பொருளே மிஞ்சாது. தன்னை ஒழித்துத் தீமையை எடைபோட வல்லவ னுக்கு அப்படித்தோன்றும், தன்னைவிட்டு உலகத்தை அளக்கப் புறப்பட்டவனுக்கு உலகெல்லாம் கறுப்பு—வெளுப்பு என்று மாறுபட்ட நிறங்களாகிப் பிரித்துப்பார்க்க இயலும்.

அவருடைய ஓவியக் குவியலில் பசுவின் சித்திரம் ஒன்று இருக்கிறது. அந்தப் பசு மேய்ந்துகொண்டிருக்கிறது. அதன்மேல் உட்கார்ந்திருக்கும் காட்டு மைனு ஒன்று அதன் உடலைக் கொத்திப் புண்ணுக்கியிருக்கிறது. அந்தப் படத்தைப்பற்றி ஒரு முறை அவரையே கேட்டேன். ''இது வலியன் அல்லது சாதாரண மைனு அல்லவா? விலங்குகளின்மீது உள்ள உண்ணியைத் தின்பதற்கு வரும் பறவையா?''

''ஆம்.''

''எங்கே பார்த்தீர்கள், இந்தக் காட்சியை?''

''காண்டாலாவில், இது நாள்தோறும் காணக்கூடிய காட்சி. எப்போதாவது சலிப்பாக இருந்தால் நான் காண்டாலாவுக்குப் போய் ஒரு மாதம் இருந்துவிட்டு வருவேன்.''

''பசுவின் உருவம் சரியாக வரவில்லை.''

''நான் ஓவியன் என்று உங்களிடம் சொன்னேனு?''

''ஆனுலும் சித்திரக் கலையை நீங்கள் பொழுதுபோக்காக வைத்துக்கொண்டிருக்கிறீர்கள்.''

''உண்மை.''

''சித்திரம் வரைவதை நான் ஒரு பொழுதுபோக்காகக் கொண்டிருக்கிறேன். பொழுதுபோக்குக்கு பொருள் ஒன்றும் இல்லை, பொழுதுபோகிறது. இந்த வேலையில் மனத்தை மறந்து இருக்க முடிகிறது.''

''அந்தப் பசுவில் என்ன கவர்ச்சியைக் கண்டீர்கள்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லை.''

''அத்துடன் விட்டுவிடுங்கள்; எனக்கு அதில் கண்ட கவர்ச்சி உங்களுக்கு இல்லாமல் இருக்கலாம். அது தெரியாதபோது நான் விவரித்துச் சொல்லி ஆகவேண்டியது என்ன?''

''கொஞ்சமாவது குறிப்பு காட்டுங்கள், பின்னணி சிறிது தெரியாததால், எத்தனையோ ஓவியங்களை விளங்கிக்கொள்ள முடியாதுபோகிறது.''

''என்னுடைய ஓவியங்களுக்கெல்லாம் பொருள் இருக்கிறது என்கிறீர்களா?''

''இருக்கலாம். இல்லாமலே எழுதுவார்களா?''

''அதுவும் முடியும். நம் வாழ்க்கையில் எத்தனை வேலைகளுக்குப் பொருள் உண்டு? வேலை செய்து முடித்த பிறகும்கூட ஏன் செய்தேன் என்பது தெரியாமல் போகிற நிலைமைகள் எத்தனையோ உண்டு, அல்லவா?''

''அது சரி, இப்போது இந்தச் சித்திரத்தின் பொருளைக் கூறுங்கள்.''

அவர் என் முகத்தையே பார்த்தார்; சிரித்தார். அதன் பிறகு, ''இது வெறும் உவமை. என் வாழ்க்கையோடு தொடர்புடையது; உங்களுக்கு இதைத் தெரிவிக்கும் காலம் இன்னும் வரவில்லை'' என்று கூறி, அந்தச் சித்திரத்தை என் கையிலிருந்து பறித்து உள்ளே வைத்துவிட்டார். மறுபடியும் நான் அதைப் பார்த்தது, வீட்டுக்குத் திரும்பிவந்த பிறகு; அவருடைய ஓவியக் குவியல்களுக்கு உரிமையாளன் ஆனபிறகு. அவர் அந்த ஓவியத்தை என் கையிலிருந்து பறித்துக்கொண்ட அன்று, அந்த வேளையில் மிகவும் வருத்தமாக இருந்தார். அது என்னுடைய அதிகப் பிரசங்கித்தனமான கேள்விகளால் உண்டானதா என்பதை நான் அறியேன். அன்று அவருக்கு வருத்தம் மிகுந்து நெடுநேரம் என்னுடன் பேசாமல் இருந்தார். அப்போது என் பேச்சில் அவருக்குக் கோபம் வந்ததோ என்று நான் நினைத்தேன். அவர் அந்த விஷயத்தை மறக்கட்டும் என்பதற்காக, ''மலபார் ஹில்லுக்கோ, சௌபாத்திக்கோ போய் வரலாமா?'' என்று கேட்டேன். ''தாதாவைச் சினிமாவுக்கு அனுப்பியிருக்கிறேன், நான் இங்கேயே ஒருவனே உட்கார்ந்திருக்கிறேன். நீங்கள் போய் வாருங்கள்'' என்றார் அவர்.

''நான் இப்போது போனால் அடுத்த ஆண்டுதான் வருவேன்'' என்றேன். ''சரி'' என்றவர் என்னை வழியனுப்புவதற்காக எழுந்திருக்கவுமில்லை. அவருக்குப் பழைய நினைப்பு ஏதோ ஒன்று திரும்பிவந்து அவரை நிலைகுலையச் செய்ததுதான் உண்மை என்று எனக்குப் பட்டது. நான் மாடியிலிருந்து இறங்கிக் கீழே வந்தேன். படியிலிறங்கிக்கொண்டிருக்கும் போதே வெள்ளைப் புடவையணிந்த ஒரு பெண்மணி மேலே வந்துகொண்டிருந்தாள். அவளுக்கு நாற்பது வயது இருக்கலாம். படியில் ஒரு பக்கமாக ஒதுங்கி நின்று இறங்கிக்கொண்டிருந்தபோது ''Mr. Yasavanth there?'' என்று என்னையே கேட்டாள். நான் அங்கிருந்தே இறங்கி வருகிறேன் என்று அவளுக்குத் தோன்றியிருக்கவேண்டும். நான் இறங்கி வந்ததும் உண்மை. ''இருக்கிறார்'' என்றேன் நான். என்னுடைய பேச்சு அவளுக்குப் புரிந்ததோ இல்லையோ, தெரியாது. நான் கீழேயிறங்கி, தலை கவிழ்ந்தபடியே மெல்ல நடந்து சௌபாத்திக் கடற்கரையில் மணல் மேட்டின்மீது உட்கார்ந்துகொண்டேன். அப்போது மாலை மணி

ஐந்து ஆகியிருக்கலாம். பின் பக்கத்துச் சாலையில் வண்டிகளின் போக்குவரத்து அதிகமாகியிருந்தது. நகரத்தின் மக்கள் கூட்டம் ஓய்வை நாடி, சௌபாத்திக்கு வந்து மணலே புலப்படாதபடி நெருங்கியிருந்தது. அப்போது அலையிறக்கம் இருந்த நேரம். ''பேக் பே''யின் (Back Bay) அலைகள் குளத்தின் அலைகளைப் போல வலிமையற்று முன்னேறிக்கி வந்துகொண்டிருந்தன. அங்கே எங்களூர்க் கடலின் தூய்மையோ, அழகோ, வேகமோ, ஆரவாரமோ இல்லை. அது கடலானாலும், நகரத்தின் சாக்கடை நீர் கலந்து கலங்கிய நீரைப்போலவே தோற்றம் அளித்தது. இருப்பதற்குள், சௌபாத்தி கடற்கரைதான் தூய்மையானது என்று சொல்லவேண்டும். எங்களூருக்கு இருந்த தூய்மை அதற்கு இல்லை. ஆயிரக்கணக்கான மக்கள் வந்து 'துப்புமிடம்.' ஆயிர வகையான குப்பைக் கூளங்களும், கழிவுகளும் மக்களால் எறியப்படுமிடம். என்றாலும் ஒரு நாளைக்கு இரண்டுமுறை அலை ஏற்ற நீர் வந்து முடிந்த அளவு அழுக்கை ஒழித்துத் தூய்மையாக்குகிறது. தூய்மை என்பதென்ன? அழுக்கே காணப்படாத உலகமில்லை. அழுக்கில்லாத உடம்புமில்லை. வந்த அழுக்கை அவ்வப்போது நீக்கிக்கொள்வதே தூய்மையின் இலக்கணம்.

நான் வந்து உட்கார்ந்த ஒரே மணி நேரத்திற்குள் அந்தக் கடலுக்குப் போட்டியாக மக்கள் கடல் திரண்டது. கடலின் இரைச்சலை மீறும் வகையில் வண்டிகளின் ஓசை; இளநீர், பூரி முதலியவற்றை விற்பவர்களின் கூவல்; குழந்தைகளின் இரைச்சல்; பல்வேறு ஊது குழல்களின் ஒலி; கிலுகிலுப்பை முதலியவற்றின் நாராசமான ஒலி, பம்பாயை என் நண்பர் காடாக வர்ணித்தது வியப்பிற்குரியதல்ல. அப்படிப்பட்ட காட்டில் அவர் வானப்பிரஸ்தராக வந்ததுதான் வியப்பிற்குரியது. ஒரு வகையில் பம்பாயும் ஒரு காடே. அங்கே மக்கள் கூட்டத்தின் இடையே இருந்தும் இல்லாததுபோல் இருப்பதற்கு வாய்ப்புண்டு. எங்கே போனாலும் மக்கள் எதிர்ப்படுவார்கள். நெரிசலும் இடித்தலும் உண்டு. ஆனால் பொதுவாக ''நீ யார்? எங்கிருந்து வந்திருக்கிறாய்?'' என்று கேட்பவர்களில்லை. அந்தப் பக்கத்து வீட்டுக்காரனுக்கு இந்தப் பக்கத்து வீட்டுக்காரனைத் தெரியாது. நீங்களாக விரும்பிப்போனால் நட்பு உண்டாகும்; இல்லாவிட்டால் இல்லை. அந்த வகையில் அந்தக் கடலுக்கு இடையே நானும் ஒரு பாறையாக, மாலை மயங்குகிற வரையில் உட்கார்ந்திருந்தேன். அதுவும் சலித்துப்போயிற்று. எழுந்து கிராண்ட்

ரோடு இரயில் நிலையத்தை நோக்கி நடந்தேன். என் மனம் மிகவும் குழம்பியிருந்தது. அந்த நிலையில் குறுக்கு வழியில் நடந்துபோவது எளிது என்று நினைத்து, மற்றப் பாதசாரிக ளிடையே நுழைந்து, புகுந்து நடக்கத் தொடங்கினேன்.

காம்தேவி பூங்காவைத் தாண்டி, லேபர்னம் சாலையைக் கடந்து கிராண்ட்ரோடு மூலைக்கு வரும்பொழுது வண்டிப் போக்குவரத்து அதிகமாக இருந்ததால் அங்கேயே நின்றேன். மோட்டார் வரிசைகளிலிருந்து தப்பி மூன்று சாலைகளைக் கடந்து, இரயில் நிலையத்திற்குப் போகவேண்டும். மிகவும் விழிப்போடு மோட்டார் வெள்ளம் எப்பொழுது நிற்கும் என்று பார்த்துக் கொண்டு நின்றேன். அதே நேரத்தில் என் எதிர்ச்சாலையி லிருந்து பக்கத்துச் சாலையில் யசவந்தராயர் கடந்துசெல்வது தெரிந்தது. அவருடன், படியிறங்கும்போது எனக்கு எதிரில் வந்த அந்தப் பெண்மணி இருந்ததுபோலத் தெரிந்தது. அவள் வெள்ளைப் புடவை அணிந்திருந்தாள். அவர் என்னைப் பார்த் திருக்கமாட்டார். அந்த மக்கள் கூட்டத்தில் ஒரே விநாடியில் அவர் மறைந்து போனார். அவர்கள் இருவரும் ஒன்றாக உலாவச் சென்றது எனக்கு விசித்திரமாகப்பட்டது. யசவந்தராயர் வாயிலிருந்தே இரண்டு மூன்று தடவை ''வானப் பிரஸ்த வாழ்க்கை'' என்பதை நான் கேட்டிருந்தேன். அதற்கும் நான் பார்த்த இந்தக் காட்சிக்கும் பொருத்தம் இருப்பதாகத் தெரிய வில்லை. சொந்த இல்வாழ்க்கையில் வெறுப்புற்று, பம்பாய்க்கு வந்த அவர் இன்னொரு இல்வாழ்க்கையை இங்கே ஏற்படுத்திக் கொண்டிருக்கலாம் என்னும் ஐயம் என் மனதில் இயல்பாகவே எழுந்தது. இந்தக் காட்சியை நான் எத்தனையோ நாட்கள் மறக்க முயன்றாலும் நண்பர் யசவந்தராயர் விஷயத்தில் அவ்வாறு மறப்பது எளிதாக இல்லை. அப்படியும் அவருடைய இறுதி நாள்வரை அந்தப் பெண்மணி அவருடன் இருந்ததையும் நான் காணவில்லை. அதுவுமின்றி அவர்களுடைய நட்பு மிகவும் ஆழ்ந்ததொன்றாக இருந்தாலும், அதில் வியப்பிற்கு ஏதுமில்லை. மனிதனுக்கு இயல்பான பலவீனம் என்று காரணம் காட்டி விடலாம். ஆனாலும் அவ்வளவு நெருங்கிய தொடர்புள்ள அந்தப் பெண்மணியை அவருடைய இறுதிக் காலத்தில் நான் கண்டிருக்கவேண்டும். கே. ஈ. எம். ஆஸ்பத்திரியில், அவர் நினைவில்லாமல் இருந்தபோது அவள் அருகே இருந்தாளோ, இல்லையோ? தெரியாது. நான் போனதே அவர் தமது இல்

வுலக வாழ்வை முடித்துக்கொண்ட பிறகுதான், என்றாலும் தாதாவைப்போலவே இந்த மங்கையும் அவருடைய வாழ்க்கையிலே வந்து பிணைந்த ஒரு நோய் என்னும் ஐயம் என் மனத்தில் பலமுறை தோன்றியதுண்டு. அதன் பிறகும் நான் பல ஆண்டுகள் பம்பாய் போயிருந்தேன். மலபார் ஹில்லில் உள்ள அவர் வீட்டுக்குப்போய் ஒரு மணிநேரம் இரண்டு மணிநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டுத் திரும்பியிருக்கின்றேன். அங்கிருந்து மாடிப்படி வழியே இறங்கி வரும்போதெல்லாம் வெள்ளைப் புடவை யுடுத்திய அந்த மங்கை என் எதிரே வந்ததாக ஒரு தோற்றம்; ஆனால் அவள் என் கண்ணில் பட்டது அந்த ஒரே ஒரு நாள்தான்; அதுவே இறுதி நாளும் ஆகும். அவருடைய நாட்குறிப்பைப் படிக்கும்பொழுது இந்தச் சம்பவம்பற்றிய ஏதாவது குறிப்புக் கிடைக்கலாம் என்று நான் நம்பினேன்.

அந்த நாட்குறிப்பில் அவர் யாருடைய பெயரையும் வேண்டுமென்றே குறிப்பிடவில்லை. பலமுறை X, Y, Z என்றே எழுதியிருக்கிறார்: அல்லது பொருளே இல்லாத பெயர்களைக் கற்பனை செய்து எழுதுவார். நாட்குறிப்பு முழுவதும் 'தாதா' என்னும் ஒரு சொல் மட்டும் இன்ன ஆளையே குறித்தது என்ற உறுதி எனக்கு ஏற்பட்டிருந்தது. பெயரை உடைய மனிதன் இறந்த பிறகு அந்தப் பெயர் வெறும் சொல் மட்டுமேயாகும். அதற்குக் காரணமான ஒழுக்கத்தின் கற்பனை யாருக்குமே வெறும் பெயரிலிருந்து மட்டும் உண்டாகாது. தனது நாட்குறிப்பில், கசப்பான நினைவுகளின் தொகுப்பில், ஏன் பெயரைக் குறிப்பிடவேண்டும்? அதைப் படித்தவர்கள் "இந்த மனிதன் அவ்வளவு கெட்டவனா?" என்று ஏன் நினைக்கவேண்டும்! இப்படி நினைத்தே அவர் அப்படிச் செய்திருக்கவேண்டும். நாட்குறிப்பு என்பது ஒரு பேரேடு; அது கதையும் அல்ல. நாவலும் அல்ல. ஒருவகையான வரலாறு. அங்கே பீமன் பீமனாகவேயிருக்கிறான்; இராமன் இராமனாகவேயிருக்கிறான். கணபதி என்று எழுதியிருந்தால், கணபதியாகியிருப்பான். தாதா என்று எழுதியதால் எனக்கும் அவனை அறிந்த ஜாம்சேட்ஜி தம்பதிக்கும் அவன் எப்படிப்பட்டவன் என்பது தெரியவரும். ஏனெனில் எங்களுக்கெல்லாம் தாதா முதலே அறிமுகமானவன். நாட்குறிப்பின் தாள்களைப் படிப்பவர்களுக்கு தாதா அல்லது 'Y' அல்லது 'Z' மட்டும் ஆகிறான்.

ஒருநாள் நான் ஓய்வாக உட்கார்ந்து அவருடைய நாட்குறிப்பின் ஓரிரண்டு தாட்களைப் புரட்டினேன். அப்போது

X, Y, Z முதலியவற்றிற்குப் பதிலாக ரீமா, ரீமா என்ற பெயர் பலமுறை காணப்பட்டது. இதுவும் ஓர் இரகசியப் பெயர். யாராக இருக்கலாம்? ''காண்டாலாவில் இருந்தபொழுது'' என்று எழுதியிருக்கிறூரல்லவா, அங்கிருந்த யாரோ ஒருவனுடைய பெயர் என்று நினைத்து மேலே படித்தேன். 'ரீமாளின் தாய்' என்ற தொடர் வந்தது. எனக்குச் சிரிப்பு வந்தது. 'ரீமாளின்' என்றுலே சிரிப்பு வரத்தான் வேண்டும். 'கமலா' என்பது பெயராஞல் ''கமலாவின்'' என்று வரவேண்டும். 'கமலாளின்' என்றுல் அது கேட்பதற்கு நன்றுக இல்லை. இவர் சொல்லின் இனிமையைப்பற்றிக் கவலைப்படாமல் ரீமா என்னும் சொல்லுக்கு 'ள்' சேர்த்து 'ரீமாளின்' என்று எழுதியிருக்கிறூர். அவருடைய படங்களைப்போலத்தான் அவருடைய சொற்களும் இருக்கின்றன என்று நினைத்துக்கொண்டேன். நினைவு எங்கிருந்தோ எங்கோ போயிற்று. யசவந்தராயர் தாதாவைப் பற்றி என்னுடன் நடத்திய விவாதம் எனக்கு நினைவுவந்தது. போதாதவேளை; அந்தச் சர்ச்சையைத் தொடங்கியவனே நான் தான். அநாதையான தாதா அவர் வீட்டுக்கு வந்தது; டாக்டர் தாரோவாலாவை அழைத்தது; இவர் அந்தப் பையனுக்குத் தொண்டுசெய்தது; இவருக்குத் துணையாக யாரோ ஒரு நர்ஸை அந்த டாக்டர் அனுப்பியது; இவையெல்லாம் என் நினைவுக்கு வந்தது; அந்த நர்ஸின் பெயரும் ஞாபகம் வந்தது. அவர் அவளைப்பற்றிக் கூறும்போது 'மேரி' என்றதாக நினைவு. மேரி என்பது கிறிஸ்தவப் பெயர். அன்று நான் மாடியிலிருந்து இறங்கும்போது எனக்கு எதிராக வந்த பெண்மணி, வெள்ளைப் புடவை உடுத்தியிருந்த அவள், அந்த நர்ஸாகவேயிருக்க வேண்டும் என்று தோன்றியது. அவளுடைய நெற்றியில் குங்குமத்தை நான் காணவில்லை. அவள் கைகளில் வளையல்கள் இல்லை. ஆம்! அவளே மேரி. நண்பருடைய நினைவும் அவளுடைய நினைவும் ஒன்றுகவே வந்ததும் எனக்கு வியப்பாக இல்லை. இப்படியெண்ணும்போதே, நாட்குறிப்பில் ரீமா என்று கண்டது இதே மேரியாக இருக்கலாம்; அல்லது 'மாரி' என்பதின் தலைகீழ் வழக்காக இருக்கலாம் என்று பட்டது. மறுபடியும் நாட்குறிப்பைப் படித்தேன். ரீமாளின் இடத்தில், என் நினைவிலிருந்து வந்த மேரியை வைத்துப் பார்த்தேன். மேரிக்கு ஒரு தாய் இருந்திருக்கவேண்டும். மேரியின் தாய் அந்தக் காண்டாலாவில் வசித்து வந்திருக்கவேண்டும். இந்தக்

கொள்கையோடேயே அதில் எழுதியிருந்ததைப் படிக்கத் தொடங்கினேன்.

''ரீமாளின் தாய்க்கு ரீமா இங்கே வந்தது எப்படித் தெரிந்தது? அதுவும் தன்னந்தனியாக வசித்துவரும் என் வீட்டிற்கு. தாதாவே எனக்குத் தேவையில்லை என்று நினைத்து, அவன் இல்லாமலே என்னால் வாழ முடியும் என்பதைக் காட்டிக்கொள்வதற்காக நான் பம்பாயைவிட்டு இங்கே வந்திருக்கிறேன். அப்படி வருவது ஒன்றும் புதிதல்ல. ஆண்டுக்கு ஒரு முறையாவது காண்டாலாவுக்கு நான் வந்துகொண்டிருக்கிறேன். ரீமா என்னைத் தேடிக்கொண்டு இங்கே வந்திருக்கக்கூடாது. அவள் வந்தாள்; வரவும் தொடங்கினாள்; அதனாலேயே அவள் என்னுடைய கருணையை அல்லது பலவீனத்தைக்கொண்டு இலாபம் அடைய முயன்றாள். தாதாவைப் பார்த்துக்கொள்வதற்காகக் கூட அவள் வந்திருக்கவேண்டியதில்லை. 'நான் ஊதியத்துக்காக உழைக்கிறேன். நீங்கள் யாரும் இல்லாத அநாதை என்பதற்காக அவனிடம் அன்பு காட்டுகிறீர்கள். உங்கள் மனம் மிகவும் விரிந்தது' என்று என்னைப் புகழ்ந்தாள். எவ்வளவு உறுதியான மனிதனாக இருந்தாலும், புகழ்ச்சிக்குச் செவிசாய்த்தால் வலையில் விழுந்துவிடுகிறான். ரீமா செய்த வேலை இதுவே தான். வேறொன்றுமில்லை. நான் அவளுடைய புகழ்ச்சியில் மயங்கினேனா? இல்லை என்று சொல்லமாட்டேன். நான் இளமையில் புகழ்கிறவர்கள் தோண்டிய குழியில் யானையைப்போல வீழ்ந்திருக்கிறேன். அதன் பிறகு புகழ்கிறவர்களெல்லாம் வஞ்சகர்கள் என்று கருதிவந்தேன். இப்போது மீண்டும் ஒரு முறை என் இளமையின் அறியாமை எனக்கு வந்திருக்கலாம். இந்த விஷயத்தில் என்னை எடைபோடுவதற்கு நான் தகுதியற்றவன்.

''ரீமா என்னை வென்றது அதனால் மட்டுமல்ல. நான் மனைவியை விட்டு வந்தது அவளுக்குத் தெரிந்திருந்தது. யாருக்குமே அந்தச் சங்கதியைச் சொல்லாத நான் அவளுக்கு என்ன காரணத்திற்காகச் சொன்னேன்? மனக்கசப்பாலா? அவள் எனக்கு உடன்பட்டதைக் கண்டா? இதில் எதுவுமே இருக்காது. ஒருவகை வாழ்க்கையைக் கண்டு வெறுப்புற்று நான் இங்கே வந்திருந்தாலும் பெண் என்னும் பொருள்மீதே வெறுப்பு ஏற்பட்டு நான் பம்பாய்க்கு வரவில்லையல்லவா? அந்த என் குறையை ரீமா மிக எளிதாகக் கண்டுபிடித்திருக்க வேண்டும். அவள் அந்த விஷயத்தில் வெறும் நர்ஸ், திருமண

மாகாதவள். திருமணமாகாதவள் என்பதனாலேயே ஒரு பெண் தனியாகவே வாழ்வது இயலாது. அவளைப் பொறுத்தவரை, அவளுடைய வாழ்க்கைப் போக்கில், நான் மிகவும் எளிதாகக் கிடைக்கக்கூடிய ஒரு பொருளாகத் தோன்றியிருக்கவேண்டும். அவளுக்கு எப்படியோ தோன்றியிருக்கட்டும்; என்னுடைய வேட்கைக்கு உதவிய மிக எளிதாகக் கிடைத்த பொருள் அவளாகவே இருந்ததுதான் உண்மை.

''காண்டாலாவில் எங்கள் வீட்டுக்கு எதிரில் பசும்புல் நிறைந்த மேய்ச்சல் நிலம் ஒன்று இருக்கிறது. அங்கே நாள் தோறும் பல பசுக்கள் மேய்வதற்காக வருகின்றன. அவை களுக்கு முன்னும் பின்னுமாக, உண்ணியைத் தின்பதற்காக ஊரில் உள்ள மைனாக்கள் எல்லாம் எப்போதும் தயாராக இருக்கும். கொக்குகளும் வருவதுண்டு. அவைகளுக்கு இடையே நெருங்கிய நட்பு! அவை பறவைகள், இவை பசுக்கள். இவற்றிற் குத் தீனி புல்; அவற்றிற்குத் தீனி புழு; பசு, கன்று காலிகளுக்கு இந்த உண்ணி ஒரு பெரும் தொல்லை. அந்தத் தொல்லையைப் போக்கும் காட்டு மைனா இயற்கையாகவே நண்பனாகிறது. அநாதி காலம் தொட்டே வருகிற நட்பு அது.

''ஒருநாள் பார்த்தேன்; உண்ணியில்லாததனாலோ அல்லது பசித்ததனாலோ ஒரு மைனா மெலிந்த பசு ஒன்றின் முதுகைக் குத்திப் புண்ணாக்கியிருந்தது; அதிலிருந்து இரத்தம் வந்துகொண் டிருந்தது. அதையே படமாக எழுதியிருக்கிறேன். என்னுடைய உணர்ச்சி அதில் எந்த அளவுக்கு நிரம்பியிருக்கிறதோ நான் அறியேன். ரீமா ஒரு காட்டுப் பறவை; காட்டு மைனா. அப்படிச் சொன்னால் தவறாகுமோ? வேற்றாளான என்மீது அவ்வளவு அன்பைச் சொரிந்தவள், பெற்றெடுத்த தன் கிழத் தாயையும் அவள் கஷ்டத்தையும் மறக்கக்கூடியவளானால் அவளுடைய வருத்தம் உண்மையான அன்புதானா? நான் பட்ட புண், புண்தானா?''

அந்தப் படம், இந்தக் கதை, நான் அவருடைய வாயிலிருந்தே கேட்ட முழுக் கதை—இவையெல்லாம் மனித வாழ்க்கையின் ஆழம் காணமுடியாத ஒரு பிரச்சினையை என் முன்னே கொண்டு வந்து நிறுத்தின. ஆண்—பெண் காதல் என்னும் நீர்க்குமிழி யைக் குத்தினால் அதில் எவ்வளவு மிஞ்சும்? உண்மை எவ்வளவு நொய்மையானது என்பதை யசவந்தர் இங்கே சிந்தித்திருக்கிறார். ஆணும் பெண்ணும், காட்டு மைனா நாட்டுப் பசுக்களின் உறவிலே

மறைந்தார்கள். உண்ணி இருக்கின்றவரை அந்த உறவு இருக்கும். அது இல்லாமல் போனால் வெறும் புண். நாம் அன்பு செலுத்துவது எதற்காக என்றால் பிறர்க்கு உதவுவதற்காக அல்ல; இரக்கத்தினாலும் அல்ல; பெரும்பாலும் நமக்காக; நம்முடைய தன்னலத்துக்காக, என்று அவர் சொல்வதைப்போல் இருக்கிறது. மற்றவர்களைப்பற்றி எப்படியோ இருக்கட்டும்; தம்மைப் பற்றித் தாமே உண்மையாக எடைபோட்டுக் கூறுவதற்கு அவர் முயன்றிருக்கிறார்.

''ரீமாளுக்கு நான் காண்டாலாவில் இருந்தது தெரிந்து என் தனிமையைப் போக்கும் சாக்கில் வந்திருக்கிறாள்; இங்கேயே இருக்கிறாள். எல்லாம் சரிதான். ஆனால் அவள் தன் தாய் சீலுவைப்பற்றிச் சொன்னதெல்லாம் பொய் என்று தெரிந்த போது எனக்கு மிகவும் வெறுப்பு உண்டாயிற்று. தாய்க்குப் பக்கவாதம், பம்பாய்க்கு அழைத்துச்சென்று மருத்துவம் பார்க்க நூறு ரூபாய் கேட்டாள். கொடுத்தேன். கேட்கும்போது அது பொய் என்னும் எண்ணம் எனக்கு ஒரு சிறிதும் தோன்றவில்லை. என்னிடம் இருக்கிறது; இருப்பதால் கொடுத்தேன். சீலு கிழவி, பிழைக்கட்டும் அல்லது பிழைக்காமல் போகட்டும்; இருக்கிறவரையில் எல்லாச் சேவைகளையும் மகள் செய்யவேண்டுமல்லவா? ரீமாளின் குணம் எனக்குத் தெரியாதா என்ன? உழைக்கிறாள், பணம் வருகிறது. சும்மா கிடைத்த பணத்தைப்போலச் செலவு செய்கிறாள். அதனாலேயே நெருக்கடி நேரத்தில் நான் அவளுக்கு இப்படி உதவிசெய்ய வேண்டியதாயிற்று. உதவியென்ன? அவளுடைய அன்புக்கு நான் கொடுத்த விலை அது. அது வேறு விஷயம்.

''அவள் சென்ற மறுநாளே உயிரோடிருந்த சீலு என் வீட்டுக்கு வரவேண்டுமா? அவளுடைய வீடு காண்டாலாவிலிருந்து நான்கு மைல் தொலைவில் உள்ள 'லோநாவ்ளா'வில் இருக்கிறது. அறுபது வயதான அந்தக் கிழவி இப்போதும் திடமாகவே தோன்றுகிறாள். ஒவ்வொரு நாளும், என் வீட்டுக்கு ஒரு பர்லாங் தொலைவிலுள்ள ஒரு பார்சியின் வீட்டில் வேலை செய்கிறாள். காலையில் வந்து மாலையில் திரும்பிப் போகிறாளாம். மகளுக்கும் அவளுக்கும் தொடர்பேயில்லையாம். மகள் என் வீட்டில் இருப்பதாக எப்படியோ தெரிந்துகொண்டு, அன்று வேண்டும் என்று சீலு என் வீட்டுக்கு வந்து 'என் மகள் எங்கே?' என்று கேட்டாள்.

'' 'ரீமா உன் மகளா என்ன? உனக்கு உடல் நலமில்லை என்றுளே அவள்' என்று மிரட்டினேன்.

''அப்போது அவள் தன் மகள்மீது இருந்த எல்லாக் கோபத்தையும் கொட்டித் தீர்த்தாள். ஆதரவற்ற சீலு இப்போது தனியாகவே இருக்கிருள். அவள் தன் மகளை மிகுந்த கஷ்டத்துக்கு இடையில் வளர்த்து நாலு பேரிடம் கையேந்தி அவளை 'நர்ஸ்' பயிற்சி பெறவைத்தால், பிறகு தாய் என்பதையே மறந்துவிட்டாளாம்! ஆண் பிள்ளைகள் அப்படிச் செய்வார்கள். இவள் பெண், பெற்ற தாயை மறக்கலாமா? இதுவரை தாய்க்கு ஒரு காசுகூடத் தந்ததில்லையாம். லோநாவ்ளாவிற்கு வந்து, 'நீ இருக்கிருயா அல்லது செத்தாயா?' என்று கேட்பதுகூட இல்லையாம். இளமை என்பது இதுதான்! இளமையில் தன்னைத் தவிர வேறு எதுவும் கண்ணில் படுவதில்லை. உயர்ந்து வளர்ந்திருக்கும் மரத்துக்கு அதன் வேர் கண்ணுக்குத் தெரியுமா? சீலு வந்தது என்னை எச்சரிப்பதற்காகவே. 'அவள் என் மகள்; தாயையே விரும்பாத மகள் உங்களையோ உலகத்தையோ விரும்புவாளா?' என்று எனக்குப் புத்திசொல்லிவிட்டுப் போனுள். இது வியப்பிற்குரியதல்லவா? இளமைக்குக் குழந்தைப் பருவம் நினைவுக்கு வருவதில்லை; முதுமையைப்பற்றிய எண்ணமே எழுவதில்லை. அவள் தன் மகளைத் திட்டியதைக் கண்டு, அவளுடைய வேலை என்ன? வருமானம் எப்படி? என்று விசாரித்தேன். 'கைகால்கள் உறுதியாக இருக்கும் வரையில் உழைத்தே வயிற்றைக் கழுவிக்கொள்வேன்' என்றுள் அவள். உண்மையில் உறுதியான கிழவிதான். முதுமையிலும் பாடுபடுகிருள். பாடுபடுவதற்குச் சக்தி இருக்கிறது என்று நான் சொல்லமாட்டேன், ஆனுல் ஒரு பிடிவாதம் காணப்பட்டது அவள் முகத்தில். தன் மகள் தனக்கு உதவி செய்யாவிட்டாலும்கூட, தான் வாழ முடியும் என்னும் உறுதியைக் காட்டிக்கொள்வதற்காகவே அவள் வாழ்ந்துகொண்டிருக்கவேண்டும். அப்படி வாழாவிட்டாலும் வழியில்லை. அவளுடைய ஏழ்மையைப் பார்த்து நான் ஐந்து ரூபாய் கொடுக்கப்போனுல் 'இதற்காக நான் வரவில்லை. நான் வந்தது தாயை மறந்த ரீமாவை நீங்கள் நம்பவேண்டாம் என்று சொல்வதற்காகத்தான்' என்று கூறிப் போய்விட்டாள்.

''அன்பு வழி தவறினுல் புளித்து, நஞ்சாகிவிடும். ரீமா 'பசுவின் உண்ணியைத் தின்கிற நட்பை' வளர்த்தாள். உடலைக்

குத்தி, புண்ணாக்கி ஓரிரண்டு சொட்டு இரத்தத்தைக் குடித்திருந்தாலும் வியப்பில்லை. அவள் விஷயத்தில் அப்படிப்பட்ட அனுபவம் எனக்கு ஏற்பட்டிருந்தது. அந்தப் பறவையின் நட்பே அப்படிப்பட்டதுதான். காண்டாலாவைவிட்டுப் பம்பாய் போவதற்குள் நான் அவளுக்கு ஒரு கடிதம் எழுதினேன். 'உன் தாய் நான் இருந்த இடத்திற்கு வந்திருந்தாள். நீ புறப்பட்டுபோன மறுநாளே அவள் ஓடியாடுகிற நிலையில் இருந்ததை நான் கண்டேன். என் இருப்பிடத்திற்கு வந்து, ''ரீமா தாயை மறந்தவள், அப்படிப்பட்டவள். உங்களிடம் பொறுப்பாக நடந்துகொள்ளப் போகிறாளா?'' என்று கேட்டுவிட்டுப்போனாள்.' இதை அவளுக்குத் தெரிவித்திருந்தேன். ரீமா, என் வாழ்க்கை நாடக மேடையிலிருந்து தொலைந்தது இந்த ஒரு கடிதத்தினால் தான். அப்படி எழுதியிருக்கக்கூடாதோ. என்னவோ? 'உன் வஞ்சனை எனக்குத் தெரிந்துவிட்டது, என் காதல் அவ்வளவு தூரத்துக்குக் கண்ணை மூடிக்கொண்டிருந்தது' என்னும் எண்ணம் அவளுக்கு ஏற்படக்கூடாது என்பதற்காகவே நான் அந்தக் கடிதம் எழுதினேன். அவளிடமிருந்தும் எனக்கு ஒரு கடிதம் வந்தது. 'உங்களைப்போன்ற வஞ்சகர் வேறு யாருமில்லை' என்று அதில் கண்டிருந்தது. காதலுக்குச் சிறப்பாக மதிப்பேதும் தராத ரீமாளுக்கு அப்படித் தோன்றவேண்டுமானால் என்னிடமும் ஏதோ ஒரு குறையிருந்திருக்கவேண்டும். நான் அவளை வஞ்சித்திருக்கக்கூடுமோ? வஞ்சித்திருந்தால் எங்கே? எந்த வகையில்? என் வஞ்சகம் எனக்கே தெரிவது கஷ்டமல்லவா?''

## நான்காம் அத்தியாயம்

ரீமாளின் கதை இத்துடன் முடியவில்லை. யசவந்தரின் ஓவியக் குவியலில் அவள் இருந்திருக்கக்கூடிய ஒரு படம் எனக்குக் கிடைத்தது. அவ்வாறே அவர் கண்டாலா நிகழ்ச்சியைப்பற்றி எழுதியதே கடைசியானதல்ல என்பதும், அவருடைய நாட் குறிப்பின் பின்னால் வந்த பக்கங்களைப் படித்தபோது தெரிய

வந்தது. அதில் அவர் அவளுடைய இயல்பைக் குறிக்கும் ஒரு நல்ல உவமையைக் காட்டியிருந்தார். ''ரீமா ஒரு 'ஆர்கிட்' (மரவாழைச்) செடியைப் போன்றவள். ஆர்கிட் புல்லுருவி வகையைச் சேர்ந்ததல்லவா? பிற இனத்தைச் சேர்ந்த மரங்களின்மீது வேரை ஊன்றி, தன்னுடைய வாழ்க்கையை நடத்திக்கொள்ளும் தாவரம் அது. தாவர வியல் வல்லுநர்கள் 'ஆர்கிட்'டுக்குக் கொடுக்கும் மதிப்பை வேறெந்தப் பூவிற்கும் கொடுப்பதில்லை. அதன் பூ விசித்திரமான வடிவத்தில் இருக்கும். நீண்டகாலம் வாடாமல் இருக்கும். அபூர்வமான அழகை அள்ளி வீசும். ஆனால் அது தான் சேர்ந்துள்ள மரத்திற்கு அழகு சேர்ப்பதற்காகப் பூப்பதில்லை. அதைத் தாங்கும் மரமும் இந்தப் புல்லுருவி தன் காதலி என்று நினைப்பதில்லை. நம் கவிஞர்கள் மல்லிகைக் கொடிக்கும், மாமரத்திற்கும் ஒரு பிணைப்பை ஏற்படுத்தி வர்ணித்திருக்கிறார்கள். மல்லிகை வேறு, மாமரம் வேறு. அவற்றின் வேர்களும், கிளை, காம்புகளும் வெவ்வேறு. இல்வாழ்க்கையைப்பற்றி நினைக்கும்போதெல்லாம் எனக்கு ஆண்—பெண் வாழ்க்கையென்பது மல்லிகை—மாமரத்தைப்போலத் தோன்றுகிறது. மல்லிகை, மாமரத்தைத் தழுவிப் போகும். நீயே என் கதி என்னும் நம்பிக்கையை ஊட்டி அந்த மரத்தையும் மீறி வெளியே தளிர்களைவிட்டுப் பூக்கிறது. வெளித் தோற்றத்திற்கு இந்தக் காட்சி எவ்வளவு அழகாயிருக்கிறது! எவ்வளவு அன்னியோன்னியமாக இருக்கிறது! ஜலஜ என்னைச் சார்ந்திருந்ததும் அப்படியேயல்லவா? நெடுநாள் வரையில் அவளுடைய சுமையையெல்லாம் நானே சுமந்திருக்கிறேன்; அவள் எனக்காகவே வாழ்ந்து வருகிறாள் என்று நம்பிக் கொண்டிருந்தேன். அவள் தன் வாழ்க்கையை நடத்திக் கொள்வதற்காக, நான் கொடுத்த இன்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, தன் சுகத்துக்காகவே வாழ்ந்தது உண்மையல்லவா? இல்லறம் என்பதுகூட ஒருவகைத் தன்னலமே. அப்படித் தெரிந்த பிறகும் மாமரம் அந்த மல்லிகைக் கொடியை இழக்கலாமா? இல்லற வாழ்க்கையென்பது அன்னியோன்னியம் என்று சொல்லுகிறார்கள். அப்படியிருந்ததையும் நான் பார்த்திருக்கிறேன். என் வாழ்க்கையில் மட்டும் ஏன் அது உண்மையாகவில்லை? எனக்குத் தெரியவில்லை.

''ரீமா, எப்படிப் பார்த்தாலும் புல்லுருவி விதை! காற்றிலே மிதந்து, ஏதோ ஒரு மரத்தின் கிளையில் நிலைத்து முளைப்பதைப்

போல, ரீமா எங்கிருந்தோ வந்தாள். தன்னுடைய நடத்தை யால் என் வாழ்க்கையில் சில கண நேரம் இன்பம் அளித்ததும் உண்டு. எனக்கு அவளுடைய இயல்பு தெரிந்த பின்பு என்னை அவள் வஞ்சிக்கக்கூடியவள் என்பதைத் தெரிந்துகொண்ட நான் அவளுக்குக் கோபமாகக் கடிதம் எழுதி, அவளிடமிருந்து தப்பித்துக்கொள்ள முயற்சி செய்தேன். அவளுடைய பதிலி லிருந்து அது எளிது என்றும் தோன்றியது. ஆனால் நட்ட விதை, நட்ட விதைதான்! புல்லுருவி விதை, புல்லுருவி விதைதான். ஒரு மரம் புல்லுருவி விதையைத் தானகவே விலக்கிக்கொள்ள முடியாததுபோல அவள் என்னை வந்து ஒட்டிக்கொண்டேவிட் டாள். அதனால் அவளுக்குப் பெருமை வந்திருக்கலாம், அது பெருமை அல்ல. தாதா நடத்தியதைப்போல பலவீனமான முயற்சி. அது செயற்கையான ஒரு நாடகம்.''

மேற்குறித்த வாக்கியங்களில், என் நண்பர் தமது இல்வாழ்க் கைக்கும், நான் அவரைப்பற்றிக் கற்பனை செய்திருந்த மேரியின் தொடர்பிற்கும் நல்ல உவமை தந்திருக்கிறார். அதனாலேயே அவர் வரைந்த மேரியின் படம் எப்படிப்பட்டதென்று மேலோட்ட மாகப் பார்த்தேன். அது ஒரு 'பேஸ்டல்' சித்திரம். பெரிய காகிதம் ஒன்றில் பெண் ஒருத்தியின் மேல் பகுதியை எழுதியிருந் தார். உடம்பு, கை, இடை முதலியவை தசை நிரம்பி ஒரே மொத்தமாக இருந்தன. துணிமணிகள் அணிந்திருந்ததால், 'பிகாசோ' எழுதிய 'தி உமன்' என்னும் சித்திரத்தைப் போல, ஒரே மாமிச மலையாகத் தோற்றமளிக்காவிட்டாலும், அந்த ஆடையின் உள்ளே அப்படிப்பட்டதேயான ஓர் உடம்பு இருந்திருக்கவேண்டும். ஆனால், மேரி உண்மையில் அவ்வளவு பருத்த பெண் அல்ல. அவளுடைய உருவம் போதுமான அளவு கட்டுதிட்டமாகவேயிருந்தது. தசையின் இச்சையே அவளுடைய முக்கிய ஒழுக்கமாக இருந்தது என்பதனால் யசவந்தர் இப்படி யொரு படத்தை வரைந்தாரோ என்னவோ? அவளுடைய பருத்த உடம்பிற்கு மேலே, பதினாறே வயதுள்ள கன்னிப்பெண் ஒருத்தியின் முகத்தை வரைந்திருந்தார். சித்திரத்தின் வலப் பகுதி மஞ்சள் நிறம். இடப் பகுதி பச்சை. அந்த இரண்டு நிறங் களும் இணையவில்லை. அது மேரியின் முகம் என்று நான் கண்டு பிடித்தது ஆராய்ச்சியின் மூலமாகத்தான். படத்தின் பின்புறத் தில் "Orchid" என்று அவர் எழுதியிருந்தார். சித்திரத்தின்மேல், ''யசவந்த'' என்று எழுதியிருந்தது. அவர் இறப்பதற்கு ஒரே

ஓர் ஆண்டுக்கு முன்னால் எழுதிய ஓவியம் அது. அவளுடைய உதடுகளுக்குப் பச்சை வண்ணம் பூசியிருந்தார். என்ன கற்பனை அவருடையது! வலக்கண் சிரிப்பும், அழகும் பொருந்தியிருந்தது. இடக்கண்ணில் கரு விழியே இல்லை. அவள் ஓர் ஒற்றைக் கண்ணி! இரண்டு கண்கள் இருந்திருந்தால் பிறரிடம் சிறிது இரக்கம் இருந் திருக்குமோ என்னவோ என்பதுபோல இருந்தது, அந்த முகத் தின் அமைப்பு. ஒரே ஓர் ஆண்டுக்கு முன்னால் இந்தப் படத்தை எழுதுவதாயிருந்தால், அவருடைய வாழ்க்கையில் இவள் இன்னும் ஏதாவது ஒரு புயலை எழுப்பியிருந்தாளோ என்னவோ? ஆனால், அவளைப்பற்றி வேறு எவ்விதமான குறிப்பும் அவருடைய நாட் குறிப்பில் இல்லை. இப்படியாக யசவந்தர் வாழ்க்கையின் இந்த ஒரு பகுதியை இன்னும் தேடிப் பார்ப்பதற்கில்லை. ஆனால், அவர் கொடுத்த இரண்டாவது உவமையில், இல்லற வாழ்க்கை பற்றிய அவருடைய சிந்தனைகள் என்னையும் சிந்தனைக்கு ஆளாக்கின. அதில் அடங்கியிருந்த மல்லிகை—மாமரக் கற்பனை மட்டுமல்ல, அந்த மல்லிகை 'ஜலஜ' என்று எழுதியிருந்தார் அல்லவா?

'ரீமா' மேரி என்றவள், 'சீலு' அவளுடைய தாயான 'லூசி'—இவை தானாகவே தெரிந்தன. தாதா—அவருடைய வேலையாளான கணபதி. ஜலஜ என்னும் சொல்லை எப்படித் திருப்பிப்போட்டாலும் அதேதான் வருகிறது. தனது மனைவியின் பெயரைத் திடீர் என்று அவர் எழுதிவிட்டதாக எனக்குத் தோன்றவில்லை. தம்முடைய வாழ்க்கையை அவர் குறிப்பிடும் போது குறிகள் அல்லது குறியீடுகளுக்கே அதிக இடம் கொடுத் திருக்கிறார். அப்படியிருக்க, ஜலஜ என்பது அவருடைய மனைவி யின் உண்மையான பெயராக இல்லாமல் ஒரு குறியீடாக இருக்கக் கூடும். அவளுடைய பெயர் ''கமலா'' என்றிருக்கலாமோ? ''பங்கஜம்'' என்றிருக்கலாமோ? ''வனஜா'' என்றிருக்கலாமோ? இவ்வாறு பல்வேறு ஐயங்கள் என்னுள் தோன்றின. அவர் எனக்கு அனுப்பியிருந்த நான்கைந்து முகவரிகளிலிருந்து அவர் களைச் சந்தித்து அவருடைய பழைய வாழ்க்கையின் கதையைத் தெரிந்துகொள்ளவேண்டும் என்னும் ஆர்வம் எனக்கிருந்தது.

நான் பம்பாயிலிருந்து வந்து இரண்டு மாதங்கள் கழிந்தன. வேறு வேலைகளின் தொந்தரவாலும், என் இயல்பான சோம்ப லாலும் என் நண்பர் எனக்கிட்டிருந்த கட்டளையை மறந்திருந் தேன். நான்கு பேர்களுக்கு மாதந்தோறும் தலைக்கு இருபத் தைந்து ரூபாய் அனுப்பி வைக்கவேண்டும் என்று கூறியிருந்தார்.

நான் அதையெல்லாம் மறந்துவிட்டிருந்ததற்காக மிகவும் வருந்தினேன். இது நினைவுக்கு வந்த அன்றே நான் செய்த முதல் வேலை, அவர்களுடைய முகவரிகளைத் தேடியெடுத்து அவர்களுக்கு இருபத்தைந்து ரூபாய் வீதம் மணியார்டர் செய்ததுதான். இனி ஓய்வை ஏற்படுத்திக்கொண்டு நண்பரின் ஊருக்குப் போகவேண்டும், அவர் பிறந்த 'சுவாதி'க்கு அருகில் உள்ள கிராமத்திலோ, வளர்ந்த 'குமட்டி'யிலோ அவருடைய உறவினர்கள் யார் யார் உயிருடன் இருக்கிறார்கள் என்று தெரிந்து, அவர்களுக்கும் தெரிவிக்கவேண்டும். குமட்டியில் அவருடைய மனைவி மக்கள் இருந்தேயிருப்பார்கள். மனைவி இருந்தால் என்னுடைய பொறுப்பு மிகவும் கஷ்டமானதாகும். மனைவிக்கு அவளுடைய கணவன் இறந்த செய்தியைத் தெரிவிக்கும் வேலை மிகவும் துன்பம் தருகின்ற ஒன்றாகும். அதனாலேயே யசவந்தராயரின் 'ஜலஜ' இறந்துபோயிருந்தால் மிகவும் நன்றாக இருக்கும் என்று அவளுடைய சாவை நான் வேண்டினேன். அந்தக் கணவன், மனைவியர்களிடையே எந்தவிதத் தொடர்பும் எஞ்சியிருக்கவில்லை என்பதை நான் ஊகித்தேன். ஆனால், பிராமண சமூகத்தில் கைம்பெண்ணுக்கு இழைக்கும் கொடுமைகள் ஒழியக்கூடியவையல்ல. அதனால்தானே சுமங்கலிகள் தமது கணவன்மார்களுக்கு முன்னாலேயே தாம் இறக்கவேண்டுமென்று விரும்புகிறார்கள்?

இந்த விஷயத்தில் நான் எந்தவித முயற்சியும் செய்யாமலேயே பதினைந்து நாட்கள் கழிந்துவிட்டன. நான் அனுப்பிய மணியார்டர்களைப் பெற்றுக்கொண்டதாக இரசீதுகள் வந்தன. ஓர் இரசீது சாதாரா மாவட்டத்தைச் சேர்ந்த மகாபலேஷ்வரத்திலிருந்து வந்திருந்தது. பணத்தைப் பெற்றுக்கொண்டவர் விஷ்ணு பந்த் காட்டி என்பவர். மற்ற மூவரும் யசவந்தராயருடன் இரத்த சம்பந்தம் அல்லது வேறே ஏதாவது ஒரு வகையான உறவு உடையவர்களாக இருந்திருக்கவேண்டும். நான் நண்பருடைய பையைத் திறந்து, அதிலிருந்த இரசீதுகளைப் பார்த்தேன். அந்த நால்வருக்கும் பலமுறை பணம் அனுப்பப்பட்டிருந்தது. அவர்களில் மூவர் தம் பெயர்களைத் தாமேயெழுதியிருந்தனர். இருவருடைய கையெழுத்து கன்னடத்திலிருந்தது. விஷ்ணுபந்த் காட்டியின் கையெழுத்து மராட்டியில் இருந்தது! சுவாதிக்கு அருகில் இருந்த பெனகனஹள்ளி முதல் வீட்டுப் பார்வதியம்மா என்பவரின் இரசீதில், பெருவிரலின் இரேகை இருந்தது! அதற்குச் சாட்சியும் இருந்தது. அந்த அம்மாள் எழுத்தறிவில்லாத யாரோ

ஒரு கிழவியாக இருந்திருக்கவேண்டும். சுவாதி, யசவந்தர் பிறந்த ஊருக்கு மிக அருகிலிருந்த ஒரு நகரம். அவருடைய உறவினர்களில் யாரோ ஒரு கிழவியின்மேலிருந்த இரக்கத்தினுல் அவர் பணம் அனுப்பிக்கொண்டிருந்திருக்கவேண்டும். என்றுவது ஒரு நாள் யசவந்தரின் வாழ்க்கையைப்பற்றி நான் தெரிந்துகொள்ள வேண்டுமானுல், முதலில் அந்த அம்மாளேயே பார்க்கவேண்டும் என்று தீர்மானித்தேன்.

அவளுடைய கட்டைவிரல் இரேகையிலிருந்த ஐந்தாறு இரசீதுகளை நான் எடுத்துப் பார்த்தபோது, ஒவ்வொன்றிலும் ''சம்புபட்டன்'' என்ற ஒரே ஆளின் சாட்சியம் இருந்தது. கட்டைவிரல் குறிக்குச் சாட்சி இருக்க வேண்டும். நான் அனுப்பிய பணத்திற்கும் அதே ''சம்புபட்டன்'' சாட்சியாக இருந்தான். அவன் பார்வதியம்மாளின் உறவினுக இருக்கலாம். என் சிந்தனை அதில் தடைப்பட்டு நின்றபோது, எனக்கு வந்த இரசீதில் காணப்பட்ட கட்டைவிரல் குறியைப் பார்த்தால் அது வேருக இருந்தது! அங்கே எழுதியிருந்த வாசகம் வழக்கம் போல, ''இது பார்வதியம்மாளின் இடதுகைப் பெருவிரல் குறி'' என்று இருந்தபோதிலும் பழைய எல்லாக் கட்டைவிரல் குறிகளையும் பார்க்கும்போது இது வேறொரு விரலின் குறி என்பது தெரிந்தது. பழைய குறிகளில் சக்கர இரேகைகள் இருந்தன. இதில் சங்கு வடிவில் அமைந்த இரேகைகள்! இடதுகைக்குப் பதில் வலதுகைக் கட்டைவிரலைப் பயன்படுத்தியிருக்கலாமோ என்று நினைத்தால் அப்படியும் தோன்றவில்லை. இப்படி ஏன் ஆயிற்று? என்னும் சந்தேகம் எனக்கு ஏற்பட்டது. மேலும், ஒரு மாதம் பொறுத்திருந்தேன். மீண்டும் பணத்தை அனுப்பினேன். இரசீது குறித்த காலத்தில் வந்தது. அதிலும் சம்புபட்டனின் சாட்சிக் கையெழுத்திருந்தது. சங்கு இரேகையை உடைய கட்டைவிரல் குறியே வந்திருந்தது. அப்படியானுல் யசவந்தராயர் அனுப்பிய பணத்தைப் பெற்றுக்கொண்ட ஆள் வேறு, இப்போது பணத்தைப் பெற்றுக்கொள்ளும் ஆள் வேறு என்று ஆகிறதல்லவா? இந்தச் சம்புபட்டன் நம்பத் தகுந்தவன் அல்ல என்று எனக்குத் தோன்றியது. அப்படிப்பட்டவன் கையில் நான் அனுப்பும் பணம் போய்ச் சேர்கிறது. நானுவது புதியவன். அதே ஆள், பல ஆண்டுகளாகப் பிறந்த ஊரையே பாராத யசவந்தரையும் வஞ்சிக்கவில்லை என்று எப்படிச் சொல்லமுடியும்? இது உறுதியாகிற வரையில் பணத்தை அனுப்பக்கூடாது என்று முடிவு செய்தேன். அடுத்த

மாதம் பணத்தை அனுப்பவில்லை. மற்ற மூவருக்கு மட்டும் பணம் அனுப்பினேன். அதற்குள்-சுவாதி வரை போய் வரவேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டாலும்கூட மழைக்காலம் குறுக்கிட்டது. மழைக்காலத்தில் மலைநாட்டில் பிரயாணம் செய்வது நல்லதல்ல. எவ்வளவோ இடங்களில் பஸ் ஓடாது, நடந்தே செல்லவேண்டியிருக்கும். நான் ஏழு, எட்டு நாட்கள் ஓய்வு எடுத்துக்கொண்டு இந்த வேலையைச் செய்யவேண்டியிருக்கும் என்பதால் சும்மாயிருந்தேன். இப்படியே இரண்டு மாதங்கள் கழிந்தன. அப்போது எனக்கு எச்சரிக்கைக் கொடுக்கும் ஒரு கார்டு அங்கிருந்து வந்தது:

''மதிப்பிற்குரியவரே!

நீங்கள் ஜூலை மாதத்தில் யசவந்தராயரின் சார்பில் அனுப்பி வைத்த உதவித்தொகை ரூபாய் இருபத்தைந்து வந்து சேர்ந்தது. யசவந்தராயர் நலமாகவே இருக்கிறார் என்று நம்புகின்றேன். அவர் இப்போது எங்கு இருக்கிறார்? ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களில் பணம் அனுப்புமாறு உங்களுக்குக் கூறியிருக்கிறார் என்றும், நீங்கள் ஏதோ காரணத்தால் மறந்திருக்கலாம் என்றும் நினைத்து இக்கடிதம் எழுதப்படுகிறது. நீங்கள் தவறாகக் கருதக் கூடாது. இந்த மாதம், மற்றும் இரண்டு மாதங்களின் பணத்தைச் சேர்த்து எழுபத்தைந்து ரூபாய் அனுப்பினால் உங்கள் உதவியை மறக்கமாட்டேன். இல்லாவிட்டால் யசவந்தராயரின் இப்போதைய முகவரியைத் தெரிவித்தால் அவருக்கு எழுதுகிறேன். அவர் உங்கள் வீட்டிலேயே இருந்தாரானால், உங்கள் பாட்டி பார்வதியம்மாள் சாவதற்கு முன்னால் ஒரு தடவையாவது உங்களைப் பார்க்கத் துடிக்கிறாள் என்று தெரிவியுங்கள்'' என்று எழுதியிருந்ததுமட்டும் இன்றி, கீழே ''இந்தக் கட்டைவிரல் குறி பார்வதியம்மாளினுடையது; இந்தக் கடிதம் பார்வதியம்மாள் சொல்ல எழுதியது'' என்ற குறிப்பும் இருந்தது.

யசவந்தராயரின் பாட்டி பார்வதியம்மாள் என்னும் தொடர்பு எனக்கு மகிழ்ச்சியை அளித்தது. அந்த அம்மாள் அவருடைய தந்தையின் தாயாக இருக்கமாட்டார். தாயின் தாயாக அல்லது வேறு ஏதாவது இரத்த சம்பந்தமுள்ள உறவாக இருக்கலாம். யசவந்தராயருக்கு, அவர் இறக்கும்போது வயது அறுபத்தைந்து. அப்படியானால் இந்த கிழவி முப்பது வருடங்களாவது மூத்தவளாக இருக்கவேண்டும். ஆனால் அவளைப் பார்ப்பதென்றால் அதை உடனே செய்தாகவேண்டும். அப்போது

அக்டோபர் மாதம். மழையின் வேகம் அதிக அளவு குறைந்து இருந்தது. அவ்வப்போது வெயில் வீசியது. வானத்தில் வெண் முகில்கள் குதித்து ஓடின. நவராத்திரி கழிந்த மறுநாளே—நான் 'சிர்சி'க்குப்போய் அங்கிருந்து 'சுவாதி'க்கும் போய், அருகி லுள்ள 'பெனகனஹள்ளி'யின் முதல் வீட்டைத் தேடிப் பார்க்க வேண்டும்; போனால் அந்தக் கிழவியைச் சந்திக்கலாம்; அப்போது யசவந்தராயரின் இளமை வாழ்க்கையைப்பற்றி வேண்டிய அளவு தெரிந்துகொள்ளலாம்—என்றெல்லாம் எண்ணமிட் டேன். உடனடியாக அவளிடமிருந்து வந்த கடிதத்திற்குப் பதில் எழுதவேண்டுமல்லவா? அவளுக்குப் பணம் அனுப்ப வேண்டும். இதைமட்டும் என் மனம் ஒப்புக்கொள்ளவில்லை. மற்றும் ஒரு சந்தேகம் எழுந்தது, ''பார்வதியம்மாள் செத்திருக் கலாம்'' என்பதே அது. அவளுடைய பணத்தைப் பெற்றுவந்த சம்புபட்டன் அந்தப் பணத்தின்மேலிருந்த ஆசையால், செத்தவ ளுடைய கட்டைவிரல் கிடைக்காததால் வேறு யாரோ ஒரு கிழவியின் கட்டைவிரலை ஒற்றியிருக்கவேண்டும். அப்படியென் றால் பணத்தை அனுப்பக்கூடாது என்று தோன்றியது. அப்படி யானால் ''இறப்பதற்கு முன்னால் அந்தக் கிழவி யசவந்த ராயரைப் பார்க்க விரும்பியது உண்மையா? ஊரை விட்ட அவர் எத்தனையோ ஆண்டுகளாக அவளைப் பார்க்கவில்லை. கேவலம் பேச்சுக்காக, செத்தவள் சாகவில்லை என்று காட்டுவ தற்காக, அப்படி எழுதியிருக்கலாம். பணம் அனுப்பியவர் யசவந்தரல்ல; அவருடைய சார்பில் நான், அதாவது முன்பின் தெரியாதவன் என்பதனால் சம்புபட்டன் துணிவோடு வேறொரு வரின் கட்டைவிரலை ஒற்றிவைத்து ஏமாற்றுகிறான்'' என்ற முடிவுக்கு வந்தேன்.

நான் நவராத்திரிக்காகக் காத்திருந்தேன். ஒரு சொற்பொழிவு நிகழ்த்துவதற்காக 'சிர்சி'க்கு வரவேண்டும் என்று அங்கிருந்த நண்பர் ஒருவரிடமிருந்து கடிதம் வந்தது. அந்த அழைப்பை உடனே ஏற்றுக்கொண்டேன். அங்கிருந்து இருபது அல்லது இருபத்தைந்துமைல் தூரத்துக்குள் சுவாதி இருந்தது என்பது எனக்குத் தெரியும். சுவாதி பழைய வரலாற்றுச் சிறப்புடைய ஓர் இடம். பெனகனஹள்ளி அங்கிருந்து அதிகத் தொலைவில் இராது. இந்த வாய்ப்புக் கிட்டினால் மலை நாட்டில்—குன்றுகளுக் கும் பாறைகளுக்கும் இடையே சுற்றித்திரியும் ஒரு நல்வாய்ப்புக்

கிடைத்தது போலாகும்; அது எனக்கு மகிழ்ச்சியையே அளிக்கும்.

நவராத்திரி கழிந்த பிறகு செல்லலாம் என்று எண்ணினேன்; அது தொடங்கியதுமே சிர்சிக்குப் போனேன். வழக்கம்போல அங்கே இந்த ஆண்டும் நவராத்திரி விழாவிற்குச் சொற்பொழிவு களை ஏற்பாடு செய்திருந்தார்கள். இரண்டு நாட்கள் நான் ஒரு நண்பரின் வீட்டில் தங்கியிருந்து இரண்டு சொற்பொழிவுகளை முடித்தேன். என்னுடைய நல்லவேளை, மழைக்காலம் தன் வேகத்தைக் குறைத்துக்கொண்டது. ஒரு நாளைக்கு ஒருமுறை அல்லது இரண்டு நாட்களுக்கு ஒருமுறை அரை மணி நேரம் அல்லது ஒரு மணி நேரம் சிறு சிறு தூறலாக விழுந்து மறைந்து கொண்டிருந்தது. அந்தப் பகுதியில் குன்றுகளும் பாறைகளும் பச்சைப் போர்வை போர்த்துக்கொண்டு மிகவும் அழகாகத் தோற்றமளித்துக்கொண்டிருந்தன. எங்கே பார்த்தாலும் காடும் மேடும். அவை இல்லாத இடங்களில் பச்சைப் பசேலென்ற புல்லின் போர்வை. எங்கே பார்த்தாலும் சலசலவென ஓடும் ஓடைகள், கால்வாய்கள், கால்வாய்கள் ஒன்று கலந்து உண்டா கிய குளங்கள், ஏரிகள், அங்கிருந்து பொங்கிப் பெருகும் வெள்ளம். எந்தப் பகுதிக்குப் போனாலும் ஓடும் நீரின் 'சல சல' ஒலி காதில் இனிமையை ஊட்டியது. அத்தகைய காட்சிகள் எனக்கு எப்போதுமே மனமகிழ்ச்சியைத் தரும். என் மனம் கவர்ந்த வடிவம் மெல்ல நடந்து, அங்குமிங்கும் தன் பார்வையை ஓட்டி வரவேற்புத் தருவதைப்போலக் கிடந்தது. இந்த மலைநாடு என்னைவிடச் சோம்பல் மிகுந்த மக்கள் நிரம்பிய ஒன்று. மக்க ளுடைய போக்குக்கும் இங்குள்ள கன்று காலிகள் போக்கிற்கும் ஒற்றுமை மிகுதி. அதிலும் மலை நாட்டின் எருமைகள்! மழை காலம் வந்தால் மேய்ச்சலுக்குக் குறைவேயில்லை. ஏழைக் குடி யானவனின் வற்றிய எருமைகள், அந்தப் பசுமையை மேய்ந்து வயிற்றை நிரப்பிக்கொண்டு எங்கே குட்டை தென்படுகிறதோ அங்கே விழுந்து புரண்டு 'ஜலஸ்தம்பனம்' செய்கின்றன. சுறுசுறுப்பில்லா எருமை நம்மைப்போலவே ஜடமான வாழ்க்கை நடத்துகிறது. ஆனால் அவைகளின் மனமும்கூட ஜடமாய் இருக்குமா? இல்லாமலும் இருக்கலாம். அவற்றிற்கும் இன்ப மும் அமைதியும் தேவை. நீரைக் கண்டால் அவைகளுக்குத் தான் எவ்வளவு மகிழ்ச்சி! அதில் இறங்கி, தலையைமட்டும் தூக்கி, மிதந்தபடியே நெடுநேரம் கழிப்பதென்றால் அவையும்

கூட இரசிகத் தன்மையுடையனவாகவே இருக்கவேண்டும். அதிலும் வெயில் மிகுதியானால் அவை இறங்கியுள்ள குளமோ, குட்டையோ அவற்றிற்கு மிகவும் இன்பமயமாகத் தோன்று கின்றன. மேய்ச்சலோ, தீனியோ எதுவுமே வேண்டாமென்று நீரிலே புரளுகின்றன. நெடுநேரம் கண்ணைமூடி உறங்கு கின்றன. 'இதுவே இன்பம்,' 'இதுவே இன்பம்' என்று நினைத்து 'நிர்விகல்ப சமாதி'க்குச் சிறிதும் குறைவில்லாத ஆனந்தத்தை அனுபவிக்கின்றன. சிர்சிக்கு வந்தபிறகு எனக்கும் அதே நோய் பற்றிக்கொண்டது. உண்போம், தின்போம், உறங்குவோம் என்னும் மந்திரத்தை ஜெபிக்கும் ஆசை ஏற்பட்டது. ''சம்பு பட்டனுடைய சாட்சி உண்மையா பொய்யா? பார்வதியம் மாள் இறந்தது உண்மையா, அல்லவா?'' என்னும் எண்ணமே தேவையற்றதுபோல் தோன்றியது. யசவந்தராயர் தேடிய பொருள், அவருடைய பெயரில் கொடுக்கவேண்டிய தண்டத்துக் குப் போய்விட்டது. எனக்கு எதற்கு இந்தத் துப்பறியும் வேலே என்று ஒருமுறை எனக்குத் தோன்றியதும் உண்டு. அவருடைய அன்புக்குப் பாத்திரமான அந்தக் கிழவி எப்படிப் பட்டவள்? அவர் செலுத்தப் புறப்பட்ட கடன் எத்தகையது என்னும் ஒரே ஒரு ஆர்வம் மட்டும் இல்லாதிருந்தால், சிர்சியி லேயே நான்கு நாட்கள் நான் ஒரு எருமையைப்போலக் கழித் திருப்பேன். சுவாதியிலிருந்து சிர்சிக்கு வந்த யாராவது கண்ணில் படுகிறார்களா என்று பார்த்து, தூரத்திலிருந்தே கேட்டு, திரும்பி விடுவோம் என்றும் எண்ணினேன். என்றாலும் கடைசியில் மனச்சாட்சி கேட்கவில்லே. புறப்பட்டுவிட்டேன்.

சுவாதிக்குப் போனேன். இரட்டை மாட்டு வண்டியில், ஓர் இரவெல்லாம் முதுகெலும்பை முறித்துக்கொண்டு சென்றேன். அந்த வண்டியில் செல்வதைவிட நடந்துபோவது எவ்வளவோ இன்பமானது என்றும் எனக்குத் தோன்றியது. அங்கே போன பிறகும் நடை தப்பவில்லே. அங்கிருந்து நான்கு மைல் தொலே வில் 'பெனகனஹள்ளி' இருந்தது. காட்டு வழியே செல்வதும், மழை நாட்களில் வண்டி போக முடியாததும், குழியும் சேறும் நிறைந்ததும் ஆகிய ஒரு படுமோசமான பாதை. ஒரு மைலுக்கு ஒரு முறைகூட மனித முகம் கண்ணில் படாது. தப்பித்தவறி எதிரே வருபவரும் ''ஓ, இதோ வந்துவிட்டது பெனகனஹள்ளி'' என்பார். நடந்து நடந்து கால் ஒடிந்தாலும்கூட ஊருமில்லே, பாழுமில்லே. அத்தகைய மலே நாட்டில் 'கிராமம்' என்பது

மணியக்காரரின் குறிப்பேடுகளில் மட்டுமே காணப்படும். இந்த மலையோரத்தில் ஒரு வீடு; அந்தப் பள்ளத்தாக்கின் அடியில் ஒரு வீடு; ஒரு வீட்டுக்கும் மற்றொன்றிற்கும் இடையே கால் அல்லது அரைமைல் தூரம். என் வழியில் கண்ட மாடு மேய்த்துக் கொண்டிருந்த ஒரு கிழவன் ''பெளகனஹள்ளி, இதுவே'' என்றான். அப்போது நடுப்பகல், பச்சைப் புல்லின்மீது காலை நீட்டி உட்கார்ந்து அவன் சாப்பிட்டுக்கொண்டிருந்தான். ''பெளகனஹள்ளி இதுவே'' என்றான். ஒரு வீடுகூட கண்ணில் படாத இடத்தில் உட்கார்ந்துகொண்டு ''இதுவே ஊர்'' என்றதைக் கேட்டு எனக்கு வியப்பாயிருந்தது. அவனுடைய வீடாவது அங்கே யிருக்கவேண்டுமல்லவா? மாடு, கன்றுகள் இருக்கின்றன; அவன் இருக்கின்றான்; ஆகவே ஊரும் ஒன்று இருக்க வேண்டும். ''உண்மையில் இதுதான் பெளகனஹள்ளியா? இங்கே பிராமணர்கள் வீடுகள் இருக்கின்றனவா?'' என்று கேட்டேன். இன்னும் முன்னால் கையைக் காட்டினான். எதிரில் காணப்பட்ட மூங்கில் புதருக்கு இடையில், ஊருக்குப் பெயர் கொடுத்த பெளகனின் (விநாயகன்) கோவில் ஒன்று உள்ளதாம். பிள்ளையார் சதுர்த்தியன்று மக்கள் ''விநாயகனே விநாயகனே வினையைத் தீர்க்க வா, வா'' என்று கொண்டாடும் பிள்ளையார் கோவிலே அந்த ஊருக்கு அந்தப் பெயரைக் கொடுத்திருந்தது.

''சம்புபட்டர் என்பவருடைய வீடு இங்கே இருக்கிறதா?'' என்று கேட்டேன்.

''முதல் வீட்டுக்காரரா?'' என்று கேட்டான் அவன்.

''ஆமாம், ஆமாம்...அவர்தான்.''

''முதல் வீடு இரண்டு உண்டு; மேல முதல் வீடு, கீழ முதல் வீடு. உங்களுக்கு யார் வேண்டும்? சம்புஹெக்கடேயா? ராம ஹெக்கடேயா?''

''ஹெக்கடேயல்ல; சம்புபட்டர்.''

''அப்படியானால் மேல முதல் வீடுதான்; இந்த மேட்டிலிருந்து இறங்கியதும் வரும். கீழ முதல் வீடு இன்னும் தொலைவிலிருக்கிறது. ஆனால் ஹெக்கடேயல்ல...பட்டர் என்கிறீர்கள்...''

''அப்பா, புண்ணியவானே! எனக்கு நடந்து நடந்து போதும் என்று ஆகிவிட்டது. ஹெக்கடேயாக இருந்தால் ஹெக்கடே; பட்டராக இருந்தால் பட்டர். முதலில் அருகிலுள்ள பிராமணர் வீடு ஒன்றை எனக்குக் காட்டு. உனக்கு மிகவும் புண்ணியம்.''

''புகையிலை இருக்கிறதா, முதலாளி?''

''நான் புகையிலேயோ, வெற்றிலேயோ மெல்லுவதில்லை.''

''நானே வந்து காட்டவேண்டுமா? இதெல்லாம் புத்தியே யில்லாத மாடுகள், எங்காவது போய்விட்டால்?''

பையிலிருந்து இரண்டணுவை யெடுத்து, ''ஐயா, ஒரே ஒரு உதவிசெய். நான் வெளியூர்க்காரன். உடனடியாக ஒரு பிராமணர் வீட்டைக் காட்டு. அங்கிருந்து கேட்டுக்கொண்டு, கூரை வீடோ, குடிசை வீடோ, எனக்கு வேண்டியவர்களைத் தேடிக்கொண்டு போகிறேன்.''

''நிஜமாகவே அதைக் கொடுப்பீர்களா?'' என்றான் கிழவன்.

''கொடுத்தே விட்டேன், வாங்கிக்கொள். வீட்டைக் காட்டுவதற்குப் பதில் புலியிருக்கும் குகையை மட்டும் காட்டாதே.''

''நீங்கள் நகரத்தார் என்று நினைக்கிறேன். புலி என்றால் அவ்வளவு பயமா? மனிதனைப் புலி என்ன செய்யும்?'' என்று சொல்லிக்கொண்டே தடியைக் கையில் எடுத்தான். ''வாருங்கள்'' என்று சொல்லி எனக்கு வழி காட்டலானான். நான் அவனையே பின் தொடர்ந்தேன். அகலமாயிருந்த பாதையை விட்டு, சிறிய கால் வழியில் மூங்கில் புதர்களுக்கு நடுவே அவன் என்னை அழைத்துச் சென்றபோது நான் புலிகளை யெண்ணியே நடுங்கினேன். வழியில் இடிந்து கிடந்த கோவில் ஒன்று இருந்தது; அதன் கூரை இடிந்து விழுந்து உள்ளேயிருந்த பிள்ளையாருக்குத் தினமும் மழை நீரால் 'அபிஷேகம்' நடந்து வந்தது. கிழவன் பிள்ளையார் கோவிலுக்கு முன்னால் நின்று வணங்கி விட்டு, அந்த மேட்டிலிருந்து இறங்கத் தொடங்கினான். அவன் கையில் தடியிருந்தது. களிமண் சேற்றில் அதை ஊன்றி, ''வாருங்கள், வாருங்கள்'' என்று சொல்லிக்கொண்டே இறங்கினான். என் காலில் சேறு செருப்பாக ஒட்டிக்கொண்டது! அங்குமிங்கும் எங்கேயும் சேறு; தொட்ட இடமெல்லாம் சகதி! இங்கே காலை வைத்தால் அது அங்கே போய் நிற்கிறது. வழுக்கல் வேறே! இரண்டொரு முறை வழுக்கி விழுந்து சேறு 'அபிஷேகம்' ஆயிற்று. சம்புபட்டனைச் சபித்தேன். பார்வதியம்மாளைத் திட்டினேன். சிறிது நேரத்தில் வழுக்கு நிலத்தைக் கடந்தோம். சகதி நிரம்பிய ஒரு முற்றத்தை அடைந்தோம், அந்தக் கிழவன் என்னை அழைத்துக்கொண்டு போனது ஒரு வீட்டின் பின் வாயிலுக்கு! மாட்டுக் கொட்டகைக்கும் அவனுக்கும் உறவு! அங்கேயே நின்று, ''எஜமானே! யாரோ வெளியூர்க்காரர் வந்திருக்கிறார்'' என்று கத்தினான். அந்தக் கத்தலைக் கேட்டு, நடுத்தர வயதுள்ள ஒருவன்

நானிருந்த இடத்துக்கே வந்தான். தலை முதல் கால் வரை என்னைப் பார்த்தான். நானும் அப்படியே செய்தேன். உலர்ந்த உடம்பு, சவரத்தைக் காணு முகம். கோவணத்தைவிட்டால் வேறு ஆடை அணிந்திருக்கவில்லை. அந்த வீட்டில் எனக்குப் பகல் சோறு கிடைக்கும் என்ற நம்பிக்கை போயே போய் விட்டது.

''யார் நீங்கள்? யாரைப் பார்க்கவேண்டும்? எங்கிருந்து வந்தீர்கள்?'' என்று நான்கைந்து கேள்விகளை ஒரேயடியாகக் கேட்டான். ''முதல் வீடு என்பது இதுதானு? இந்தக் கிராமத்தில் பார்வதியம்மாள் என்ற கிழவி இருக்கிருள் அல்லவா? ஒரு வேலையாக அவரைப் பார்க்கவேண்டுமென்று வந்திருக்கிறேன்'' என்றேன் நான்.

''மேல முதல் வீடு இது. இங்கே பார்வதி என்னும் கிழவி யாருமில்லை. எதற்காக வந்தீர்கள்? மிகவும் தொலைவிலிருந்து வருகிறீர்களா? அவருடைய உறவா?'' என்று கேட்டான், அந்தப் புண்ணியவான். என்னை அங்கேயே நிறுத்தி வைத்து பேசிக் கொண்டிருக்கிறுன். இடைவிடாமல் கேள்வி கேட்டுத் தொலைக்கிறுன். சேறு பூசிக்கொண்டு பார்க்கச் சகிக்காமலிருந்த என்னைத் தன் வீட்டுக்குள் அழைக்கும் எண்ணம் அவனுக்கு இருந்ததாகத் தெரியவில்லை. ''அப்படியானுல் போகிறேன்'' என்று சொல்லி நான் போகத் தயார் ஆனேன். என்னுடைய நல்லகாலம் ஓர் அங்குலக் கரையுள்ள அங்கவஸ்திரம் போர்த்துக்கொண்டிருந்த ஒரு கிழவர்—அதே வீட்டைச் சேர்ந்தவராக இருக்கவேண்டும்—அங்கே வந்து, ''ஐயா, உனக்கு அறிவேயில்லை, யாரோ வெளியூர்க் காரர் வழி கேட்டுக்கொண்டு வந்தால், தோட்டத்து வாயிலிலேயே நிறுத்தி வைத்துக்கொண்டு கதை படிக்கிருய்'' என்று கோபித்துக்கொண்டார். என்னைப் பார்த்து ''வாருங்கள், வாருங்கள், உள்ளே வாருங்கள். பாவம், இந்தத் திம்மன் உங்களை, மாடு கன்றுவரும் வழியிலேயே அழைத்துக்கொண்டு வந்து சேற்றில் விழச் செய்துவிட்டானே! மாட்டுக்கு இருக்கும் புத்திதான் இவனுக்கு'' என்று அன்போடு பேசி, வீட்டுக்குள் அழைத்துக்கொண்டு போனுர். உட்புறம் தூய்மையாக இருந்தது. அந்தப் பெரியவரின் பெயர் சங்கர ஹெக்கடே. கோவணம் உடுத்திக்கொண்டிருந்தவன் அவருடைய திருமகனுகிய சம்பு ஹெக்கடே. தந்தையால் கோபித்துக்கொள்ளப்பட்ட மகன், உள்ளே போன பிறகு எனக்காகப் பாயை விரித்தான்; செம்பிலே

நீர் கொண்டுவந்து வைத்தான். ''வாருங்கள், கால் கழுவிக் கொள்ளுங்கள்'' என்று உபசாரம் செய்தான். நான் அங்கே நின்றபடியே ''அங்கே வருவதற்கு முன்பு இந்தச் சேற்றைக் கழுவ வேண்டும் அல்லவா?'' என்று சொன்னேன். ஆடை மாற்றிக் கொள்ளவேண்டும், குளிக்கவேண்டும், பையிலும் போதுமான அளவு சேறு அப்பிக்கொண்டிருக்கிறது என்பதனுல் முன்னும் பின்னுமாகப் பார்த்துக்கொண்டே நின்றேன். அந்தக் கிழவர் தாமே உள்ளே போய், கையில் இரண்டு வேட்டிகளை எடுத்துக் கொண்டு வந்தார். ''பிராமணர்தானே?'' என்று கேட்டார். தலையை ஆட்டினேன், ''குளித்துவிட்டே வாருங்கள், உங்களுக்கும் திருப்தியாக இருக்கும். சம்பு, இந்த வேட்டியைக் கொண்டுபோய், குளியலறையில் வைத்துவிட்டு வா'' என்ருர். வெளி வாயிலிலிருந்து குளியல் அறைவரையில் என்னுடைய பயணம் மிகவும் வேடிக்கையாக இருந்தது, நான் நின்ற இடமெல்லாம் சேறு; முற்றத்தைக் கடப்பதற்காகப் போட்டிருந்த மரப்பலகைகள் மேலெல்லாம் சேறு படிந்தது. கிணற்றுக்கும் முன்னுலிருந்த துவைக்கிற கல்லுக்கும் சேற்றைத் தடவினேன். ஒருவாருகக் குளியலறையை அடைந்தேன். ஒரு பானையில் தண்ணீர் இருந்தது. தவலையில் நீர் கொதித்துக் கொண்டிருந்தது, உள்ளே இருளும் கவிந்திருந்தது. அங்கே அபிஷேகத்தைத் தொடங்கியே விட்டேன். மலை நாட்டு வீடுகளில் அடையக்கூடிய இன்பமே அப்படிப்பட்ட வெந்நீர்க் குளியலில்தான் என்பதை நான் முன்னமே யறிந்திருந்தேன். பையினுள் இருந்த துணிகளிலும் சேறு அப்பிக்கொண்டிருந்தது. அவற்றையும் அலச வேண்டியதாயிற்று. வீட்டுக்காரர் கொடுத்த புதிய வேட்டியை அணிய விருப்பமில்லாமல் இருந்தாலும் குளித்த பிறகு அவையே என் உதவிக்கு வந்தன. சிவப்புக் கரை போட்ட இரண்டு வேட்டிகளை அவர் கொடுத்திருந்தார். திருமணம், உபநயனம் முதலிய நேரங்களில் பழங்காலத்துப் புரோகிதர்கள் அத்தகையவற்றையே உடுத்து வந்தார்கள். சிர்சி, எல்லாபுரம் பகுதிகளில் மக்கள் இப்போதும் அவற்றையே உடுத்துகிருர்கள். அத்தகைய வேட்டி யொன்றை உடுத்திக் கொண்டு மற்றென்றை மேலே போர்த்துக்கொண்டு குளியலறையை விட்டு வெளியே வரும்போது எனக்கே சிரிப்பு வந்தது. நானும் ஒரு புரோகிதன் ஆனேன் அல்லவா என்பதே அதற்குக் காரணம்.

வீட்டுக்குப் பெரியவர் என்னுடைய வேடத்தைக் கண்டு மகிழ்ந் தாரோ என்னவோ! ''நீங்கள் உடுப்பி பக்கத்தவர்கள் என்று சொன்னீர்கள் அல்லவா? பிராமணர்களான எங்களுக்குக் கரை யில்லாத வேட்டி, பாழும் சட்டை, கால் சட்டை முதலிய எது வுமே பிடிப்பதில்லை. இப்போது பாருங்கள், நீங்கள் எப்படித் தோற்றமளிக்கிறீர்கள்? கோபித்துக்கொள்ள வேண்டாம். உங்களைப் பார்த்தபோது எந்த மதத்தினரோ என்னவோ என்று யோசித்தேன். இந்த உடையில் என்றால் நீங்கள் பிராமணரே என்பது தெள்ளத்தெளியத் தெரிகின்றது'' என்றார். நானும் சிரித்தேன். அன்றைய பேச்சில் அவரே முக்கிய பங்குபெற்றார். சுமார் நாற்பது வயதுடைய அவருடைய ஒரே பிள்ளை தந்தையின் முன்னால் ஊமையாயிருந்தான். அவன் இயல்பே வேறு; அந்த பெரியவரின் போக்கே வேறு. அவருக்கு எழுபது வயது ஆகியிருக் கலாம். நிறைந்த முகம், தலை முழுவதும் நரைத்திருந்தது, சிறு தாடி, அடக்கமான மீசை, அதுவும் வெளுத்திருந்தது. அவ ருடைய குலம், ஒழுக்கம் ஆகியவற்றின் களை முகத்தில் தெரிந் தது. அவருடைய பேச்சில் அடக்கம் இருந்தது. முன்பின் தெரி யாதவனாகிய என்னிடத்திலும் அன்பு இருந்தது. முதலில் என்னை உண்ணச் செய்தார். ஏழைகள் வீடு; காய்கறிகள் ஏதும் அதிக மாக இல்லை. ''மனிதனுக்குப் பசியே ருசி; உங்களுக்கு மிகவும் பசியாக இருக்கவேண்டும். முதலில் தாகம் தீர்ப்பதற்கு எதை யாவது கொடுத்து, ருசியைப் பாழாக்கக்கூடாது என்றே நேராகச் சாப்பாட்டுக்கே அழைத்துக்கொண்டு வந்தேன்'' என்று மன்னிப்புக் கேட்கும் குரலில் பேசினார். சாப்பாடும் நன்றாக இருந்தது. அவர் சொன்னதுபோல் என் பசியே அதற்கு முக்கிய காரணமாக இருந்திருக்கலாம். பலாக்காய் கறி, மாங்கொட் டைக் குழம்பு, அப்பளம், வற்றல், மோர்—இவ்வளவும் இருந் தன. நாங்கள் சாப்பிட்டு முடித்தோம். வெளியே வந்தோம். வெற்றிலைத் தட்டை என் முன்னால் இட்டார். நானும் வெற்றி லையை மெல்லத் தொடங்கினேன். ''உங்களுக்குக் கீழ் வீட்டுப் பார்வதியைப் பார்க்கவேண்டுமல்லவா? போகலாம், நேரமிருக்கிறது. ஒரு சிறு தூக்கம் போடுங்கள். வந்த களைப்பு முதலில் தீரட்டும். என்ன வேலைக்காக வந்தீர்களோ என்ன வோ?'' என்று கூறி அவர் என்னைப் படுக்குமாறு வற்புறுத்தினார். ஒரு பக்கம் களைப்பு; இன்னொரு பக்கம் வயிறு நிறைந்த உணவு; இரண்டும் சேர்ந்து 'அப்படியே செய்' என்று எனக்கு அறிவுரை

கூறின. படுத்துவிட்டேன். முன்னாள் இரவு வண்டிப் பயணத்தில் எனக்குத் தூக்கமே வரவில்லை. ஆகவே இப்போது நான் மிகவும் ஆழ்ந்து தூங்கியிருக்கவேண்டும். எழுந்து பார்க்கிறேன்— சூரியன் மேற்கே மலைச்சரிவு ஒன்றில் இறங்கிக்கொண்டிருந்தான். ''என்ன, நான் இவ்வளவு நேரம் தூங்கி விட்டேனே'' என்று வியப்படைந்தேன். அதற்குள் வீட்டு எஜமானர் வந்தார். கூடவே ஒரு செம்பு நிறைய வெந்நீரும் வந்தது. ''முகத்தைக் கழுவிக்கொள்ளுங்கள்'' என்றார் அவர். கழுவிக்கொண்டேன். என் எதிரே சிற்றுண்டியைக் கொண்டுவந்து வைத்தார்கள். ஒரு வெண்கலச் செம்பு நிறைய 'கஷாயம்' வந்தது. ஒரு தட்டில் சிறு வாழைப்பழங்களும், பலாச்சுளைகளும் இருந்தன. அவருக்கும் அதே போலச் சிற்றுண்டி வந்தது. ''இதிலேயே நான் வந்த வேலை ஆனதுபோலத்தான்'' என்று நான் சொன்னேன். அவர் சிரித்தார். ''மராத்தியில் ஒரு பழமொழியிருக்கிறதாம். 'முதலில் போட்டோபா, அதன் பிறகு விட்டோபா*' என்று. அதனால் முதலில் பலகாரம் ஆகியேவிட்டது.''

அதன் பிறகு நான் ''இனியாவது எனக்குப் பார்வதியம்மாளின் வீட்டுக்கு வழிகாட்டுகிறீர்களா? நீங்கள் வரவேண்டியதில்லை. மிகவும் வயதானவர். உங்கள் மகனையோ அல்லது ஓர் ஆளையோ அனுப்பினால் போதும்'' என்று வேண்டினேன். இதுவரையில் நான் வந்த நோக்கத்தைப்பற்றி, அவருடைய மகனைப்போல துருவித் துருவிக் கேட்கும் வழிக்கே அவர் போகவில்லை. முதலில் மேம்போக்காக, ''உங்களுக்கு எந்த ஊர்?'' என்று மட்டும் கேட்டார், நான் சொன்னேன். என்னுடைய பசி, களைப்பு எல்லாம் தீர்ந்த பிறகு பேசிக்கொள்ளலாம் என்று தம்முடைய கேள்விகளை அடக்கி வைத்திருக்கலாம். நான் சட்டென்று எழுந்து வெயிலில் காயப்போட்டிருந்த துணிகளைக் கொண்டுவந்தேன். அவர் கொடுத்திருந்த ஆடைகளை அவிழ்த்துவிட்டு என்னுடைய சொந்த உடைகளை அணிந்துகொண்ட பிறகு, அவர், ''வரம்பு மீறிப் பேசுவதாக நீங்கள் நினைக்கக்கூடாது. உங்கள் ஊர் அதிகத் தொலைவில் இருக்கிறது. உடுப்பி பக்கம் என்றாலே அதிகத் தொலைவுதான். இந்த ஊருக்கும் அதற்கும் எந்தவித சம்பந்தமும் காணவில்லை. உங்கள் பெரியவர்களில் யாராவது இந்தப் பக்கத்

* ''முதலில் வயிற்றுப்பாடு, பிறகு வழிபாடு'' என்று தமிழில் இதை மொழி பெயர்க்கலாம்.

திலிருந்து அந்தப் பக்கம் போனவர்களா? இல்லாவிட்டால் பார்வதியை நீங்கள் எப்படி யறிவீர்கள்?'' என்று கேட்டார்.

''எனக்காக நான் வரவில்லை. யசவந்தராயர் என்னும் ஒரு நண்பருக்காக நான் வந்தேன். அவர் இந்தப் பக்கத்தைச் சேர்ந்தவர். அவருக்கும் அந்தக் கிழவிக்கும் ஏதோ தொடர்பு இருக்கவேண்டும். அந்தக் கிழவி எப்படி இருக்கிருள் என்று தெரிந்து எழுதவேண்டும் என்று தெரிவித்திருந்ததால் ஒரு வேலையாக, சிர்சிக்கு வந்த நான் இந்தக் கிராமத்தின் கோடியையும் பார்த்துவிடலாம் என்று வந்தேன்'' என்பதாக உண்மை கலந்த பொய்யைச் சொன்னேன். என் கருத்தில் இருந்ததை இருந்தபடியே சொன்ஞல், அந்த இரண்டு கட்டைவிரல் குறிகள் பற்றித் தெரிந்துகொள்வதில் தடை உண்டாகும் என்று அஞ்சினேன். அந்தக் கிழவர் ''யசவந்தராயர்'' என்று சொல்லிக் கொண்டே சிந்திக்கத் தொடங்கிஞர். ''ராயர்—கீயர் என்னும் வழக்கம் எங்கள் ஊரிலேயே கிடையாது. இங்கே பிராமணர் களில் பட்டர், சாஸ்திரி, ஹெக்கடே என்று வைத்துக்கொள்வது தான் வழக்கம்.''

''ராயர் என்ற சொல் நாஞகச் சேர்த்தது.''

''அப்படிச் சொல்லுங்கள். யசவந்த என்பது அவர் பெயரா? எங்கே இருக்கிருர் என்றீர்கள்?''

பம்பாயில் இருக்கிருர் என்பதா அல்லது இருந்தார் என்பதா? இந்த நெருக்கடியில் நான் ஊசலாடினேன்.

''எங்கள் குடும்பத்திலேயே யசவந்தன் என்ற ஒரு பையன் இருந்தான். நான் சிறியவஞக இருந்தபோது நடந்தது. எங்கள் குடும்பம் என்ருல் என்ன? எங்கள் வீடே என்று வைத்துக் கொள்ளுங்கள். ஒரே பெயரில் இருவர் இருக்கக்கூடாது என்ப தில்லை. ஆஞல் அந்த யசவந்தன் செத்துப்போயிருக்கவேண்டும். இதுவரை பிழைத்திருக்கமாட்டான். அவனும் நானும் அண்ணன், தம்பிகளின் பிள்ளைகள். முன்னமேயே எங்களுக்குள் பாகப் பிரிவினையாகியிருந்தது. அதோ பாருங்கள், எங்கள் வீட்டுக்கு அந்தப் பக்கத்தில் காடாக வளர்ந்திருக்கிறதே மூங்கில் புதர், அதுவே அவன் வீட்டு மனை அடி. அந்த வீடும் அழிந்து மூங்கில் புதர் வளர வேண்டுமாஞல் எத்தனை வருடங்கள் கழிந்திருக்க வேண்டும், சொல்லுங்கள்?''

''ஆயிற்று—எவ்வளவோ காலம்.''

''இந்த ஊரில், மற்ற வீடுகளில் அந்தப் பெயரை உடையவர் இல்லையா?''

''முதல் வீட்டுக் குடும்பத்தில் யாரும் இல்லை; முதல் வீடு என்பது எங்களுடையது. இனி கீழ முதல் வீடும் ஒன்றிருக்கிறது. அதுவும்கூட எங்கள் மூதாதையர்கள் இருந்த இடமே. எங்களுக்கே சொந்தமானது. எங்கள் யசவந்தன் இங்கிருந்து எங்கேயோ போனான்.''

''போகும்பொழுது அவருக்கு வயது என்ன இருக்கும்?''

கிழவர் நெற்றியில் கையை வைத்து யோசித்தார். தம் இளமைக் காலத்து நிகழ்ச்சிகளை நினைவுபடுத்திக்கொண்டார். ''ஐயோ, அந்த யசவந்தனா? எனக்கும் அவனுக்கும் நான்கு, ஐந்து ஆண்டுகள்தான் வித்தியாசம் என்று நினைக்கிறேன். அவன் என்னைவிடச் சிறியவன். அவனுக்குத் திருமணமானதும் இங்கேயே. அப்போது அவனுக்கு இருபது வயது இருக்கலாம். ஆமாம்—அவ்வளவுதான். குமட்டி பக்கத்திலிருந்து அவனுக்குப் பெண் கொண்டுவந்தார்கள். எங்களுடையது முதலில் பெரிய குடும்பம். பெரியது என்றால் ஆட்களின் எண்ணிக்கையைப் பொறுத்ததல்ல. நல்ல வசதியிருந்தது. அந்த யசவந்தன் கடன் பட்டு, கடனுக்குத் தன் சொத்தை ஒத்தி வைத்து இந்த ஊரை விட்டான். மனைவியின் ஊருக்குப் போனான். அதாவது குமட்டிக்குப் போனான்.''

''மனைவியின் பெயர்?''

''யாருக்கு நினைவிருக்கிறது? திருமணமான பிறகு அந்தப் பெண் இங்கே வந்து நான்குநாள் சேர்ந்தாற்போல இருந்த தாகக்கூட நினைவில்லை. என் தந்தைக்கும், அவன் தந்தைக்கும் கடுமையான பகை; பாழும் பங்காளிச் சண்டையே அப்படிப் பட்டது. அந்த யசவந்தன் இன்னும் உயிரோடு இருக்கிறான் என்றா சொல்லுகின்றீர்கள்? இருக்கமாட்டான்; எப்படி இருப்பது? அவன் குமட்டிக்குப்போய் பாக்கு வியாபாரம் செய்து கொண்டிருந்தான் என்று ஒரு தடவை கேள்விப்பட்டேன். அதுவும் நீண்ட காலத்துக்கு முன்னால். நான் வாழ்நாளில் ஒரே ஒரு முறை குமட்டிக்குப் போயிருந்தேன்; அவ்வளவுதான். என்ன வேலை? அந்தப் பக்கம், எனக்குத் தொடர்பும் இல்லை. நாங்கள் கொள்வதும் கொடுப்பதும் சிர்சி அல்லது எல்லாபுரம் தான். அதுவே எங்களுக்குச் சமீபம். ஆனால் முன்னால் கேட்ட செய்தியை வைத்துச் சொல்லுவதானால்—குமட்டியில் அவன்

குடும்பத்தை வைத்தான்; வியாபாரம் செய்தான்; குழந்தைகளைப் பெற்றான்; அதன் பிறகு குடும்பத்தில் வெறுப்பு ஏற்பட்டு காசிக்கோ, ஹரித்துவாருக்கோ போய் உயிரை விட்டான். இதுதான் நான் கேள்விப்பட்டது. நீங்கள் சொல்லும் இந்த யசவந்தன் யாராக இருக்கலாம்? இங்கே அருகில் வேறே எங்களவர்களுடைய வீடு ஏதும் இல்லையே? உங்கள் யசவந்தனுக்கு என்ன வயது இருக்கும்?''

''வயது உங்களைவிட எட்டு அல்லது பத்து குறைவாக இருக்கலாம்.''

''உங்களுக்கு அவரை நன்றாகத் தெரியுமா?''

''கொஞ்சம் கொஞ்சம் தெரியும். பம்பாயில் அவருடன் அறிமுகம் ஏற்பட்டது.''

''இந்தப் பார்வதிக்கும் அவனுக்கும் என்ன சம்பந்தம்?''

''நெருங்கிய வகையிலோ அல்லது தூரத்து வகையிலோ பாட்டியோ, ஏதோ ஆகவேண்டும்.''

''அவளைப் பார்த்து எப்படியிருக்கிறாள் என்று தெரிவிக்க வேண்டும் என்பதாக எழுதியிருந்தானா? நீங்கள் அதற்காகவே வந்திருக்கிறீர்களா? சரி, அவர் உங்களுக்குச் சொல்லி நீங்கள் ஒப்புக்கொண்டபிறகு போகவேண்டியது நியாயம்தான். ஆனால் இப்போது பொழுதுபோய்விட்டது. அந்தப் பார்வதியின் வீடு என்பது ஒரு குடிசை. அங்கே வேறு பிராமணர்களுடைய வீடு இருக்கிறது. அதாவது சரியாகக் கண் தெரியாத கிழவியின் வீட்டுக்குப் பொழுது சாய்ந்த பிறகு எதற்காகப் போகவேண்டும்? போய் என்ன பேசுவது? இந்த ஓர் இரவு எங்கள் வீட்டில் இருக்கலாம். காலையில் போனால் போதாதா?''

இந்த கேள்விக்கு நான் என்ன பதில் கூறமுடியும்? என் நண்பர் பிறந்த நிலம் அங்கே, என் கண்ணெதிரில் இருந்த மூங்கில் புதரின் அடியில் தெரிந்தது. என் நண்பர் வேறொரு யசவந்தராக இருக்கமாட்டார் என்று எனக்குப் பட்டது. குமட்டியிலிருந்து பெண்ணைக் கொண்டுவந்தது எங்கள் யசவந்தருக்காகத்தான். குடும்பத்தைத் துறந்து சென்றதும் அவரேதான். பற்றில்லாமல் புறப்பட்டுப் போய்ச்சேர்ந்த காசி, ஹரித்துவார் மட்டும் வேறு. கிட்டிய மரணமும் வேறு. அவரைப் பிடிக்காத ஜனங்கள் செத்ததாகச் செய்தியை முன்பே எழுப்பி அதில் மிகவும் திருப்தியடைந்திருக்கவேண்டும். பிறந்த ஊரை விட்டுச் சென்ற தம்பியின் விஷயத்தில் சங்கர ஹெக்கடே அதை

நம்பியிருந்தால் வியப்பு ஏதும் இல்லை. நாற்பதாண்டுக்கால எல்லையைக் கடந்த சங்கதி அது. பார்வதியென்னும் கிழவி யசவந்தராயருக்கு உறவினள் என்றால் அவருக்கும் உறவினள் தான். இப்பொழுது பார்க்கும்போது அப்படிப்பட்ட உறவுக்கு அடிப்படையில்லை என்று தோன்றுகிறது. அவருடைய மனைவியின் ஊர் நீண்ட தொலைவிலிருக்கிறது. ஆகவே அந்தப் பார்வதி—சங்கர ஹெக்கடே குறிக்கும் பார்வதி—அறிமுகமான ஏதோ ஒரு பெண்ணாக இருக்கவேண்டும். அவள் அவருடைய குழந்தைப் பருவத்தில் ஏதோ ஒருவகையான அன்புகாட்டி, தொடர்பை ஏற்படுத்திக்கொண்டிருக்கவேண்டும், என்றெல்லாம் எண்ணங்கள் மனத்தில் நிரம்பின. அதற்குள் பொழுது சாய்ந்துவிட்டது. இன்னும் ஒரு மைல் அல்லது அரைமைல் வழி நடந்து மற்றொரு முன்பின் தெரியாத வீட்டுக்குப் போய் நான் எந்த விசாரணையும் நடத்தும் நிலையில் இல்லை. முக்கியமாக, நான் தேடிவந்த ஆள் உயிரோடு இருப்பதாகத் தெரிந்தது. அந்த ஆள் செத்ததன் காரணமாக இரண்டாவது கட்டை விரல் குறி அந்த இரசீதின் மேல் இடப்படவில்லை. சாட்சிக் கையெழுத்துப்போட்ட சம்பு பட்டன், பணம் அனுப்பிய நான் அறிமுகமில்லாதவனானகையாலே முற்றிலும் ஏமாற்றிவிட்டான் என்ற எண்ணமும் தோன்றியது. வீட்டுக்காரர் கேட்ட கேள்விக்கு விடையளிக்காமல் என் மனத்தை எங்கெங்கோ செலுத்தி கவனக் குறைவாக இருப்பதைக் கண்ட அவர், ''இப்பொழுதே போகவேண்டும் என்று இல்லை அல்லவா? நாளைக் காலை போனால் போதுமா?'' என்று மற்றொரு முறை கேட்டார். ''ஆகட்டும்'' என்றேன் நான். என் மனம் அந்த நேரத்தில் மலைநாட்டின் காட்டைப்போல சிக்கல்கள் பின்னிப் படர்ந்து, சிந்தனை மேகங்கள் கவிந்து இருந்தது.

சங்கர ஹெக்கடே, ''பொழுதுபோய்விட்டது; சந்தியாவந்தனத்தை முடித்துக்கொண்டு வருகின்றேன். இங்கேயே இருங்கள்'' என்று சொல்லி, என்னை விட்டுப் புறப்பட்டுப் போனார். அவர் போனபிறகுதான் அவருடைய புத்திர சிகாமணியான சம்பு ஹெக்கடே என் முன் வந்து நின்றான். வெற்றிலைத் தட்டில் கையை வைத்தான். ''உட்காருங்கள்'' என்று நான் சொன்னபோதும் அவன் உட்காரவில்லை. நின்றபடியே வெற்றிலை போட்டுக்கொண்டான். நான் திண்டலாக ''உங்களுக்கு சந்தி, பூசை, இல்லையா?'' என்றேன்.

''அப்பா இருக்கிறாரல்லவா?''

''அப்படியானால், அந்தக் காண்டிராக்ட் எல்லாம் அப்பா வுக்கே அல்லவா?''

''நீங்கள்?''

நான் சிரித்துக்கொண்டே, ''என் சந்தியா வந்தனம், ஜபம் எல்லாம் முடிந்து வருடம் நாற்பதாகிறது'' என்றேன். அடுத்த இரண்டு மணி நேரத்திற்கு அந்த வீட்டின் தலைவர் வெளியே வரவில்லை. இங்கே சம்பு ஹெக்கடே நின்றபடியே யிருந்தார். நான் ''உட்கார்ந்து கொள்ளுங்கள்'' என்று சொன்னபோதிலும் கேட்கவில்லை. ஏதோ பேசவேண்டும் என்னும் ஆர்வம் அவரிட மிருந்ததாகத் தெரிந்தது. பகலில் நடந்த நிகழ்ச்சியாலும் அவ யுடைய தந்தை பேசிய பேச்சாலும், தொண்டை இறுகியவரைப் போல என்னை உற்றுப் பார்த்துக்கொண்டே யிருந்தார். அப் போது வீட்டின் உள்ளிருந்து விளக்கை ஏற்றிக் கொண்டு வந்த வயது முதிர்ந்த விதவை ஒருத்தி நான் இருந்த இடத்துக்கு அருகே வந்து அதை இட்டாள். ''இவர் எங்கள் அத்தை; வீட்டுக்கு விளக்கு. எங்கள் அப்பா என்ன செய்வதாக இருந்தா லும் இந்த அக்காளைக் கேட்காமல் செய்யமாட்டார். இவரிடத் தில் அவருக்கு அவ்வளவு பக்தி'' என்று சம்பு கூறினான். அந்த அம்மாள் சிறிது தூரத்தில் சுவரில் சாய்ந்தபடி உட்கார்ந்தாள்.

''நீண்ட தொலைவிலுள்ள ஊரிலிருந்து வந்திருக்கிறீர்களாமே! எங்கள் பார்வதியைப் பார்ப்பதற்காக வந்தீர்களாமே!'' என்றாள் அவள். அது எனக்கு வியப்பாக இருந்தது. சம்பு ஹெக்கடே, நாங்கள் பேசிய எல்லாவற்றையும் மறைவிலிருந்து கேட்டு அந்த அம்மாளுக்குக் கூறியிருக்க வேண்டும். இல்லாவிட்டால் இந்தக் கேள்வி வந்திருக்காது என்று நினைத்தேன். அவள் வாயிலிருந்து வந்த ''எங்கள் பார்வதி'' என்பது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்தது. பார்வதியைப் பற்றி, சங்கர ஹெக்கடே நன்றாகத் தெரிந்து கொண்டதாகப் பேசவில்லை. ஆனால் அவரிடம் வெறுப்பு மில்லை, விருப்புமில்லை, வேண்டுமளவுக்கே பேசினார். இந்த அம்மாள் ''எங்கள்'' என்று ஆழ்ந்த அன்போடு பேசவேண்டுமா னால், ஏதோ பெரிய விஷயம் இருக்க வேண்டும் என்று நினைத் தேன்.

''ஆமாம் அம்மா. அவரைப் பார்ப்பதற்காகவே வந்தேன். என் பகல் தூக்கம் நீண்டு போய் எழுந்திருக்கும்போதே

சாயங்காலமாகி விட்டது. நாளைக்கு அழைத்துக் கொண்டு போகிறேன் என்று சொல்லியிருக்கிறார் உங்கள் தம்பி.''

அந்த அம்மாள் என் முகத்தைக் கண் இமைக்காமல் பார்த்தாள். வயது எண்பது, எண்பத்தைந்தாவது இருக்கலாம். பார்வை அவ்வளவு தெளிவாக இருந்ததாகத் தெரியவில்லை. குறைந்த பார்வையிலேயே என்னை மிகவும் முயன்று பார்ப்பது போலத் தோன்றியது. அப்படிப் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே நான்கு சொட்டுக் கண்ணீர் உதிர்த்ததைக் கண்டதும் எனக்கு வயிற்றைக் கலக்கியதுபோல ஆயிற்று. எந்தப் பழைய நினைவின் அடிப்படையில் அந்த அம்மாள் அழுதிருக்கக்கூடும்? அவள் சிந்திய ஒவ்வொரு சொட்டுக் கண்ணீரும் ஏதோவொரு வேதனையைச் சொல்லுவதாய் இருந்தது. தம்பி மகனிடமிருந்து யசவந்தராயரின் கதையைக் கேட்டு அவளுக்குத் துன்பம் ஏற்பட்டிருக்குமோ? அல்லது நமது பார்வதியே அந்த வருத்தத்திற்குக் காரணமாயிருக்கலாமோ? அந்த முதியவளை நான் அந்த நேரத்தில் எதையும் கேட்க முடியவில்லை. முன்பின் தெரிந்து கொள்ளாமல் கேள்வி கேட்டால் அதனால் துன்பமே மிகும். அதற்குள் அந்த அம்மாள் ''யசவந்தனை உங்களுக்குத் தெரியுமாமே? அப்படியானால் அவன் செத்ததாக வந்த செய்தி பொய்யாக இருக்க வேண்டும்'' என்றாள் ஒருவிதத் திருப்தியுடன். இது எனக்குப் புண்ணின்மேல் சூடுபோட்டதுபோல இருந்தது. யசவந்தர் அப்போது செத்தது பொய்யானாலும் இப்போது செத்தது உண்மையே யல்லவா? யசவந்தரைப் பற்றிய எந்தப் பேச்சு அந்த அம்மாளுக்குத் திருப்தி அளித்ததோ, அதை நான் அப்படியே விடுவதா அல்லது மாற்றுவதா? அந்த நண்பர் இறந்த செய்தியை என் பேச்சில் மறைத்திருந்தேன். இந்தக் கிழவியிடம் நான் எதைச் சொல்வேன்? என் வாயிலிருந்து பேச்சே வரவில்லை. அவள் முகத்தைப் பார்க்கிறேன்—சொட்டிய கண்ணீர் இப்போது தாரையாகவே கொட்டிக் கொண்டிருந்தது. என்னால் தாங்க முடியவில்லை. ''அம்மா, ஏதோ பழைய நினைவால் உங்களுக்கு வருத்தம் உண்டாகிறது அல்லவா?'' என்று கேட்டேன்.

''குழந்தை—குழந்தை என்று அழைக்கிறேன், நீங்கள் பெரியவர்கள்! ஆனால் வயதிலாவது நான் பெரியவள் அல்லவா? என் வயிற்றில் குழந்தைகள் பிறக்கப் புண்ணியமில்லாதபோது உலகத்துக் குழந்தைகளெல்லாம் என் குழந்தைகள்தாம்.''

சம்பு நடுவிலே தலையிட்டான், ''எங்கள் அத்தையின் மாங்கல்யம் திருமணமான எட்டு நாளுக்குள் போய்விட்டது. அப்போது தனக்கு எட்டு வயது என்பதாக அவரே சொல்லியிருக்கிறார். பழங்காலத்தில்—எட்டு வயதிலேயே திருமணம் முடித்துவிடுவார்களாம்.''

அவன் அதை வடமொழியில் குறிப்பிட்டான். ஆனால் அதில் இலக்கணத் தவறு இருந்தது. அப்போதைய பேச்சுக்கு அது பொருத்தமாகவும் இல்லை. நான் அதை மாற்ற விரும்பி, ''நீங்கள் மிகவும் துன்பமயமான வாழ்க்கையை அனுபவித்திருக்கவேண்டும். அந்த நினைவினாலேயே இப்போது வருத்தம் உண்டாகியிருக்கலாம். எட்டு வயது அப்போது; எண்பத்தைந்து இப்போது'' என்று கூறினேன்.

''அதற்கில்லை தம்பி, அது பிரமன் எழுதிய விதி. எனக்குக் குங்குமம் இட்டுக்கொள்ளும் அதிர்ஷ்டம் இல்லாது போகட்டும் என்று முற்பிறவியில் செய்த ஏதோ பாவத்துக்காக கடவுள் எனக்கு அந்தத் தண்டனையைக் கொடுத்தான். எனக்கு இப்போது துக்கம் வந்தது வேறொன்றிற்காக.''

''அது என்ன?''

''பங்காளிக் காய்ச்சல் என்னும் நஞ்சு பாம்பின் விஷத்தைவிடப் பெரியது. ஏன் என்று கேட்கிறீர்களா?''

''அது எப்போதுமே தீயதுதான். அதனால் ஒருவருக்கும் நன்மை உண்டாவதில்லை.''

''நான் யசவந்தன் விஷயத்தில் இதைச் சொன்னேன். எங்கள் பார்வதியையும் இந்த விஷம் தீண்டியது.''

''அப்படியானால் . . . ?''

''பார்வதியும் நானும் மிகச் சிறிய வயதிலேயே இணைந்து விளையாடியவர்கள். அவளும் என்னைப்போலவே குங்குமம் அணியும் பாக்கியத்தை இழந்தவள். அவள் எங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவளல்ல. அனாதையாகி எங்கள் சிற்றப்பா வீட்டில் அடைக்கலமாக வந்து வளர்ந்தவள். எங்களிடையே பிளவு ஏற்பட்டது. அண்ணன், தம்பி சண்டையினால் வீடு சிதறுண்டது. நான் அதைச் சொல்லக்கூடாது; சொன்னால் என் தந்தையையே நிந்தித்ததுபோல ஆகும். யசவந்தனின் தந்தையும் என் தந்தையும் அண்ணன், தம்பிகள். ஒரே தாய் வயிற்றில் பிறந்தவர்கள். ஆனால் அந்தப் பங்காளிக் காய்ச்சலைப் பார்க்கும்போது, கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் இருந்த பகையே

மேல் என்று தோன்றும். ஒருநாள் எங்கள் தந்தை இளமை வேகத்தில் தன் தம்பிக்கு ஒரு பேச்சு கூறினர். அப்படிக் கூறியது கோபத்தால், புத்தி கெட்டு. அவர்கள் வீட்டு எருமை எங்கள் தோட்டத்திற்குள் நுழைந்து நான்கு வெண்டைச் செடிகளைத் தின்றிருக்க வேண்டும். நட்டு வளர்த்தவர்களுக்குக் கோபம் வருவது இயல்பு. ஆனல் சொல்லிய பேச்சு எப்படிப்பட்டது தெரியுமா? அந்தக் கடவுளுக்குக் கண்ணிருந்தால், உன் வீடு பாழாகி அங்கே மூங்கில் புதர் முளைக்கட்டும் என்று சாபமிட்டார். அந்தச் சாபம் உண்மையாகியே விட்டது. அங்கே இருக்கிற தல்லவா அந்த இடம்? அவ்வளவு பெரிய வீடு இடிந்து விழுந்து மண்மூடி, அந்தத் தம்பி பிள்ளையும் பாழாகப் போனன். யசவந்தன் இந்த ஊரையே விட்டுச் சென்றன். முன் காலத்தில் அந்த இடத்தில் ஒரு வீடு இருந்தது என்னும் அடையாளத்தையே அழித்து வளர்ந்திருக்கிறது மூங்கில் புதர். கோபத்தின் விளைவு இது. பாகப் பிரிவினை ஆகியிருந்தது. அவரவர் பாட்டுக்கு அவரவர்கள் இருந்திருக்கலாம், இரண்டு வீடுகளுக்கு நடுவே ஒரு சுவரை எழுப்பியிருந்தால் இவர் அவரைப் பார்க்கவேண்டிய தில்லை, அவர் இவரைப் பார்க்க வேண்டியதில்லை. ஆனல் பங்காளிக் காய்ச்சல் அல்லவா அது? மனிதன் நாக்கில் உள்ள நஞ்சு, பாம்பின் நஞ்சைவிடக் கொடியது. சிலர் தலையெழுத்தே அப்படி. எங்கள் தந்தை அப்படிப் பேசிவிட்டார். அன்று முதல் ஒவ்வொரு நாளும் இருவரிடையேயும் திட்டும் வசவும் தப்ப வில்லை; வாய்திறந்தால் சாபந்தான்! அந்த வீட்டில் காலிட்ட வர்கள் இந்த வீட்டுக்கு வரக் கூடாது. நானும்கூட யசவந்தனின் வீட்டுக்குப் போகவில்லை. பெரியவர்கள் இட்ட ஆணையிடம் அவ்வளவு பயம்! எங்கள் சிற்றப்பா இறந்துபோனர். அவருடைய மகன் யசவந்தன் வளர்ந்தான். அவன் தாயும் இறந்துபோனள். அவனுடைய திருமணத்திற்கும் இங்கிருந்து யாரும் போகவில்லை. எல்லாம் முடிந்த பிறகும், தந்தையை இழந்த அந்தப் பையனின் மீது எங்கள் தந்தைக்கு வெறுப்பு குறையவேயில்லை. தாயற்ற குழந்தையை வளர்த்து ஆண்பிள்ளையாகச் செய்தவள் அந்தப் பார்வதிதான். வயிற்றுக்கு இல்லாமல் வேலைக்கு வந்து சேர்ந்த அவளே யசவந்தனுக்கு உண்மையான தாய். அந்தக் குழந்தைக்கு ஒரு சொட்டுப் பால் குறைந்தால் என்னை வந்து கேட்பாள். நானும் மறைவாகக் கொடுத்து வந்தேன். எங்கள் வீட்டில் ஏதாவது தின்பண்டம் செய்திருந்தால் நான் கள்ளத்தனமாக, தோட்டத்

தின் வழியே சென்று அவளை அழைத்து யசவந்தனுக்குக் கொடுக் கச் செய்வேன். ஒருநாள் என் தந்தைக்கு இதெல்லாம் எப்படித் தெரிந்ததோ, கடவுளே அறிவார்! 'இனி நீ அந்தப் பார்வதியிருக் கும் இடத்துக்குப் போனால் என்மீது ஆணை' என்றார். ஏனோ இந்தக் கோபம்? இதனால் என்ன பயன்? அவ்வளவு வெறுப்பைச் சுமந்துகொண்டிருந்தவர் காலம் முடிந்ததும் இறந்துபோனார். அதன் பிறகு யசவந்தனுக்குத் திருமணமாயிற்று. நாங்கள் யாரும் அதற்குப் போகவில்லை. அழகான பெண்ணையே தேர்ந் தெடுத்திருந்தார்கள். 'என் குழந்தை சுகமாயிருக்கட்டும்' என்று நான் விரும்பினாலும் பெரியவர்கள் இட்ட சாபம் விட்டுவைக்க வேண்டுமே! மூங்கில் வேரைப்போல அதன் வேரும் வலிமை யானது. அவன் மணந்துகொண்டான்; யாராருக்கோ கொடுத்து எல்லாவற்றையும் இழந்தான். அயோத்தியை விட்டுச் சென்ற இராமனைப்போல காட்டை அடைந்தான். அதன் பிறகு எங்கோ போய்ச் செத்தான் என்று கேள்விப்பட்டேன். சாவதே சுகம் என்று நினைத்தேன். எங்கள் அப்பாவும் செத்தார். அவருடைய ஆணைக்கு நாங்களெல்லாம் கட்டுப்பட்டவர்கள் அல்லவா? கட்டுப் பட்டிருந்தால் மட்டுமென்ன? யசவந்தன் என் வயிற்றுக் குழந்தை யல்லவா? இந்தச் சங்கரனைப்போலவே அவனும் என் தம்பி தானே? இனி எனக்கு யார் இருக்கிறார்கள்? சாகப்போகிற குருடிக்கு யாரும் தேவையில்லை. செத்த பிறகு இந்தத் தம்பி செய்யவேண்டுவதெல்லாம் செய்துவிடுவான். உண்மைதான். அது வேறு விஷயம். ஆனால் என் யசவந்தனின் குணம், நான் கள்ளத்தனமாகப் பால் கொடுத்து வளர்த்த குழந்தையின் குணம் —இவர்கள் யாருக்கும் வராது.''

இந்தக் கதையைக் கேட்டுக்கொண்டிருக்கும்போது நான் எங்கிருக்கிறேன்? எந்த யுகத்தில் இருக்கிறேன்? என்ன சமாச் சாரத்தைக் கேட்டுக்கொண்டிருக்கிறேன்? —இவை யொன்றுமே எனக்குப் புரியவில்லை. பங்காளிக் காய்ச்சல் என்னும் நஞ்சைப் பற்றிக் கேட்டுக்கொண்டிருந்த என்னையும் அது கொதிப்பேற்றி யது போலத் தோன்றியது. எனது அந்த நண்பர் இவற்றையெல் லாம் கேட்பதற்கு இல்லை யென்றாலும் இவற்றையெல்லாம் அவரால் மறக்க முடிந்ததா? இந்த நஞ்சுக்கு இலக்காகியும் குழந்தைப் பருவத்திலிருந்து இளமைக்கும், இளமையிலிருந்து மூப்புக்கும் அவரால் எப்படித் தப்பி வாழ முடிந்தது? அந்தக் கிழவி சொன்னதுபோல் யாருக்குமே வராத குணம் அவருடையது

என்றே நினைக்கவேண்டி வந்தது. இந்த நேரத்தில் நான் பார்வதி யின் பேச்சை எடுக்கக்கூடாது என்று தோன்றியது. மறதி நிரம் பிய வாழ்க்கை மிகவும் இன்பமயமானது. கசப்பை மறக்க முடிந்தால்தான் வாழ்க்கை வாழக்கூடியதாகும். அந்த ஆற்றல் இல்லாததால் உணவு, உடை எல்லாம் இருந்தும், அன்பிற்குரிய தம்பி ஒருவன் இருந்தும், என் முன்னே அமர்ந்திருந்த அந்தக் கிழவிக்கு நிம்மதி கிடைக்கவில்லை. சாபத்திற்குள்ளான யசவந்த னின் நினைவு இன்பத்தைக் கொடுத்திருக்காது. அதே சாபத் திற்கு ஆளான யசவந்தனின் வளர்ப்புத் தாய்—அப்படித்தானே சொல்லவேண்டும்—பார்வதியும் சாபத்தின் பிடிக்குள் சிக்கி யிருக்க வேண்டும். அவள் இருந்த வீட்டுக்கு இவள் போகக் கூடாது. அவள் இருந்த வீடே போய்விட்டதல்லவா? யசவந்தனே ஊரை விட்டான். வீடு, மழை, காற்றில் அழிந்து மண்ணாகிவிட் டது. மூங்கில் புதர் அங்கே முளைத்தது. அதே புதரைச் சங்கர ஹெக்கடே ஒரு மணி நேரத்துக்கு முன்னால் காட்டியிருந்தார். சாபத்தின் பின்னணிமட்டும் அவருக்குத் தெரியாதோ என்னவோ? அதனாலேயே அவர் அதை ஒரு சாதாரண விஷயத்தைச் சொல் வதுபோலச் சொன்னார். தொடர்பு இல்லாதவரைப்போல யசவந்தரைப்பற்றிப் பேசினார். உறவு இருந்தும் இல்லாததைப் போல யசவந்தரைப்பற்றி வர்ணித்தார். இந்தக் கிழவி அப்படி யல்ல. இது பெற்று வளர்க்காத பெண்ணானாலும், பெறுவதற் காகப் பிறந்த பெண். தனக்குக் குழந்தையில்லாவிட்டாலும், தன் உறவினரின் குழந்தையொன்றைத் தன்னுடையதேயென்ற காதலோடு தானே வளர்க்கும் அளவுக்குப் பற்றும், அன்பும் உடையவள். அப்படிப்பட்ட வேலையைச் செய்வதற்கு அதிர்ஷ் டம் கிடைக்கப் பார்வதியின் வாழ்க்கையில் தன்னை இணைத்து அந்த இன்பத்தைத் தானே பெற்றதுபோல மகிழ்ந்தவள். யசவந்தன் மறைந்துபோனாலும் ''எங்கள்'' பார்வதி வாழ்கிறாள். பெரியவர்கள் இட்ட சாபம் என்னும் பெரு நெருப்பின் அந்தப் பக்கத்தில் நின்றிருக்கிறாள்.

## ஐந்தாம் அத்தியாயம்

இரவு கழிந்து, பொழுது விடிந்தது. நான் முகம் கழுவிக் கொள்வதற்குள், சங்கர ஹெக்கடேயின் மருமகள் வந்து சிற்றுண்டி தயார் என்பதாக அவரிடம் கூறினாள். அவர் ''சம்பு'' என்று மகனை அழைத்து, ''இவரைச் சிற்றுண்டிக்கு அழைத்துக்கொண்டு போ'' என்று கட்டளையிட்டார்.

''நீங்கள்'' என்று நான் கேட்டேன்.

''என்னுடைய காலைக் குளியல் இன்னும் முடியவில்லை. குளியல், பூசை முதலியவை முடியும்வரை நான் எதையும் தொடுவதில்லை. நீங்கள் முதலில் பலகாரம் சாப்பிடுங்கள். பிறகு குளியலை முடித்துக்கொண்டு போங்கள். உச்சிக்குள் இங்கேயே வந்துவிடுங்கள். பார்வதியைப் பார்த்துவிட்டு வரும் வேலை மட்டும்தானே? வயது முதிர்ந்த கிழவி. எங்கள் அக்கா வைப்போலவே அவளும் ஒரு நடைப் பிணம். சாவதுமில்லை, வாழ்வதுமில்லை.''

''நான் திரும்பிவந்த பிறகே குளிப்பேன். வழியில் மற்றொரு முறை சேற்றுக் குளியல் ஆகாது என்பது என்ன உறுதி? அப்படி யானால் நீங்கள் என்னோடு வரப்போவதில்லை அல்லவா? வேண்டியதில்லை, ஓர் ஆளை அனுப்பினால் போதும்.''

அதற்குள் அவர் மகன் சம்பு, ''அப்பா, நான் அவருடன் போகிறேன்'' என்றான்.

''சும்மா இரு. நீயும் வேண்டாம், நானும் வேண்டாம், சுப்பன் போகட்டும். அதாவது, பாருங்கள், முதலிலிருந்தே நாங்கள் அங்கே போய்வரும் வழக்கத்தை வைத்துக்கொள்ள வில்லை. ஏதோ பெரியவர்களின் ஆணை அப்படி இருந்தது. உண்மையில் அவள்மீது பகை ஏதும் இல்லை.''

''ஆமாம், கேள்விப்பட்டேன். உங்கள் அக்கா அந்த விஷயத் தைச் சொன்னார்கள்.''

''ஓ, இதற்குள் எங்கள் அக்கா இந்தத் தேவையில்லாத புராணத்தை அவிழ்த்துவிட்டாளா? எங்கள் அக்காவுக்குப் பார்வதியென்றால் உயிர்! அங்கே போய் வராவிட்டாலும், அவள் பார்வதியை நினைத்துக்கொள்ளாத நாளே இல்லை எனலாம்!''

இதற்கிடையே அவருடைய தோட்டத்து வேலையாள் சுப்பன் அங்கே வந்து நின்றான். என்னை அழைத்துக்கொண்டு போகும்

படி சங்கர ஹெக்கடே அவனுக்குக் கட்டளையிட்டார். அதைக் கேட்ட சம்பு ஹெக்கடேயின் முகம் வாடியதை நான் கண்டேன். அவன் என்னோடு வருவதில் எனக்கு விருப்பமும் இல்லை, வெறுப்பும் இல்லை. தந்தை வந்திருந்தால் மிகவும் மகிழ்ச்சியாய் இருக்கும். ஏன் வரவில்லை என்பதற்குக் காரணம் தெரிந்துவிட்டது. அவருடைய மகனுடன் வீட்டினுள் சென்று சிற்றுண்டியை முடித்துக்கொண்டு வந்தேன்.

எனக்காகக் காத்துக்கொண்டிருந்த சுப்பனோடு பார்வதியம்மாள் வீட்டுக்குப் புறப்பட்டேன். சங்கர ஹெக்கடே சுப்பனைப் பார்த்து, ''சுப்பா, இவரை வயல் வழியாகவே கீழ் வீட்டுக்கு—அந்தப் பார்வதியம்மாளிடம்—அழைத்துக்கொண்டுபோ. தோட்டத்தைக் கடக்கும்போது, அங்கேயே கதை பேசிக்கொண்டு நின்றுவிடாதே. இவர் போய் அந்த அம்மாவைப் பார்த்துப் பேசிவிட்டு வந்துவிடுவார். அதுவரை நீ அங்கேயே காத்துக்கொண்டு இரு'' என்று உத்தரவிட்டார். நாங்கள் இருவரும் புறப்பட்டோம்.

ஹெக்கடேயின் தோட்டத்துள் நுழைந்து வெளியே வந்து ஒரு தெரு வழியே நடந்துபோனோம். நான் சுப்பனிடம் பேச்சுக் கொடுக்கவில்லை. மேடு பள்ளங்கள் நிறைந்த வழியிலே மிகவும் எச்சரிக்கையுடன் நடந்து அரை மைல் தூரத்தைக் கடந்தோம். எதிரில் ஒரு பாக்குத்தோட்டம் காணப்பட்டது. அங்கே சம்பு ஹெக்கடே காத்திருந்தான். அந்த ஆள் குறுக்கு வழியில் ஒரே தாவாகத் தாவி என்னைக் கலந்துகொள்வதற்காக அங்கே வந்ததைப்போல் இருந்தது. நாங்கள் எதிர்ப்பட்டதும், ''சுப்பா, நாலு தாழம்பூ மடல்களைக் கொண்டுவா; பூசைக்கு வேண்டும். நீ இங்கேயே காத்துக்கொண்டு இரு, நான் இவருக்குப் பாட்டியின் வீட்டைக் காட்டிவிட்டு வருகிறேன்'' என்று சொன்னதும் எனக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவே இல்லை. நான் ஏதும் செய்யமுடியாத நிலையில் இருந்தேன். இருவருமாக அந்தப் பாக்குத் தோட்டத்துக்குள் நுழைந்தோம். அங்கே சம்பு என்னை நிற்கவைத்தான். மெல்ல மெல்லப் பல்வேறு கேள்விகளைக் கேட்கத் தொடங்கினான். ''உங்கள் ஊர் உடுப்பி பக்கம் என்றீர்கள் அல்லவா? உங்கள் பெயரை நான் கேட்கவே இல்லை. யசவந்த சிற்றப்பாவின் நண்பர் என்ற பிறகு பெயரைக் கேட்டுத் தெரிந்துகொள்ளாமல் இருக்கலாமா?'' என்றான்.

நான் என் பெயரைச் சொன்னேன். பெயரைக் கேட்டதும், சம்புவின் முகம் வெளுத்தது. சிறிதுநேரம் என்னையே விழித்துப் பார்த்துக்கொண்டிருந்ததில் எனக்கு நிலைமை முற்றிலும் விளங்கியது. நான் வேண்டுமென்றே ''ஹெக்கடே அவர்களே, சம்பு பட்டன் என்னும் ஒருவன் இந்த ஊரில் இருக்கிறானா?'' என்று கேட்டேன்.

''நீங்கள் அதைக் கண்டுபிடிப்பதற்காகத்தான் வந்திருக்கிறீர்களா?''

''எதை? நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லை!''

அந்த ஆள் அசையவில்லை; நானும் அசையவில்லை. எங்கள் பயணம் அங்கேயே நின்றுவிட்டது. அவன் என் இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டான். பிடித்து, ''சுவாமி! என் மானத்தைக் காப்பதும், அழிப்பதும் உங்கள் கையில் இருக்கிறது. என்னை நீங்கள் உயிரோடு கொல்வதாக இருந்தாலும் கொன்றுவிடுங்கள். அந்தப் பாட்டியின் முன்னால், என் தந்தையின் முன்னால் என்னுடைய மானத்தை வாங்காதீர்கள்'' என்று சொன்னான்.

''நான் என்ன செய்தேன் என்பதே எனக்குத் தெரியவில்லை. நீங்கள் ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்? அதுவும் எனக்குப் புரியவில்லை'' என்றேன் நான். முன்பே என்னுள் ஓர் ஐயம் எழுந்தது. அதை மறைப்பதற்கு முயற்சி செய்துகொண்டிருந்தேன். சாட்சிக் கையெழுத்து இட்ட சம்புபட்டன் இவனே; பார்வதியம்மாளுக்குப் போன பணத்தில் கைவைத்தவன் இந்தப் புண்ணியவாளன்தான். மாடு மேய்த்துக்கொண்டிருந்த அந்தக் கிழவன், ''சம்புபட்டன் என்பவர் வேறு யாருமே இல்லை'' என்று முன்பே எனக்குக் குறிப்பாகக் கூறியிருந்தான். பணத்தாசையால் இவன் முதலிலிருந்தே அந்தக் கிழவியின் வீட்டுக்குத் தந்தைக்குத் தெரியாமல் போய் வந்துகொண்டிருக்கவேண்டும். யசவந்தராயர் தாமாக மணியார்டர் அனுப்புவதை நிறுத்திய பிறகு, எனக்குத் தெரியவராது என்று நினைத்து எல்லாப் பணத்தையும் இவனே விழுங்கியிருக்கவேண்டும். கிராமத்தில் நடைபெறும் தபால் பட்டுவாடா அல்லவா? அந்தத் தபால்காரனும் இவனுமாகச் சேர்ந்து அந்தக் கிழவியை ஏமாற்றிக்கொண்டிருக்கவேண்டும் என்று நான் நினைத்துக்கொண்டே இருந்தபோது, அங்கே நின்றிருந்த சம்பு அச்ச மிகுதியால் அழத் தொடங்கினான். நின்ற இடத்திலேயே உட்கார்ந்து என் கால்களின்மீது

கையை வைத்து, ''என்னைக் காப்பாற்றவேண்டும்'' என்று வேண்டினான். பிறகு எல்லாமே அவன் வாயிலிருந்தே வெளிப் பட்டன. முதலிலிருந்தே அவன் கிழவிக்கு ஐந்து ரூபாய் மட்டும் கொடுத்துவந்து, அவ்வளவுதான் என்று தெரிவித்து, பாதியைத் தானும், பாதியைத் தபால்காரனுமாகப் பங்கிட்டுக்கொண்டு வந்தார்களாம். நான் பணம் அனுப்பத் தொடங்கியதிலிருந்து அது முழுவதும் இவர்களையே சேரத்தொடங்கியது. ''ஐயோ பாவம்'' என்று எனக்குத் தோன்றியது. பெரியவர்கள் தொடங்கிய பங்காளிச் சண்டை இந்த வகையில் பார்வதியம்மாளைத் தாக்கும் என்று நான் நினைக்கவில்லை. பணம்! பாழும் பணம்! சங்கர ஹெக்கடே வீட்டு எஜமானராக இருந்துகொண்டு, தம் மகன் கையில் ஒரு காசும் கொடுப்பதில்லைபோலும்! சம்பு வயதுவந்தவன்; இளைஞன்; குழந்தைகளைப் பெற்றவன். சில்லறைக் காசு சேர்ப்பதற்காகக் குறுக்கு வழியினைப் பிடித்தான். நான் வந்து உண்டது அவர்கள் வீட்டுச் சோறு. இப்போதும் அவன் என்னிடம் எதையும் மூடி மறைக்காமல் நடந்ததையெல்லாம் தெரிவித்து, காலைத் தொட்டுச் சரண் அடைந்தபோது எதுவுமே செய்வதற்கில்லாது போயிற்று. ''ஆகட்டும்'' என்றேன் நான்.

''போங்கள், வீட்டுக்குப்போய் உங்கள் அப்பா சொன்னதைக் கேளுங்கள்'' என்று கூறினேன்.

''என்னைக் காப்பாற்றுவீர்கள் அல்லவா?'' என்று மீண்டும் கேட்டான்.

''பேச்சுக் கொடுத்தாயிற்றல்லவா?''

''பாட்டிக்குச் சொல்லக்கூடாது.''

''இல்லை, போங்கள்''—பொறுமை இழந்து கூறினேன்.

''நீங்கள் கோபித்துக்கொண்டிருக்கிறீர்கள்.''

''உங்கள்மீது அல்ல'' என்றேன்.

நல்லவேளையாக சுப்பன், சுமார் நூறு அடி தூரத்தில் தாழம்பூக் காட்டிலிருந்து தாழம்பூவைச் சுமந்துகொண்டு வருவது தெரிந்தது. ''தாழம்பூ மடலை எடுத்துக்கொண்டு போங்கள்; உங்கள் வீட்டுக்குப் போங்கள். எதுவும் யோசிக்காதீர்கள். பகல் சாப்பாட்டுக்கு நான் எப்படியும் வந்துவிடுவேன்'' என்றேன்.

''அங்கேயே தங்கிவிடாதீர்கள்.''

''அதை இப்போதே எப்படிச் சொல்வேன்?''

இப்படிப்பட்ட வஞ்சனைக்கு ஆளான, ஆதரவற்ற ஒரு கிழவியைக் கண்டு பேசிவிட்டுத் திரும்புவதற்கு எவ்வளவு நேரமாகுமோ? என் பசியும் வயிறும் அதைவிடப் பெரிய பிரச்சினைகள் அல்ல என்று நினைத்தபடியே, சுப்பனை அழைத்துக்கொண்டு தோட்டத்தைக் கடந்தேன். எதிரில் ஒரு வீடு, பெரிய வீடு காணப்பட்டது. அதன் வாயிலில் போகும்போது சுப்பன், ''கீழ முதல் வீடு என்பது இதுதான். மிகவும் பசுமையாக இருப்பவர்கள்; இனி அதிக தூரமில்லை'' என்றான். அந்த வீட்டின் தலைவர் திண்ணைமீது அமர்ந்திருந்தார்.

''சுப்பா! யாரை அழைத்துக்கொண்டு புறப்பட்டாய்? எங்கே போகிறாய்?'' என்று அவர் கேட்டாலும், நான் காதில் விழாதவனைப்போலச் சில அடிகள் முன்னாலே போயேவிட்டேன். சுப்பன் அவருக்கு என்ன சொன்னானோ தெரியாது. பிறகு ஓடிவந்து என்னோடு கலந்துகொண்டான். மேலும் ஒரு நூறு அடி போவதற்குள் வைக்கோல் வேய்ந்த சிறு குடிசை ஒன்று கண்ணில் பட்டது. அதன் எதிரில் துளசி மாடம் ஒன்று இருந்தது. ஈரப் புடவை உடுத்திய ஒரு கிழவி அந்த துளசி மாடத்தை வலம் வந்துகொண்டிருந்தாள். ''அவர்தானே?'' என்றேன், மகிழ்ச்சி மீதூற. ''ஆம்'' என்றான் சுப்பன். அவன் அங்கிருந்தபடியே ''பாட்டியம்மா, மேல் வீட்டுக்காரர் இந்த ராயரை அனுப்பியிருக்கிறார்'' என்று இறைந்தான். ''கத்தவேண்டாம்'' என்று நான் சைகை செய்தேன். கிழவி முணுமுணுத்தபடியே துளசி மாடத்தின் முன்னால் கீழே விழுந்து வணங்கினாள்; நெற்றியில் மண்ணையெடுத்து வைத்துக்கொண்டாள். எழுந்து நின்றாள்; பிறகு என் பக்கம் பார்த்தாள். ''யாரோ நிற்பதுபோல் இருக்கிறதே?'' என்றாள். உரத்த குரலில் சுப்பன் முதலில் சொன்னதையே மீண்டும் கூறினான். நான் அது அவளுக்கு கேட்டிராது என்று நினைத்து, ''அம்மா, நான் வெளியூர்க்காரன், உங்களைப் பார்ப்பதற்காக வந்தேன். உங்களுக்கு வேண்டியவர் ஒருவர் அனுப்பிவைத்திருக்கிறார். பார்வதியம்மாள் எப்படி இருக்கிறார் என்பதைப் பார்த்துவிட்டு வாருங்கள் என்று அனுப்பியிருக்கிறார்.'' என்னை அறியாமலேயே நான் அந்த அம்மாளின்முன் கை குவித்து நின்றதை அவளுடைய பார்வை கண்டது. ''குழந்தாய், நீ என்னை ஏன் வணங்குகிறாய்? அந்தத் தெய்வத்தை வணங்கு'' என்று துளசி மாடத்தைக் காட்டினாள்.

''நீங்கள் பெரியவர்கள்; நான் வயதில் உங்களைவிட மிகவும் சிறியவன்'' என்றேன்.

அந்தக் கிழவி தலையை ஆட்டிக்கொண்டே ''ஊஹூம், அப்படியல்ல; என்னை வணங்கக்கூடாது; கடவுளை மட்டுமே வணங்கவேண்டும்'' என்றாள்.

''கடவுளையும் வணங்குவேன். பெரியவர்களை வணங்குவதில் தவறேதும் இல்லை.''

''பெரியவன் அவன் ஒருவனே தம்பி.''

அந்தக் கிழவி இன்னும் சிறிது அருகில் வந்தாள். என் முகத்தை இமைக்காமல் கூர்ந்து நோக்கினாள். பிறகு ''தீர்த்தத்தைப் பெற்றுக்கொள்'' என்று கூறி, அதைக் கொடுத்தபோது நான் பெற்றுக்கொண்டேன். அதன் பிறகும் என் முகத்தையே உற்று நோக்கினாள். ''தம்பி, எனக்கு எழுபதோ எண்பதோ வயது ஆயிற்று. சரியாகக் கண் தெரிவதில்லை. யாராக இருக்கும் என்று பார்த்தேன். அடையாளம் தெரியவில்லை. மிகவும் நெருங்கிப் பார்த்தால், அதுவும் தெரிந்த முகமாக இருந்தால், நம்மவர்களா அல்லவா என்பது இலேசாகத் தெரியும். என் யசவந்தனோ என்று பார்த்தேன், அவன் எங்கிருந்து வருவான்? குமட்டி ஊரை விட்டுப் போன பிறகு திரும்பி வரவேயில்லை. ஆனால் அந்தக் குழந்தைக்கு என் நினைவு போகாது. ஒவ்வொரு மாதமும் ஐந்து, ஐந்து ரூபாய் மணியார்டர் அனுப்பிக்கொண்டேயிருக்கிறான். ஒரு மூன்று மாதங்களாக, ஏனோ தெரியவில்லை, வரவேயில்லை. அனுப்புவான்'' என்றபோது என் உடம்பு நடுங்கியது.

''பாட்டி, நீங்கள் நின்றுகொண்டே பேசுகிறீர்களே, வீட்டுக்குப் போகலாம். உங்கள் மகன் யசவந்தனே என்னை அனுப்பியது, அதற்காக வந்தேன். நீங்கள் எப்படி இருக்கிறீர்கள் என்று பார்த்துக்கொண்டு போவதற்காக.''

''உண்மையா, தம்பி? உனக்கு ரொம்ப புண்ணியம், வா'' என்று வீட்டினுள் அழைத்துச் சென்றாள். அங்குமிங்குமாக தடவிப் பார்த்தாள். ''ஒரு மணைகூட என் கைக்குக் கிட்டவில்லை'' என்றாள். அதற்குள் நான் தரையிலேயே உட்கார்ந்துகொண்டேன்.

''என் குழந்தை சுகமாக இருக்கிறானா? சாவதற்கு முன்னால் அவனைப் பார்த்துவிட்டுச் சாகவேண்டும் என்று இருக்கிறது. அவன் வரவேண்டுமல்லவா? அவன் எந்தத் தேசத்தில் இருக்

கிருளே? நான் இங்கேயிருக்கிறேன், அவனை நினைத்துக்கொண்டால் என் குடல் தீய்கிறது. இந்தக் கிழக் குருடியின் நினைவை அவன் இன்னும் வைத்துக்கொண்டிருக்கிருன். அது போதும் எனக்கு—அதே சொர்க்கம். சொர்க்கம், சொர்க்கம் என்ருல் என்ன என்று நீ நினைக்கிருய்? ஐயோ, என் பாழும் நாக்கே! உங்கள் அடையாளம் தெரியாமலேயே நீ, நீ என்று சொல்லுகிறேன்.''

''நீங்கள் அப்படித்தான் சொல்லவேண்டும். நீங்கள் பெரியவர்கள். என் பாட்டியின் வயதில் இருப்பவர்கள். அப்படிச் சொன்ஞல்தான் சிறியவஞகிய எனக்கு மகிழ்ச்சியாக இருக்கும்.''

''இப்போது எங்கேயிருந்து வந்தாய்? உன் ஊர் எது? யசவந்தன் உனக்கு என்னவாக வேண்டும்?''

''அவர் என்னுடைய பெரிய அண்ணனைப்போல. உறவு ஏதும் இல்லை; நட்பு.''

''ஒரு நிமிடம் இருப்பாயா?''

''அதற்காகவே வந்திருக்கிறேன், பார்த்துக்கொண்டு போவதற்காக.''

பார்வதியம்மாள் என்னை அங்கேயே விட்டு, வீட்டுக்குள் போனுள். நான் எழுந்து வந்து சுப்பனிடம், ''நீ போ, நான் வருவதற்கு நேரமாகலாம்'' என்று சொல்லி அனுப்பிவிட்டேன். அவனும் புறப்பட்டுப் போனுன். நான் திரும்பிவந்து அந்தத் திண்ணையின்மீது அமர்ந்துகொண்டேன். உள்ளே அந்தக் கிழவி ஏதோ ஓசைப்படுத்தியது காதில் விழுந்தது. அம்மிக்கல்லை அரைத்ததும் கேட்டது. நான் இருந்த இடத்திலிருந்தே, ''பாட்டி, எனக்காக ஒன்றும் செய்யாதீர்கள்'' என்று கத்தினேன். அந்த ஏழையின் வீட்டில் என்ன இருக்கும்? உறவினர்கள் இல்லை, நண்பர்கள் இல்லை, பக்கத்து வீட்டுக்காரர்கள் ஏதோ சிறிது கொடுக்கலாம். யசவந்தராயர் அனுப்பிய இருபத்தைந்து ரூபாயில் கைக்கு வந்த ஐந்தே ரூபாயைக்கொண்டு அவளுடைய வாழ்க்கை நடக்கவேண்டும். மூன்று மாதங்களாக அதுவுமில்லை. அதையெல்லாம் நினைத்தபோது எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. வருத்தத்தோடு இன்னொரு அச்சமும் சேர்ந்துகொண்டது. யசவந்தர் பிழைத்திருக்கிருர் என்னும் நாடகத்தை இந்த பாட்டியின்முன் தொடர்வது இயலுமா? நியாயமா? என்ற அச்சம். அந்தக் கேள்வி கட்டாயம் எழும்; நான் சொல்லாமலும் இருப்பதற்கில்லை. சொன்ஞல் . . . ? ''அதே சொர்க்கம்'' என்று

சொன்னாள்; தான் வளர்த்த குழந்தையின் அன்பை நினைத்தால் அதுவே அவளுக்கு அமிர்தமாக இருந்தது. அதை அறிந்தும், அவளுடைய அன்பிற்குரிய பொருள் மூன்று மாதங்களுக்கு முன்னால் மறைந்துவிட்டது என்று சொல்லவேண்டுமா?

சிறிது நேரத்திற்கெல்லாம் பார்வதியம்மாள் எனக்காகச் சிற்றுண்டி தயார் செய்துகொண்டு வந்தாள். அதைப் பார்த்து நான் திடுக்கிட்டேன். ஒரு தட்டில் நான்கு சுட்ட அப்பளம், வெண்கலச் செம்பு ஒன்றில் ஏதோ ஒரு பானம்—இவற்றை என் முன் இட்டு, ''தொலைவிலிருந்து களைத்து வந்திருக்கிறாய். வேறு எதையும் எனக்குச் செய்ய வலிமையில்லை. சிறிது பாசிப் பயிறு கடைந்து கஞ்சி காய்ச்சினேன். எடுத்துக்கொள், தயங்காதே; பாசிப் பயறு உடம்புக்குக் குளிர்ச்சி.''

அவற்றைப் பார்த்தபடியே, ''அப்பளம் சுட்டிருக்கிறீர்களே'' என்றேன்.

''அப்பளம் பெயருக்குத்தான். உளுந்து அப்பளமும் அல்ல, வள்ளிக்கிழங்கு அப்பளமும் அல்ல. மரவள்ளியை ஏதோ செய்து உலர்த்திச் சுட்டிருக்கிறேன். வயதானாலும் வாய் ருசி என்பது இருக்கிறது அல்லவா? உப்பு, மிளகாய் ருசி அதற்கு இன்னும் தெரிகிறது. எப்போதாவது என் மூகாம்பா நாலு அப்பளம் அனுப்புவதும் உண்டு. இது அவள் செய்ததோ, நான் செய்ததோ எனக்குத் தெரியவில்லை.''

நான் அப்பளத்தைத் தின்னத் தொடங்கினேன். அதுவரை நான் மரவள்ளி அப்பளம் தின்றதில்லை. பார்வைக்கு எப்படியோ இருந்தாலும் உப்பு, உறைப்பு நிரம்பி சுவையாகவே இருந்தது. அதை மென்றுகொண்டே அந்த உறைப்புத் தணியும்படிக் கஞ்சியைக் குடித்தேன். ''பாட்டி, நான் சிறியவனாக இருந்தபோதும் கிராமத்தில் இதேபோல பாசிப் பயிற்றைக் கடைந்து வெல்லம் போட்டுக் குடித்ததுண்டு. அது வயிற்றுக்கும் நல்லது, உடம்புக்கும் குளிர்ச்சி. இப்பொழுது நீங்கள் மூகாம்பா என்றீர்களே, அது யார்?''

''என்னைப்போலவே அதிர்ஷ்டம் கெட்ட ஒருத்தி, என் தோழி. நாங்கள் இரண்டு உடம்பு, ஓர் உயிர். நீ சங்கர ஹெக்கடேயின் வீட்டிலிருந்து வந்தாயல்லவா? அவளுடைய அக்காவைப் பார்க்கவில்லை என்று தோன்றுகிறது. மூகாம்பா என்பது அவள்தான்''—இவ்வாறு சொல்லிக்கொண்டே நான்கு சொட்டுக் கண்ணீரை உதிர்த்தாள். ''பார் தம்பி, பிறவித் தொடர்பு

என்பது இதுதான். யசவந்தனுக்கும் எனக்கும் இருக்கிற தொடர்பு தாய்—குழந்தை போன்றது. மூகாம்பாவுக்கும் எனக்கும் உள்ளது அக்கா—தங்கையைப் போன்றது. ஆனால், யசவந்தனைப் பார்த்து வருடம் பதினைந்தாயிற்றே, இருப தாயிற்றே! நான் மறந்தேனா? அவன் மறந்தானா? மூகாம்பா இருப்பது இவ்வளவு அருகில்தான் இல்லையா? ஆனால் நான் இங்கே; அவள் அங்கே. இடையில் கடக்கமுடியாத ஓர் ஆறு.''

''ஆறு என்றால்?''

''ஆறு அல்ல; கடல். தம்பி, என் குழந்தையின் தகப்பனுக்கும் மூகாம்பாளின் தந்தைக்கும் பங்காளிக் காய்ச்சல். அவர்க ளுடைய குழந்தைகள் வெளித் தோற்றத்திற்காவது அதை நடத்திக் காட்டவேண்டாமா? நான் இருக்கும் இடத்திற்கு அவள் வரக்கூடாது என்று அவள் வீட்டுப் பெரியவர்கள் ஆணையிட் டிருந்தார்கள்.''

''ஆம் அம்மா, இதையெல்லாம் கேள்விப்பட்டேன். அவரே எல்லாவற்றையும் எனக்குச் சொன்னார். நீங்கள் யசவந்தரை வளர்த்தது, அவர் தம் வீட்டிலிருந்து கள்ளத்தனமாகப் பால் கொண்டுவந்து கொடுத்தது; அது தந்தைக்குத் தெரிந்தது— எல்லாவற்றையும் சொன்னார். வீட்டின் முன்னாலிருந்த மூங்கில் புதரைக் காட்டி அவரும் அழுதார். போனவர்களை நினைத்து அழுது என்ன செய்யமுடியும்?''

''அப்படியானால் உனக்கு எல்லாக் கதையும் தெரியும். இப்படி யிருந்தாலும் நானும் மூகாம்பாவும் வருடத்தில் ஒன்று அல்லது இரண்டு தடவையாவது பிள்ளையார் கோவில் பூசைக்குப் போகும் போது ஒருவரையொருவர் பார்த்துக்கொள்கிறோம். அவரவர்க ளுடைய இன்ப துன்பங்களைச் சொல்லி நாலு சொட்டுக் கண்ணீர் விடுகிறோம்—சேர்ந்துதான். என்னைப்போலவே அவளும் கஷ்டத் தைக் கண்டவள். இப்பொழுது என்னால் முன்னைப்போல உழைக்க முடியுமா? முடிந்தவரையில் இங்கேயே மேல் வீட்டில் என்னால் ஆன வேலை செய்துகொண்டிருந்தேன். இப்போது அதுவும் என்னால் முடியவில்லை. இங்கே வந்திருக்கிறேன். என் மூகாம்பா என் மேலிருக்கும் அன்பினால், வீட்டில் ஏதாவது தின்பண்டம் செய்தால் அதைச் சம்புவிடம் கொடுத்தனுப்பு கிறாள். சம்புவும் தன் தந்தைக்குத் தெரியாதபடி திருட்டுத்தன மாக அதைக் கொண்டுவந்து கொடுக்கிறான். சொல்லிவிட்டு வந்தால் தலை போய்விடாது. வீணாக ஏன் மனக்கசப்பு என்பதற்

காகவே அவன் சொல்லாமல் வருகிறுன். யசவந்தன் அனுப்பும் மணியார்டரைக் கொண்டுவந்து கொடுத்து என் கட்டைவிர லுக்கு மைதடவி காகிதத்தில் ஒற்றிக்கொண்டு போகிறவன் அவனே. அவனும் வரவில்லை—இந்த மூன்று மாதமாகப் பணம் வரவில்லையோ, என்னவோ?''

''பாட்டி, உங்களுக்கு மாதத்துக்கு ஐந்து ரூபாய் வந்தால் அது செலவுக்குப் போதுமானதாக இருக்கிறதா?''

''என் குழந்தை அனுப்பிய பணம் ஐந்து என்றுல், ஐந்நூறுக்குச் சமம்.''

''அரிசி, பருப்புக்கும், துணிமணிக்கும் மாதத்துக்கு ஐந்து ரூபாய் போதுமா?''

''ஒரு வேளையல்லவா நான் உண்பது? ஒரு பொழுதுக்கு எவ் வளவு வேண்டும்? வருடத்துக்கு இரண்டு புடவைகள். இதுவும் கிழிந்துகொண்டே வருகிறது. இப்போது ஈரத்துணியையே அணிந்திருக்கிறேனல்லவா? அவன் பணம் வந்தால் ஒரு புடவை, ராம ஹெக்கடேக்கு சொல்லியோ, சம்பு ஹெக்க டேக்கு சொல்லியோ வரவழைத்துக்கொண்டால் ஆயிற்று.''

''பாட்டி, யசவந்தருக்கு உங்கள்மீது நிறைந்த அன்பு அல்லவா?''

''அன்பா! என் உயிர் அல்லவா அவன்?''

''நீங்கள்தான் அவரை வளர்த்தீர்களாமே.''

''நான் என்ன வளர்த்தேன் தம்பி? அந்தக் கடவுள் என் கையில் சிறிது வேலை செய்வித்தான். எனக்குத் தாலி பாக்கியம் போன பிறகு எந்த ஆதரவும் இல்லை. அண்ணன், தாய் முதலிய வர்கள் ஒவ்வொருவராக மலைக்காய்ச்சலில் போய்விட்டார்கள். உணவிற்கு வழியில்லாமல் நான் பகவந்த ஹெக்கடேயின் வீட்டுக்கு வந்தேன். பகவந்த ஹெக்கடே என்பது எங்கள் யசவந்த னின் தந்தை. அவர் மிகவும் நல்லவர். ஆனுல் வாய்த்துடுக்கு அதிகம். அது ஒவ்வொருவருடைய பிறவிக் குணம் அல்லவா? இந்த யசவந்தனின் தாய் சாவித்திரி நோயாளி என்றுல் அப்படி யொரு நோயாளி. இரண்டு மூன்று பெற்று இழந்தவள். நாலாம் குழந்தை பிறக்கும்போதே எலும்புக் கூடாய் இருந்தது. இரவும் பகலும் சிணுங்கிக்கொண்டே இருப்பதே வேலை. அதைப் பார்த் துக்கொள்வதே நான் ஒருத்திதான். அந்தக் குழந்தைக்கு இரண்டு வயது ஆகும் வரையில் அது பிழைக்கும் என்று நான் நினைத் ததேயில்லை. அதை அந்த மேட்டிலுள்ள பிள்ளையார்தான் காப்

பாற்றினர். ஒரு வழியாகக் குழந்தை பிழைத்தது; தாய் இறந்து விட்டாள். ஹெக்கடே மற்ருெரு மணம் செய்துகொண்டார். அந்த மனைவிக்குக் குழந்தைகள் இல்லை. இருந்திருந்தால் யசவந்தனுக்கு இன்னும் என்னென்ன துன்பம் வந்திருக்குமோ?''

''யசவந்தனை நான் வளர்த்தேன் என்று சொல்வது மிகை. கடவுள் காப்பாற்றினன், யசவந்தன் பெரியவனுக வளர்ந்தான். அதற்கிடையில் சங்கர ஹெக்கடேயின் அப்பாவுக்கும்—அந்தப் பெயரை நான் சொல்வதற்கில்லை—அவருடைய தம்பி பகவந்த ஐயாவுக்கும் சண்டையும் சபதமும் வந்தது. யாதவர் கலகமே நடந்தது எனலாம். பாகப்பிரிவினையும் ஆகி, தனித் தனியாக வாழ்ந்தாலும் பங்காளிக் காய்ச்சல் அழியவில்லை. மூகாம்பா பாலைத் திருட்டுத்தனமாகக் கொண்டுவந்து கொடுத்தது அந்த நாட்களில்தான். அந்தக் கதை தொலையட்டும்.''

''பிறகு குழந்தை வளர்ந்தது. பகவந்த ஐயாவுக்குத் தன் மகன் படிக்கவேண்டும், நன்ருக வளரவேண்டும் என்னும் ஆசையிருந்தது. வீட்டில் ஆசிரியரை வைத்து முதலில் பாடம் சொல்லுவித்தார். பிறகு இரண்டு வருடங்கள் குமட்டிக்கு அனுப்பி இங்கிலிஷ் படிக்க வைத்தார். மகன் திருமணத்தைச் சிறப்பாகவே செய்து முடித்தார். ரதி தேவியைப்போன்ற மனைவி வீட்டுக்கு வந்தாள். அவள் வீட்டில் கால் வைத்த நேரம் நல்லதில்லையோ, என்னவோ? எனக்கு அப்படித் தோன்றுகிறது. அவன் அப்பா இறந்துவிட்டார். எங்களுக்கு இருள் சூழ்ந்தது போல இருந்தது. யசவந்தன், அவன் மனைவி...''

''அவள் பெயர்?''

''என்னவோ இருந்தது, மறந்துவிட்டேன். கமலா என்று நினைக்கிறேன். ஆமாம், கமலா. அவள் பார்ப்பதற்கு என்னதான் அழகாக இருந்தாலும் என் குழந்தைக்கு ஏற்றவள் அல்ல. வயிற்றெரிச்சல் என்ருல் அப்படியொரு வயிற்றெரிச்சல். அதெல்லாம் அவரவர்கள் பிறந்த வேளை. அவளுடைய வயிற்றெரிச்சல் வேறே. அதற்கு இலக்காக இருந்தது யார் தெரியுமா? வயிற்றுப் பாட்டுக்கு அந்த வீட்டிலிருந்த இந்தப் பார்வதிதான். என்னைக் கண்டால் கமலாவுக்கு ஆகாது. 'நான் போய் விடுகிறேன்' என்ருல், 'நான் உயிரை விட்டு விடுவேன்' என்பான் யசவந்தன். வீட்டுக்குள் இந்த தொல்லை. வெளியே வாயிலைத் தாண்டினல், சங்கரனுடைய தந்தையின் ஒரே வெறுப்பு. எல்லாம் ஒன்ருகச் சேர்ந்தன. கடலைக் கடைந்தபோது முதலில் நஞ்சே வெளிப்

பட்டதாம். எப்படியோ யசவந்தன் வயது வந்த பிறகு மணம் செய்துகொண்டான். தந்தை இறந்துபோனுர்.''

''உனக்கு அவனுடைய குணம் தெரியாது. அவன் குழந்தையாக இருந்தபோதும் அப்படித்தான். அவன் கையில் போளியோ, லட்டோ எதுவாக இருந்தாலும் அவன் எதிரில் நின்று 'என் தங்கக்கட்டி, கொஞ்சம் கொடு' என்றுல் இருப்பதையெல்லாம் கொடுத்து விடுவான். அவனுடைய நண்பர்களுக்கும், ஊராருக்கும் அவனுடைய இந்தக் குணம் நன்றுகத் தெரிந்திருந்தது. அவனைப் பெருமைப்படுத்திப் பேசி, புகழ்ந்து, இல்லாத துன்பத்தை கற்பனை செய்து கூறி அவனை வேண்டிப் பெற்றுக் கொண்டார்கள். இவனும் கொடுத்தான், கொடுத்தான்; கொடுத்தான் என்றுல் வீடு மூழ்கிப்போகும் அளவுக்குக் கொடுத்துக்கொண்டேயிருந்தான். இனி அவனுக்கு வந்து வாய்த்தவளோ! அவளும் அப்படிப்பட்டவள் தான். இருந்ததையெல்லாம், தன் தாய் வீட்டுக்கு வாரிக்கொடுத்தாள். இந்த ஊரில் கடன் பெருகியது. எவ்வளவோ நிலம் நீச்சு இருந்தாலும் எல்லாமே போய், கடன்காரர்கள் வந்து கழுத்தை நெரித்தார்கள். அப்பொழுது ஊரை விட்டுப் புறப்பட வேண்டியதாயிற்று—இருந்ததையெல்லாம் விற்று விட்டு. வீட்டு மனையை மட்டும் நான் விற்கவேண்டாம் என்று சொன்னதற்காக அதை விற்கவில்லை. மற்றதையெல்லாம் அடுத்த வீட்டு ராம ஹெக்கடேயின் தந்தை வாங்கிக்கொண்டார். விலைக்கு வாங்கினுரோ அல்லது கடனுக்கு ஈடாகப்போயிற்றே எனக்குத் தெரியாது. கொடுக்கும்போது என் மகன் 'இந்தப் பார்வதிக்கு அவள் உயிரோடு இருக்கும்வரை ஓர் மனையடியை விட்டு வைக்கவேண்டும்' என்று நிபந்தனை இட்டுக்கொடுத்தான். என் யசவந்தனுக்கு என்னை விட்டுப் போவதற்குச் சிறிதுகூட மனமில்லை. நான் போனுல் அவனுடைய அந்த ரதி என்ன செய்வாள் என்பது எனக்குத் தெரியாதா?''

''முக்கியமாக நான் கொடுத்து வைக்கவில்லை; என் தலையில் அப்படி எழுதவில்லை. அவன் குமட்டிக்குப் போனுன். அங்கே எல்லாவற்றையும் இழந்துவிட்டாலும், அங்கே வியாபாரம் செய்து கெடவில்லை. எப்படியோ வாழ்க்கையை நடத்தி வந்தான். ஆண்டுக் கொருமுறை அல்லது நாலாண்டுக் கொருமுறை இங்கே வந்து, எனக்கு அரிசி, துணிமணியெல்லாம் வாங்கிக்கொடுத்து, 'அம்மா, எனக்குக் கடவுள், வாழ்க்கையெல்லாம் நீதான். என் மனைவியின் குணம் உனக்கு நன்றுகத்

தெரியும். அவள் எனக்கு முற்பிறவியில் ஏற்பட்ட பகை. பழி தீர்ப்பதற்காகவே மறுபடியும் பிறந்து எனக்கு மனைவியாக வந்திருக்கிறாள்' என்று சொல்லி அழுவான். அதுவும் ஒரு போதாத காலம்தான். அவனுக்கு நான்கு குழந்தைகள் பிறந்தன. அவர்களாலாவது அவனுக்குச் சுகம் உண்டாகும் என்று எண்ணினேன். ஆனால் பிரம்மா அதை அவன் தலையில் எழுதவில்லை. தாயும் குழந்தைகளும் ஒன்றானார்கள். இருபத்தைந்து வருடங்கள் இங்கே யிருந்தான்; அங்கேயும் அதே அளவு நாட்கள் வாழ்ந்தான். அதன் பிறகு திடீர் என்று புறப்பட்டுப்போனான், பாண்டவர்கள் வனவாசம் போனதைப்போல. போவதற்கு முன்னால் அவன் இங்கேயும் வந்திருந்தான். புதிது ஒன்றுமில்லை. 'எங்காவது போய் நான் கவலையில்லாமல் வாழப்போகிறேன்' என்றான். 'என்னோடு இருந்துவிடப்பா' என்றேன். 'அம்மா, நானே உன்னை வைத்துக்கொண்டு காப்பாற்றவேண்டும். மாறாக நீ என்னை வைத்துக்கொண்டு காப்பாற்றுவதா? நான் எங்காவது தொலைவில் இருந்து விடுகிறேன். நான் இனி இருந்தாலும் அல்லது இறந்தாலும் இதுவரையில் மனிதன் என்று மதிக்கப்பட்டிருந்தால் அது உன்னால்தான்' என்று சொல்லி, புறப்பட்டுப் போய்விட்டான். அதன் பிறகு அவன் இந்தப் பக்கம் வரவேயில்லை.''

பொங்கிவரும் துக்கத்தைத் தடுப்பதைப்போல அவள் சிறிது நேரம் சும்மாயிருந்து, அதன்பிறகு மறுபடியும் சொல்லத் தொடங்கினாள்: ''அந்தக் குழந்தை எங்கிருந்தாலும் சரி, என்னை மறக்கவே மாட்டான். நானும் அவனை மறப்பேனா? எங்கள் உடம்பு இருக்கட்டும் அல்லது அழியட்டும்; நினைவுமட்டும் தொடரும். என் கண்ணில் அவன் புலப்படாத நாளே இல்லை.''

சிறிது நேரத்திற்குப் பிறகு அந்த அம்மாள் எனக்கு யசவந்தருடைய இளமை விளையாட்டுகள் பலவற்றைப்பற்றி எடுத்துச் சொன்னார். அந்தத் தாய் அதைச் சொல்லிக்கொண்டிருக்கும் போதே, அவருடைய அந்தக் குழந்தை மூன்று மாதங்களுக்கு முன்புதான் மறைந்துவிட்டது என்று சொல்லவேண்டிய பொறுப்பு என்னைத் துளைத்தது. குறிப்பாக, நான், ''அம்மா, உங்கள் வளர்ப்பு மகனோடு எனக்கு ஐந்து அல்லது ஆறு ஆண்டுகளாகத்தான் நட்பு. ஒவ்வொரு ஆண்டும் நான் இரண்டு தடவை பம்பாய்க்குப் போனபோது அவரைச் சந்தித்து வந்தேன். கடைசி முறை அவர் என்னிடம் ஓர் ஆவலை வெளியிட்டார். பார்வதி

யம்மாளுக்கு ஒவ்வொரு மாதமும் இருபத்தைந்து ரூபாய் அனுப்பவேண்டும், என்று கூறியிருக்கிறார்'' என்றேன்.

''அவனுக்குப் பணம் தேவைப்படலாம்.''

''இல்லை அம்மா. அவர் கொடுத்த பணம்தான். உங்களுக்குக் கொடுக்கவேண்டும் என்று சொல்லி என்னிடம் கொடுத்த பணம். நான் அதைக் கொடுக்கவேண்டாமா?''

''அவனுக்கு அப்படியே எழுது; நானே அப்படிச் சொன்னேன் என்று எழுது.''

''அவர் இப்பொழுது இல்லை அம்மா.''

''இப்பொழுது இல்லை என்றால்?''

''எல்லோரும் நூறு வருடங்கள் வாழ்வதுண்டா?''

''என் பிள்ளை?''

''இறந்து மூன்று மாதங்கள் ஆயின.''

அங்கே முடிந்தது எங்கள் பேச்சு. நானும் பேசவில்லை. அவரும் பேசவில்லை. ஒரு நாழிகை நேரம் மௌனம் எங்கள் வாயைக் கட்டியிருந்தது. அந்த அம்மாள் என்ன சொல்லுவாரோ, நான் என்னென்ன கேட்கவேண்டி வருமோ—என்ற அச்சம் எனக்கு. என் நண்பரை நினைத்து என் கண்கள் நீரைப் பெருக்கின. அவர் பார்த்தார்; என்னையே பார்த்தார். ஏதோ சொல்ல விரும்பியது போல் தோன்றியது. சிறிது நேரம் பொறுத்து, ''குழந்தை, உனக்கு என்ன வயது?'' என்று கேட்டார்.

''ஐம்பது முடிந்தது.''

''உன்னைவிட நான் முப்பது வருடங்கள் மூத்தவள். நான் பெரியவள் என்று நீயே சொல்லியிருக்கிறாய். வயதிலாவது நான் உன்னைவிடப் பெரியவள் அல்லவா?''

''வயதில், அனுபவத்தில், எல்லாவற்றிலும்.''

''அப்படியானால் நான் சொல்வதைக் கேள். இந்த வாழ்வு நீர்மேல் குமிழி ஆகும். அது நிலையானது ஆகுமா? நீ ஏன் அழுகிறாய்? உன் நண்பன் யசவந்தன் இறந்துவிட்டான் என்றா? யார்தான் சாகவில்லை? பாண்டவர்கள் செத்தார்கள்; கௌரவர்களும் செத்தார்கள், யார் சாகவில்லை, சொல்? யார் சாகமாட்டார்கள், சொல்? இந்த உடம்பு ஒரு கிழிந்த அழுக்குச் சட்டை. சட்டைக் கிழியாமல் இருக்குமா? கிழிச்சல் சட்டை அணிந்து கொண்டு உயிர் இருக்குமா? யசவந்தனின் சட்டை கிழிந்து விட்டது. நாளை என்னுடைய இந்த எலும்பும் தோலும்

சேர்த்துக் கட்டிய பந்தலும் அழிந்துவிடும். நாளை கழிந்த பிறகு உனக்கும் அப்படித்தான்.''

''உண்மைதான்.''

''உண்மை என்பதை மனத்தில் ஏற்றுக்கொண்டால், ஏற்றுக் கொள்ளவேண்டும். அப்படி ஏற்றுக்கொள்ளாதவன் மனிதனல்ல. யசவந்தன் சாகவில்லை; சாகப்போவதுமில்லை; இப்போதும் என் கண் முன்னலேயே இருக்கிறன். செத்தது அவனுடைய கிழிச்சல் சட்டை மட்டுமே. என் குழந்தையைக் கடவுள் தன்னிடம் அழைத்துக்கொண்டான். அவனுக்கு இவன் தேவைப்பட்டான். கிழவியான நான், 'நான் வருகிறேன்' என்று அவனை வேண்டினல், 'பொறு, நில், அழைக்கும்போது வா' என்கிறன்—அதே என் கடவுள். அவன் அழைக்க வேண்டுமல்லவா? அவன் அழைக்காவிட்டால் நாம் வருந்தவேண்டும்; அழைத்ததற்கு அழக்கூடாது.''

''ஆம், அம்மா. அப்படிப்பட்ட எண்ணம் எல்லோருக்கும் வருவது கஷ்டம்.''

''அதை வரவழைத்துக்கொள்ளவேண்டும் . . . அப்படியானல் என் மகன் இப்போது இல்லை.''

''மூன்று மாதங்களுக்கு முன்னல் பம்பாயில் இறந்துவிட்டார். அந்த நேரத்திற்கு நான் அங்கே போயிருந்தேன். எனக்குத் தந்தி வந்திருந்தது. என் நண்பர் என்பதால் போனேன். வெறும் சவத்தை மட்டுமே கண்டேன். உயிருடன் பார்க்க முடியவில்லை.''

''அதற்கும் கொடுத்து வைத்திருக்கவேண்டும்.''

''ஆம், அம்மா. உண்மை. எல்லாமே கொடுத்து வைப்பது தான். அப்படியே, நான் கொஞ்சம் பணம் கொண்டுவந்திருக்கிறேன், உங்களுக்குக் கொடுப்பதற்காக. அவர் கொடுத்த பணம்; கொடுக்க வேண்டுமல்லவா? அவருடைய பணத்தை நான் வைத்துக்கொள்ளக்கூடாது.''

''நான் பணத்தை வைத்துக்கொண்டு என்ன செய்வேன்? ஐந்து, பத்து கொடுத்தால் வாங்கிக்கொள்வேன்.''

''நான் அதை வைத்துக்கொண்டு என்ன செய்வேன்? எனக்கு வருமானம் இருக்கிறது. அவருடைய பணம் எனக்குத் தேவையில்லை. நான் உங்களுக்கு ஒன்று சொல்லவேண்டும். நான் அவருடைய குலமும் அல்ல, வேறு எந்த உறவும் அல்ல. இறக்கும் போது என்னிடம் சில ஆயிரம் ரூபாய்களை முடிந்து கொடுத்து,

உனக்குத் தெரிந்த ஒரு நல்ல காரியத்துக்காகச் செலவு செய் என்று கடிதம் எழுதியிருந்தார். இன்னதைச் செய் என்று சொல்லியிருந்தால் எனக்குக் கவலையில்லை. அது எனக்கு இப்போது தொல்லையாக இருக்கிறது, என்ன செய்வேன்?''

''நீ உண்மையைச் சொல்லுகிறாயா?''

''அம்மா, இங்கே வந்து, உங்கள் எதிரில் எதற்காக நான் பொய் சொல்லவேண்டும்?''

''எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது.''

''என்ன, சொல்லுங்கள்.''

''அவன் இருபத்தைந்து கொடுக்க சொல்லியிருந்தாலும் எனக்கு ஐந்தே போதும்; அப்போது மாதத்திற்கு இருபது ரூபாய் மிஞ்சும் அல்லவா?''

''ஆமாம், மிஞ்சும்.''

''அதைக்கொண்டு நான் அந்தக் குழந்தையின் பெயரால் ஒரு வேலை செய்யலாமா, கூடாதா?''

''என்ன, சொல்லுங்கள்.''

''எங்கள் குன்றின் மேலுள்ள பிள்ளையார் கோவிலுக்கு நாதி யேதும் இல்லை. இந்த வட்டாரத்திற்கு இருப்பது அந்த ஒரு கோவில்தான். முதலில் நூற்றுக்கணக்கான பிராமணர்களின் வீடுகள் இருந்தன இங்கே. இப்போது பத்து வீடுகள்கூட மிஞ்ச வில்லை, எல்லோரும் நிலைகெட்டுப் போனார்கள். ஏன் தெரியுமா? அவர்கள், விநாயகனைக் கைவிட்டார்கள்; கடவுள் அவர்களைக் கைவிட்டான். இல்லாவிட்டால் பிள்ளையார் கோவில் இப்படி யிருக்குமா? நான்கு பக்கங்களிலும் மண்டிக் கிடக்கும் புதரைக் களைபவர்கள் இல்லை. கம்பம் முறிந்து, கூரைச் சரிந்து, சுவர் விழுந்தாலும் எங்கள் ஊரார் பிள்ளையாரைப்பற்றிக் கவலைப்பட வில்லை. பெயருக்கு நாங்கள் பிராமணர்கள் என்று சொல்லிக் கொள்கிறோம். என்ன பிராமணத் தன்மையோ? கடவுள் இல்லாத பிராமணன் இருந்தால் என்ன, செத்தால் என்ன?''

''அம்மா, கோபித்துக்கொள்ள வேண்டாம்; கடவுள் உண்டா என்னும் ஐயம் எனக்கும் பல தடவை தோன்றியிருக்கிறது.''

''அப்படியானால் நீயும் எங்கள் யசவந்தனின் கூட்டத்தைச் சேர்ந்தவன்தான்.''

''அப்படியென்றால்?''

''யசவந்தன் நூறு தடவை அதே பேச்சைச் சொல்லியிருக் கிறான்—என்னிடம். அவன் பட்ட துன்பம் அப்படிப்பட்டது.

கடவுளிடம் நம்பிக்கை அவனுக்குப் போயேவிட்டது; போய் விட்டது என்றால் போகவில்லை.''

''என்ன சொல்லுகிறீர்கள் என்று தெரியவில்லையே!''

''அதாவது, தம்பி—கடவுள் இருக்கிறான் என்று நம்பியவர் களுக்கு அவன் இருக்கிறான். நம்புவது என்றால், அவன் மூலமாக நம்முடைய வேலைகளைச் செய்வித்துக்கொள்வது என்பது பொருள் அல்ல. 'எனக்கு அதைக் கொடு, இதைக் கொடு, கொடுத்தால் நீ நல்லவன், இல்லாவிட்டால் இல்லை' என்பது கடவுளை நம்பியவர்களின் கணக்கு அல்ல. பிள்ளையார் கோவிலிலேயே கடவுள் இருக்கிறான்; வேறு எங்கும் இல்லை என்று சொல்வதும் அல்ல. அவன் எங்கும் இருக்கிறான் என்று அறிஞர்கள் சொல்லுகிறார்கள். அந்தக் கணக்கின்படி எல்லாமே கடவுள் தான்; எல்லா உயிர்களும் கடவுளர்களே. அந்த உயிர், இந்த மனிதன் என்னும் வித்தியாசமே இருக்கக்கூடாது. நமக்குள்ளும், மற்ற உயிர்களிடத்திலும் கடவுள் இருக்கிறான் என்று நம்பி, அப்படி நடந்தால், கடவுள் உண்டு என்பதற்கு ஒரு பயன் உண் டாகும். சும்மா வாயால் 'இருக்கிறான்' என்பதால் ஒன்றும் நடக்காது.''

''உண்மை. இப்போது நான் கொண்டுவந்திருக்கும் பணத்தை உங்களுக்குக் கொடுத்துவிட்டு, சங்கர ஹெக்கடே வீட்டில் சாப்பிட வருகிறேன் என்று சொல்லியிருந்தேன், புறப் படட்டுமா?''

''ஒரு பிடி சாதம் சாப்பிட்டுவிட்டுப் பிறகு போ. ஒரே நாழிகை யில் சாதம் வடித்து, குழம்பு வைத்துப் போட்டுவிடுகிறேன். வீட்டுக்கு வந்தவர்களுக்கு ஒரு பிடி சாதம் என் கையால் போட வேண்டும்; நீயும் சாப்பிடவேண்டும்.''

''வேண்டாம், அம்மா'' என்று சொல்லி, ரூபாய்களை எண்ணப் போனேன்.

''உன் பணத்தை நான் தொடமாட்டேன்!''

''என்னுடையது அல்ல . . . உங்கள் மகனே கொடுத்தது. நீங்கள் இதை வாங்கிக்கொள்ளாவிட்டால், உங்கள் மகனுடைய மகிழ்ச்சிக்காக என்ன செய்யலாம் என்பதை நீங்களே சொல்லுங்கள்.''

''நீயும், உன் பிடிவாதமும்.''

''உங்கள் பிடிவாதத்தைப் போலதான்.''

''முதலில் சாப்பிடு; பிறகு சொல்லுகிறேன்,''

அந்த அம்மாள் சமைத்து, என் மனம் நிறையும்படி விருந்து படைப்பதற்கு இரண்டு மணிநேரம் ஆயிற்று. அவருக்கு மன மகிழ்ச்சி ஏற்பட்டதென்னவோ உண்மை, ஆனால் அவர் உண்ண வில்லை என்பதை அறிந்துகொள்ளாமல், ''இப்போது சொல் கிறீர்களா?'' என்று கேட்டேன்.

''நானும், நீயும், எல்லோருமே சிறிது நேரத்திற்காக வந்து போகிறவர்கள். ஆனால் இந்த மனிதப் பிறவி என்பது அப்படி யல்ல. உனக்கு உன் அப்பா இருநதார்; அப்படியே அவருக்கும் முன்னால் பலர் இருந்தார்கள். அதேபோல் நாளைக்கும் உன் பரம்பரை மேலே மேலே போய்க்கொண்டிருக்கும். நானும், நீயும் இல்லாவிட்டாலும்கூட, நாம் நம்பியது மட்டும் நிலைத் திருக்கும். விநாயகன் நாங்கள் நம்பிய கடவுள். யசவந்தனின் தந்தையும், பாட்டனும் அவனையே நம்பியிருந்தார்கள். அவன் கோவில் இடிந்தாலும் அவர்கள் குலம் அழியவில்லை. அவர்க ளுடைய குலதெய்வம் அவனே. அவனை நாம் மறக்கக்கூடாது என்று எனக்குப் படுகிறது.''

அந்த முதியவள் சுற்றி வளைத்துப் பேசிய பேச்சில் ஓர் ஆசை தானகவே குறிப்பாக வெளிப்பட்டது. நான் சிறிதுகூடத் தயங்க வில்லை. என் நண்பருடைய நினைவை நிலைநாட்டுவதற்கு அவ ருடைய வளர்ப்புத் தாயின் ஆழ்ந்த வேட்கையை நிறைவேற்று வதைவிடப் பெரிய கடமை இல்லை என்று முடிவுசெய்து, ''அம்மா, நீங்கள் ஏதும் மேலும் சொல்லவேண்டாம். உங்கள் விருப்பம் என்ன என்பது எனக்குத் தெரிகிறது. உங்கள் யசவந்தனின் பணம் உங்களுக்கு உதவாத பணம் அல்ல. அந்த இருபது மட்டு மல்ல, எவ்வளவு ஆனாலும் கவலைப்படவேண்டியதில்லை. உங்கள் வளர்ப்பு மகனின் பெயரால் பிள்ளையார் கோவில் திருப்பணி நடந்தால் போதுமல்லவா?'' என்று கேட்டேன். இதைக் கேட்டு அந்த மூதாட்டி திகைத்தேவிட்டார்! அவருக்கு இதை நம்புவது கஷ்டமாக இருந்திருக்குமோ, என்னவோ! நான் நம்பிக்கை யூட்டும் வகையில், ''அம்மா, நான் இதற்கு ஒரு வழி செய்கிற வரையில் இந்த ஊரைவிட்டுப் போகமாட்டேன். உங்களைத் தினமும் வந்து பார்த்துவிட்டுப் போவேன். ஒன்றும் யோசிக்க வேண்டாம். நீங்கள் வளர்த்த குழந்தையின் புண்ணியத்தால் பிள்ளையார் கோவில் முன்பு போலவே ஆகிவிடும். போங்கள், நீங்கள் இன்னும் சாப்பிடவில்லை; சாப்பிடுங்கள்'' என்றேன்.

''இன்றைக்கு எப்படிச் சாப்பிடுவது? அதற்குப் பதிலாக என்

குழந்தையின் பெயரில் நான்கு தடவை கடவுள் பெயரைச் செபிக்கிறேன்'' என்று சொல்லி அந்த அம்மாள் எழுந்து நின்று எனக்கு விடை கொடுத்தார். அவரைத் திரும்பிப் பார்த்துக் கொண்டே நான் சங்கர ஹெக்கடேயின் வீட்டுக்குச் செல்லும் பாதையை அடைந்தேன். என் மனத்தில் பாழடைந்த இரண்டு கோவில்கள் தோற்றமளித்தன. பிள்ளையாரின் கல்லும் மண்ணும் கலந்த கோவில் ஒன்று; எலும்பு, தசைகளோடு கூடிய கோவில் மற்றொன்று; அந்த மற்றொரு கோவிலின் தெய்வம் பார்வதி யம்மாள். இதையே நினைத்து என் மனம் நிறைந்து மகிழ்ச்சி பெருகிவந்தபோது என் நண்பர் தீட்டியிருந்த ஒரு சித்திரத்தின் நினைவு எழுந்தது. அதைப் பார்த்தபோது என் மனத்தில் குறிப் பாக எந்த உணர்ச்சியும் தோன்றவில்லை. அவர் காண்டாலாவில் இருந்தபோது பார்த்த ஒரு காட்சியை அவர் எழுத முயன்றிருக்க வேண்டும் என்று நான் நினைத்துக்கொண்டிருந்தேன். அந்த ஓவியத்தில் கண்ட பொருள் வேறொன்றுமில்லை—வெள்ளை நிறத்து வற்றிய பசு ஒன்று புல்தரையில் நின்றிருக்கிறது. அதன் அருகில் சிறிதும் தொடர்பில்லாத ஒரு கன்று இருக்கிறது. அதனுடைய கன்று அல்ல; பசுவின் கன்று அல்ல; எருமையின் கன்று ஒன்று அதன் மடியில் வாயை வைத்து காம்பைப் பற்றி இழுக்கிறது. பசு அதன் உடலை நக்கிக் கொடுக்கிறது. கன்றைக் கறுப்பு நிறத் தில் தீட்டியிருந்ததால், அது எருமைக் கன்றாக எனக்குத் தோன்றி யிருக்கவேண்டும் என்று நினைத்துக்கொண்டேன். சிறிது நேரத் திற்கு முன்பு கண்ட பார்வதியம்மாளின் நினைவால் அந்த எண்ணம் மாறியது. அது யசவந்தரின் வாழ்க்கைச் சித்திரம். பார்வதியம்மாளே அந்தப் பசு; அதிலிருந்த எருமைக் கன்றே குழந்தை யசவந்தன். தன்னுடையதல்லாத கன்றை, தன் னுடையதைவிட அதிக அன்போடு வளர்த்த பார்வதியம்மாளின் அன்புக்கு ஆட்பட்டு என் நண்பர் அந்த ஓவியத்தைத் தீட்டி யிருக்கலாம் என்று தோன்றியது. அது உண்மையோ, அல்லவோ தெரியாது. எனக்கு மட்டும் உண்மை என்றே பட்டது. மிருகக்காட்சிச்சாலைகளில் தாய்ப் பாலில்லாத புலிக் குட்டிகளுக்கு நாய்கள் பாலூட்டி வளர்க்கின்றன. பெண்களில் புதைந்துள்ள தாய்மையுணர்ச்சி அற்புதமானதொன்று. அந்த உணர்ச்சி வெளிப்படுவதற்கு வாய்ப்பில்லாவிட்டால் அந்த வாழ்க்கையே சூன்யமாகிவிடுகிறது. குழந்தையில்லாத இந்தப் பார்வதியம்மாள், யசவந்தருக்குத் தாய் இருந்த காலத்திலேயே,

அவருடைய நோய்வாய்ப்பட்ட நிலைமை காரணமாக, அவருடைய வளர்ப்புத் தாய் ஆனாள்; தாயைவிட உயர்ந்தவளானாள். தாய் இறந்த பிறகு இவளே உண்மையான தாய் ஆனாள். அந்த நினைவை மறக்கவில்லை யசவந்தர், வேறு பலரைப்போல அவரும் அதை மறந்திருக்கலாம். ஆனால் மறக்கவில்லை. அது அவருடைய பெருமை.

ஊருக்குப் போன பிறகு நான் அந்தப் படத்தை எத்தனையோ முறை எடுத்துப் பார்த்தபோதும், யசவந்தரின் இந்தப் பெருந் தன்மையான குணம் எனக்கு மறந்துபோகவில்லை. அப்படிப் பட்டவரின் வாழ்க்கையில் போதுமான அளவு கசப்பை நிறைத்த அவருடைய மனைவி, மக்கள் விஷயத்தில் எனக்கு அன்பே ஏற்பட வில்லை. நான் யசவந்தரின் கட்சியைச் சார்ந்து நிற்கிறேன். அவர்களுடைய கட்சியின் கதை வேறாக இருக்கலாம். எனக்கு அது எப்படித் தெரியவரும்? தெரிந்துகொள்வதற்கு முயல வேண்டும். தெரிந்துகொள்வதற்கு வேண்டிய வழியைப் பார்வதி யம்மாள் காட்டி இருக்கிறார். குமட்டியிலிருந்த அவர்களுடைய உறவினர்களைப்பற்றி சங்கர ஹெக்கடேயைவிட பார்வதியம்மா ளுக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. "ஜலஜ" என்பதைப்பற்றி நான் தலையைச் சொறிந்துகொண்டிருந்தபோது, "ஜலஜா என்றால் கமலா," "கமலா என்றால் யசவந்தனின் மனைவி" என்று பார்வதியம்மாள் சொன்னாள்.

## ஆறும் அத்தியாயம்

பார்வதியம்மாவை சும்மா பார்த்துவிட்டு ஓரிரு மணி நேரத்தி லேயே ஊருக்குத் திரும்பிப் போகவேண்டுமென்று நினைத்து வந்திருந்த நான், மூன்று நாட்கள் பெனகனஹள்ளியிலேயே கழிக்கவேண்டி வந்தது. அதனால் ஏற்பட்டது இலாபமே தவிர நஷ்டம் அல்ல. மனித இயல்பை நன்றாகத் தெரிந்துகொள்ளும் அரியதொரு வாய்ப்பு அங்கே கிடைத்தது. வாய்ப்பு மிகவும் நல்லது. ஆனால் அதனால் மனித இயல்புகள் எல்லாமே நல்லவை

யாக இருந்து விடுவதில்லை. சங்கர ஹெக்கடேயின் வீட்டுக்குத் திரும்பிவந்தேன். அவருடைய திருப்திக்காக அவரோடு பேசிக் கொண்டிருந்தேன். ''அவ்வளவு நேரம் அந்தக் கிழவியுடன் என்ன பேசிக்கொண்டிருந்தீர்கள்?'' என்று கேட்ட அவருக்கு நான் பதில் சொல்லவேண்டியதாயிற்று. நேரம் ஆனது ஒரு தவறு; அவருடைய வீட்டுக்குச் சாப்பாட்டுக்காகத் திரும்பி வராதது மற்றொரு தவறு. அதன் பிறகு, யசவந்தர் இறந்த செய்தியை ஓர் இடத்தில் சொல்லி மற்றோரிடத்தில் சொல்லாது இருப்பதற்கில்லை. அதனால் அவருக்குப் பதில் சொல்லத் தொடங்கினேன். ''அந்தப் பாட்டியைப் பார்க்கும்போது உங்கள் அக்காவைப் பார்த்ததைப்போல ஒரு மரியாதை உண்டா யிற்று. பேச்சுக் கொடுத்தேன். யசவந்தரின் இளமை வாழ்க் கையைப்பற்றிக் கேட்கலாம் என்று பல கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருந்ததால் நேரம் ஆயிற்று. வயதானவர் அல்லவா? அவருடைய பேச்சும் நீண்டுகொண்டேபோயிற்று, எனக்கு எதிலாவது மனம் ஈடுபட்டுவிட்டால் பிறகு சுருக்கமாகப் பேசவே தெரியாது.''

அதற்குள் அவர், ''உண்மை. அவளுக்கு அதெல்லாம் தெரி யும். தெரியும் என்றால் என்ன? யசவந்தனை வளர்த்துப் பெரிய வனாக்கியதே அவள்தான். நாங்கள் அண்ணன், தம்பிகளானா லும் என் தந்தைக்கும் அவன் தந்தைக்கும் இடையே நட்பு இல்லை. எங்களுக்குள் பெரும் பகை.''

''உங்கள் அக்கா அதைப்பற்றிச் சொன்னார்கள்.''

''இப்பொழுது எங்கிருக்கிறானாம் அந்த யசவந்தன்? எப்படி யிருக்கிறான்? உடம்பு நன்றாய் இருக்கிறதா? வீட்டை விட்டுப் போன பிறகு, வேறு ஏதாவது வேலை செய்து நாலு காசு சேர்த்து வைத்திருக்கிறானா?'' என்று கேட்டார் ஹெக்கடே.

''அவருக்குப் பணத்தின்மீது அவ்வளவு ஆசையில்லை.''

''அதனால்தானே அவன் இங்கே எல்லாவற்றையும் இழந்து விட்டான். இழக்காமலிருந்தால் இங்கிருந்து அவன் போக வேண்டியிருந்திருக்காதே? அது இருக்கட்டும். அவன் உடம்பு எப்படி இருக்கிறது?''

''இனிமேல் அவருடைய உடம்புக்கு ஒன்றும் வராது.''

''அப்படியென்றால்?''

''செத்தவர்களுக்கு நோய் ஒன்றும் வராதல்லவா?''

''என்ன, யசவந்தன் செத்துவிட்டானா? நேற்று நீங்கள் இந்தச் செய்தியை நாங்கள் கேட்டும்கூட சொல்லவே யில்லையே?''

''அது நல்ல செய்தியில்லையே, சொல்வதற்கு.''

''எங்களுக்குத் தீட்டு உண்டல்லவா? அவன் எப்படிச் செத்தான், எங்கே?'' என்று கேட்டபோது அவருடைய மனத்தில் பெரியவர்கள் வளர்த்த வெறுப்பு இருந்ததாகத் தெரியவில்லை. எழுந்தார். உள்ளே தாவி ஓடி ''அக்கா, அக்கா'' என்று அவளை அழைத்தார். உரத்த குரலில் ''நம் யசவந்தன் செத்துவிட்டானாம்'' என்று சொன்னது என் காதில் விழுந்தது. நெடுநேரம் வரை அவர் வெளியே வரவில்லை. பிறகு அக்காளோடு வெளியே வந்து உட்கார்ந்தார். அக்காளான மூகாம்பிகை தலை கவிழ்ந்தபடியே ''நீங்கள் வருத்தம் மிகுந்தபடியால் நேற்று இதைச் சொல்லவில்லை என்று நினைக்கிறேன். நான் அவ்வளவு கதைகளைச் சொன்னதும், கேட்டு உங்களுக்கு மேலும் வருத்தம் ஏற்பட்டதோ என்னவோ? நாங்கள் பங்காளிகள், நீங்கள் நண்பர்; நமக்குள் அவ்வளவுதான் வித்தியாசம். பார்வதிக்குச் சொல்லிவிட்டு வந்தீர்களா இதை? சொல்லாமல் இருந்தாலே நல்லது. அவள் வளர்த்த குழந்தையல்லவா அது?'' என்று மனம் கலங்கிக் கூறினாள்.

''சொல்லாமல் இருப்பது எப்படியம்மா? சொல்லவேண்டியவர்களுக்கெல்லாம் சொல்லவே வேண்டுமல்லவா?''

''சொல்லியாகிவிட்டதா? என்ன வேலை செய்தீர்கள்? இன்னும் நாலுநாட்கள்கூட அவள் உயிருடன் இருக்கப்போவதில்லை, எனக்குத் தெரியும்'' என்று சொல்லி சட்டென்று எழுந்து அங்கிருந்து போய்விட்டாள். அவளுடைய முகம் மிகவும் வாடியிருந்தது.

''எங்கே? எங்கே போகிறாய்?'' என்று தம்பி கேட்டபோது, அவள், ''உனக்குக் கொஞ்சம்கூட புத்தியில்லையா? இந்த நேரத்தில் யார் இருக்கிறார்கள் அவளுக்கு? இன்னும் யார் மிஞ்சியிருக்கிறார்கள்? எனக்கு எந்தப் பாவம் வந்தாலும் வரட்டும். இன்றுவரை அப்பாவின் ஆணையை மீறாமல் நடந்துகொண்டது போதும்'' என்று சொல்லிப் புறப்பட்டுப் போனாள். வேறு வழியில்லாமல் அவளுடைய தம்பி அவள் பின்னாலேயே போய் அங்கே விட்டு விட்டு வந்தார். அன்று இரவு அவள் வீடு திரும்பவில்லை. அங்கே, யார் யாருக்குச் சமாதானம் சொல்லியிருப்பார்கள்

என்பதை நான் இருந்த இடத்திலிருந்தே கற்பனை செய்து பார்த்துக்கொண்டேன்.

இதுவரை எங்களுக்குத் தலைகாட்டாது மறைந்துகொண்டிருந்த சம்பு, தன் அத்தையும் அப்பாவும் புறப்பட்டுப்போன பிறகும் வெளியே வரவில்லை. நானே அவன் பெயரைச் சொல்லி அழைத்தேன். அவன் மனைவி, கணவனை வெளியே பிடித்துத் தள்ளிய பிறகே அவன் என் அருகே வந்ததுபோலிருந்தது. ''வாருங்கள், மனம் அமைதியாக இல்லை; பிள்ளையார் கோவில் வரை போய்விட்டு வரலாம், வாருங்கள்'' என்றேன்.

''சூதகச் செய்தியைச் சொன்னீர்களே!''

''சூதகம் எனக்கில்லை; உங்களுக்கு. நீங்கள் தூரத்திலேயே நின்றுகொள்ளுங்கள்'' என்று சொல்லி அழைத்துக்கொண்டு போனேன். வந்த வழியிலேயே போனோம். சம்பு தலையை நிமிர்த்தாமல் என் பின்னாலேயே, புலியின் ஆணைக்குப் பயந்து செல்லும் பசுவைப்போல, பின்தொடர்ந்து வந்தான். பகலெல்லாம் வெயில் காய்ந்ததால் அந்த மாலை நேரத்தில், முதல் நாள் நான் நடந்துவந்த நரகப்பாதை இன்று அவ்வளவு துன்பத்தைத் தரவில்லை. இருவருமாகத் தொடர்ந்து நடந்தோம். கோவிலை நெருங்கியதும் அவன் தொலைவில் நின்றான். உள்ளே நுழைந்து எட்டிப்பார்த்தேன். கோவிலின் முற்றத்தில் விழுந்துகிடந்த பசுவின் சாணத்தை யாருமே எடுத்திருக்கவில்லை. அந்தப் பிள்ளையாரின் நிலைமையைக் கண்டால் எல்லோருக்குமே அனுதாபம் ஏற்படும். அவனுடைய நிழலில் தங்கி உயிர் வாழ்ந்த பார்வதியம்மாளின் வாழ்க்கை குலைந்து சரிந்துபோனதை நான் நினைத்துப் பார்த்தேன். அந்தக் கோவிலைப் பிரித்துக் கட்டுவதாக இருந்தாலும் இரண்டு, மூன்று ஆயிரத்துக்குமேல் செலவாகாது. செய்ய வேண்டிய வேலையும் எனக்காக அல்ல; என் நண்பருக்காகவுமல்ல; பார்வதியம்மாளின் பக்தியின் காணிக்கையாக. அந்தக் கோவில் திருப்பணி முடிந்து நிற்பதைக் கண்டு அந்தப் பார்வதியம்மாள் மகிழ்ச்சியோடு இறந்தால், அது யசவந்தரே அவளுடைய ஈமச் சடங்குகளை செய்து முடித்ததற்குச் சமமாகும்.

அங்கிருந்து நாங்கள் கீழே இறங்கினோம். பிறகு, ''என்ன ஐயா, உங்கள் ஊரில் இருப்பது இந்த ஒரு கோவில்தானும். பத்துப் பன்னிரண்டு பிராமணர் வீடுகள் இங்கே இருக்கின்றன அல்லவா? வருடத்திற்கு ஒரு தடவையாவது நீங்கள் எல்லாம் இங்கே வருகிறீர்கள் அல்லவா?'' என்று கேட்டேன்.

''நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? பிள்ளையார் கோவிலுக்கு வராமலிருப்போமா? எங்களுடைய குலதெய்வமே இந்தப் பிள்ளையார்தான்'' என்றான் சம்பு.

''அப்படியானால், உங்களுடையது மாடுகளின் குலம் என்று ஆகும்.''

''அப்படியென்றால்?''

''அங்கே விழுந்துகிடக்கும் சாணக் குவியலைப் பாருங்கள். அந்தக் கோவிலின் கூரையைப் பாருங்கள்!''

''என்ன செய்வது! அதற்கு அரசாங்கத்திலிருந்து உதவி கிடைக்கவில்லை. ஊராரும் அதைப்பற்றிச் சிந்திக்கவில்லை. நாங்கள் மட்டும் தனியாகக் கட்டமுடியுமா?''

நான் சிறிதுநேரம் அவன் முகத்தையே பார்த்துக்கொண்டிருந் தேன். பார்க்கப் பார்க்க அவனுடைய மனப்போராட்டம் மிகுதியாயிற்று. ''எங்கள் அப்பாவிடம் எதையும் சொல்லக் கூடாது'' என்று என்னை வேண்டினான்.

''நான் உங்களுக்கு அந்த வாக்குக் கொடுத்திருக்கிறேன் அல்லவா? பாருங்கள், நீங்கள் ஏப்பமிட்டது பார்வதியம்மாளின் பணம். அதனால் உங்களுக்கு நன்மை ஏற்படாது. அந்த அம்மா ளுக்கு இந்த கோவில் திருப்பணி ஆகவேண்டும் என்னும் ஆசை இருக்கிறது. அந்தத் தபால்காரன் வாயில் போட்டுக்கொண்ட பணம் போகட்டும். நீங்களும், உங்கள் குழந்தை குட்டிகளும் சுகமாக வாழவேண்டுமானால், நீங்கள் எடுத்துக்கொண்ட பணத் தைக் கணக்கிட்டு இங்கே கொண்டுவந்து சேர்த்துவிடுங்கள்'' என்று கட்டளையிட்டேன்.

''ஆகட்டும், செய்கிறேன்.''

''அதுமட்டுமல்ல, உங்களுக்கும் இதனால் நன்மை ஏற்பட வேண்டும். இது அவ்வளவு பெரிய கோவிலல்ல. உங்கள் ஊரார் பணம் தரட்டும், அல்லது தராமலிருக்கட்டும். உங்கள் சிற்றப்பா யசவந்தராயரின் பணம் சிறிது என்னிடமிருக்கிறது; ஆகவே துண்டு விழும் பணத்தை நான் கொடுக்கிறேன். நீங்க ளும் உங்கள் அப்பாவுமாகச் சேர்ந்து ஓர் ஆண்டுக்குள் இதைச் செவ்வனே செப்பனிடவேண்டும். பணத்தின் பொறுப்பு என் னுடையது. அடுத்த விநாயக சதுர்த்திக்குப் பத்து மாதங்களே யிருக்கின்றன. அதற்குள் இது முடியவேண்டும். சதுர்த்தியன்று, பார்வதியம்மாள் சொல்லும் முறையில் இங்கே பூசையும் சாப்பாடும் நடக்கவேண்டும்'' என்று அறுதியிட்டு, அவனுடன்

எல்லாவற்றையும்பற்றி ஆராய்ந்தேன். அவன் மனச் சுமையும் குறைந்தது. தன் பாவத்தைப் போக்கிக்கொள்வதற்கு இதுவே நல்ல வாய்ப்பு என்று அவன் அறிந்ததாகவும் தெரிந்தது. அங்கிருந்து நாங்கள் இருவரும் வீட்டுக்குத் திரும்பினோம். சங்கர ஹெக்கடேயிடமும் அதே திட்டத்தை எடுத்துக் கூறினேன். தன் பணத்தைச் செலவிடுவதில் அவர் சிறிது அழுத்தமாக இருந்தாலும், என் யோசனையை அவர் ஏற்றுக்கொண்டார். "நாளை நீங்கள் இங்கேயே இருக்கிறீர்களல்லவா? ஊராரை வரவழைப்போம்; கீழ் வீட்டுக்காரரையும் வரவழைப்போம்; உங்கள் முன்னாலேயே ஒரு முடிவு ஏற்படட்டும்'' என்று அவர் சொன்னார்.

''யார் வேண்டுமானாலும் சேரட்டும் அல்லது சேராமல் போகட்டும், இந்த வேலையை முடித்துக்கொடுக்கும் பொறுப்பு உங்களுடையது. துண்டு விழும் பணத்தைக் கொடுக்கும் பொறுப்பு என்னுடையது'' என்று சொன்ன பிறகு, ''ஆகட்டும்'' என்றார் அவர். ''எங்கிருந்தோ வந்திருக்கும் இந்த ஆள் நாளைக்கு, கோவில் வேலை முடிந்தபிறகு பணத்திற்கு நாமம் போட்டுவிட்டால் என்ன செய்வது?'' என்னும் ஐயம் அவர் மனத்தில் முன்பின் தெரியாத என்னைப்பற்றி எழுந்திருக்கலாம். அதற்காக ''நான் ஊருக்குத் திரும்பியதும் இருநூறு அல்லது முந்நூறு ரூபாய் உடனே அனுப்பிவைக்கிறேன்'' என்றும் சொன்னேன்.

அன்று இரவு நாங்கள் மிகவும் நெருங்கிய நண்பர்களைப்போலப் பழைய விஷயங்கள் பலவற்றைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். சங்கர ஹெக்கடேயின் மனத்தில் தன் அக்காள் பெரியவர்களுடைய ஆணையை மீறியது, அதாவது, ''பார்வதியம்மாளின் வீட்டுக்குப் போனது சரியா, அல்லவா'' என்னும் கேள்வி உறுத்திக்கொண்டிருந்தது. அவருக்கு அமைதி ஏற்படும் வகையில் நான் கூறினேன்: ''பெரியவர்கள் ஏற்படுத்தி வைத்திருக்கிற நல்ல பழக்கங்களை நாம் அப்படியே மேற்கொள்ளவேண்டும்; ஆனால் தவறுகளைப் பின்பற்றக்கூடாது. தன் மக்கள் செய்தவற்றை வாய்மூடி அனுபவித்து வந்த திருதராஷ்டிரனின் நிலை என்னவாயிற்று? சொல்லுங்கள். இத்தனைக்கும் அவன் பெரியவன். இப்படி ஆணைகளை மீற முடியாமல் துன்பப்படும் எத்தனையோ குடும்பங்களும், ஆட்களும் எனக்குத் தெரியும். கடவுள் பெயரால் ஆணையிட்டவர்களும் உண்டு. அநியாயமாக நாம் ஏற்படுத்திக்கொள்ளும் இந்தக் கட்டுப்பாடுகளினால் கடவுளுக்குத்

திருப்தி ஏற்படுமா? ஏற்பட்டால் அப்படிப்பட்ட கடவுள் இருந்தும் என்ன பயன்?'' அன்றிரவு என் மனம் அமைதி நிரம்பியிருந்தது. நான் கனவுலகத்தில் மிதந்து பார்வதி—மூகாம்பாளின் பேச்சுக்களைக் கேட்டுக்கொண்டே பெருமையுடன் உலவியதாகத் தோன்றியது.

அடுத்த நாள் நான் குளியலும் சிற்றுண்டியும் முடித்து, சங்கர ஹெக்கடேயை இழுத்துக்கொண்டு, கீழண்டை முதல் வீட்டு ராம ஹெக்கடேயைப் பார்க்கப்போனேன். சங்கர ஹெக்கடே அவருக்கு என்னை அறிமுகம் செய்துவைத்தார். யசவந்தராயருடைய கதை எங்கள் பேச்சில் வந்தது. பார்வதியம்மாளின் பேச்சும் அடிபட்டது. ராம ஹெக்கடே தமது பேச்சில் என் நண்பரின் பல நல்ல குணங்களையும், தீய குணங்களையும் வர்ணித்தார்.

''யசவந்த ஹெக்கடேயை நான் மிகவும் சிறியவனாக இருந்தபோது பார்த்திருக்கிறேன். எனக்கும் அவனுக்கும் ஏறக்குறைய ஒரே வயதுதான். என் தந்தையே அவனுக்குக் கடன் கொடுத்தது. இந்த வீடு கிடைத்தது அந்தக் கடனால்தான். நாங்கள் முதலிலிருந்த வீடு கீழப் பெருவயலில் இருந்தது. எங்கள் அப்பா அவன் கேட்டபோதெல்லாம் பணம் கொடுத்து வந்தாராம். இவன் சிறுவன்; ஆனால் வயதுவந்தவன். கண்டவர்க்கெல்லாம் பணத்தைக் கொடுத்து, தர்பார் நடத்தினான். எங்கள் ஊரில் பத்துப் பதினைந்து பேர் அவன் கொடுத்த பணத்தைத் தின்றே பெரியவர்களானார்கள். எங்கள் அப்பா அவனுக்குப் புத்தி கூறியிருக்கலாம்; 'இப்படியெல்லாம் பைத்தியக்காரத்தனமாகப் பணத்தைச் செலவு செய்யாதே' என்று சொல்லிப் பணம் தராமலிருந்திருக்கலாம். நீங்களாவது பங்காளிகள்; கடன் கொடுக்கமாட்டீர்கள். ஊரில் நாலு காசு ரொக்கமாக இருந்தது, எங்கள் அப்பாவிடம்தான். அவருக்கு முதலிலிருந்தே இந்த நிலத்தின்மீது ஒரு கண் இருந்திருக்கவேண்டும். அவர் கொடுத்தார்; இவன் கடன் வாங்கிக்கொண்டான். கையில் பணம் குதித்தாடும்போது அறிவு செயல்படவேண்டும் என்றால் எப்படி முடியும்? இந்த யசவந்தன் வட்டிக்குப் பெற்ற பணத்தை வட்டியில்லாமல் இன்னொருவர்க்குக் கொடுத்ததுண்டு: அவனை நான்குபேர் 'உன்னைப்போலக் கர்ணன் இல்லை' என்றால் பொங்கிப் பூரிக்கும் சுபாவம் அவனுடையது. மொத்தத்தில் அவன்

நல்லவனே தவிர கெட்டவனல்ல. என்ன சொல்லுகிறீர்கள், சங்கர ஹெக்கடே அவர்களே?''

''அது உண்மை. இப்போது அந்தப் பேச்சை விடுங்கள். எங்கள் யசவந்தனின் பணம் கொஞ்சம் இவரிடம் இருக்கிறதாம்; அதிலிருந்து கொஞ்சம் பணம் கொடுக்கிறாராம். இவருக்கு அவன் பெயரில் இந்த பிள்ளையார் கோவிலைச் செப்பனிட வேண்டும் என்னும் விருப்பம் ஏற்பட்டிருக்கிறது.''

''ராம ஹெக்கடேயின் கண்ணில் ஒளி வீசியது. பெரிய மனிதனின் ஐம்பத்தனம் முகத்தில் காணப்பட்டது. தலையை நிமிர்த்தி, ஆமாம். அந்த ஒரு வேலை இதுவரை நடவாமலிருந்தது மிகவும் தப்பு. செய்யவேண்டியதுதான். செய்கிற வேலையை நன்றாகச் செய்யவேண்டும். ஐந்து ஆயிரம் ஆகட்டும், பத்தாயிரமே ஆகட்டும், செய்கிற வேலை மிகச் சிறந்ததாக இருக்கவேண்டும்'' என்று பெருமிதத்தோடு சொன்னார்.

நான் சிரித்துக்கொண்டே ''அவ்வளவு சிறிய கோவிலுக்கு ஐந்தாயிரம், பத்தாயிரம் தேவையா?'' என்றேன்.

''தேவையில்லாமல்? இந்தக் காலத்து விலைவாசி எப்படியிருக்கிறது? செய்வதை நன்றாகச் செய்யவேண்டாமா? போதுமான அளவு பணம் கிடைத்தால் செப்புத் தகட்டிலேயே கூரை போட்டு விடலாம். பிறகு மூன்று மாதங்களுக்கு ஒரு முறை ரிப்பேர் செய்யும் தொல்லை வரக்கூடாது.''

அப்போது நான், ''ஊராராகிய நீங்கள் எல்லாம் பெரிய மனது வைத்து, தாராளமாகப் பணம் வசூல் செய்து அப்படி அந்த வேலையைச் செய்தால் எல்லாருக்கும் பெருமை உண்டாகும். யசவந்தருடைய பங்கை நான் கொடுத்து விடுகிறேன்'' என்று சொன்னதும் ராம ஹெக்கடேயின் ஆர்வம் பாதியாகத் தணிந்துவிட்டது. உடனே பேச்சை மாற்றி விட்டார். ''சங்கர ஹெக்கடே அவர்களே, சிர்சி முன்சீப் கோர்ட்டில் அந்தத் திம்ம ஹெக்கடேயின் வழக்கு என்னவாயிற்று?'' என்றார். நான் புறப்பட்டுப் போகவேண்டிய நேரம் வந்துவிட்டது என்று நினைத்து, அங்கிருந்து பார்வதியம்மாள் வீட்டுக்குப் போனேன். அங்கே அந்த இரண்டு கிழவிகளும் சுவரில் சாய்ந்துகொண்டு ஏதேதோ பேசிக்கொண்டிருந்தனர். நான் அவர்களிடம் பிள்ளையார் கோவில் விஷயத்தைப் பற்றிச் சொன்னதும் அவர்களுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது.

''தம்பி, அதுமட்டும் உன்னால் நடந்துவிட்டால், பிள்ளையார்க்கு ஒரு கூரையும், பூசையும் கிடைத்துவிட்டால், நான் மகிழ்ச்சியோடு சாவேன்'' என்று பார்வதியம்மாள் சொன்னார்.

''நீயும் அப்படித்தான், நானும் அப்படித்தான்'' என்றார் அவருடைய தோழி.

''உங்கள் பிள்ளையாரே நடத்திக்கொள்வான் அம்மா. நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்?'' என்று நான் சமாதானம் சொன்னேன்.

''தம்பி, நீ இங்கே வந்தது எதற்காக? அவன் அனுப்பி வைக்கவேதான் நீ வந்தாய். என் குழந்தையின் செய்தியைக் கொண்டுவந்தாய். அந்தச் சாக்கிலாவது இந்த என் மூகாம்பா எல்லாக் கட்டுப்பாடுகளையும் மீறி நேற்று இங்கேவர நேர்ந்தது. எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி தெரியுமா—இந்த மூகாம்பா இங்கே வந்தது? யசவந்தன் சாகவேண்டியிருந்தது, நாங்கள் இவ்வாறு சேர்வதற்கு'' என்று கூறி, சிறிது நேரம் சும்மாயிருந்து, ''நினைத்துக்கொண்டாலும் ஒரொரு தடவை மிகவும் துக்கமாய் இருக்கிறது; ஆனால் இறந்தவர்களுக்காக அழக்கூடாது. உனக்கு நேற்று அப்படிச் சொல்லிவிட்டு இன்றைக்கு நானே அழுதால் சரியாகுமா? யசவந்தன் என் நினைவிலிருந்து இறப்பதுண்டா? இதோ நானும் மூகாம்பாளும் இருக்கிறோம்; ஒருவரையொருவர் காணாமல் எத்தனை நாட்கள் இருந்திருக்கிறோம்? அவள் இங்கே வந்ததுண்டா? இப்போது வந்திருக்கிறாள். எனக்கு அவள் சிறிய வயதில் எப்படித் தோற்றமளித்தாளோ, நானும் அவளுக்கு அப்படியே தோற்றமளிக்கவேண்டும். அந்த நினைவு போய்விடுமா, தம்பி, உண்மையான நினைப்பானால்?'' என்று முடித்தாள் பார்வதியம்மாள். பிறகு இரண்டு கிழவிகளுமாகச் சேர்ந்து, தாயை இழந்த யசவந்தனைப்பற்றிப் பல கதைகளை வர்ணித்தார்கள். அதில் அவனுடைய தந்தை மறுமணம் செய்துகொண்டது; மாற்றாந்தாய் வீட்டுக்கு வந்து பெரியவளானது; குழந்தைகள் இல்லாமலேயே போனது; அது மூத்தாள் பிள்ளையின்மேல் அன்பாக வெளிப்படுவதற்குப் பதில் நஞ்சாக மாறியது; தான் புதிய எஜமானியிடம் வசவுகளை வாங்கிக் கொண்டு, அந்த ஒரு குழந்தைக்காகத் தன் துன்பங்களையெல்லாம் விழுங்கிவிட்டு, யசவந்தன் இன்பத்திற்காகப் பாடுபடத் துணிந்தது—முதலிய பல்வேறு நிகழ்ச்சிகளைப்பற்றி பார்வதியம்மாள் விவரித்துக் கூறினாள்.

யசவந்தனின் இளமைக் காலத்தைப்பற்றி நினைவுகூர்ந்து சொல்லிக்கொண்டுவந்த பார்வதியம்மாள் இந்தக் கதையையும் சிரிப்புக்கிடையே கூறினார்: ''குழந்தைகளின் விளையாட்டே ஓர் அழகு. அது எந்தக் குழந்தையானாலும் சரிதான். குழந்தைகளுக்குக் குறையென்பது தெரியவில்லை. யசவந்தனின் தாய் எப்போதுமே நோயாளியாக இருந்ததினால் அவனை எடுத்துக் கொஞ்சியவள் நான். உணவு ஊட்டுவது, தாலாட்டுவது, கதை சொல்வது, விளையாட்டுக் காட்டுவது எல்லாமே நான்தான். இதற்கிடையிலேயே வீட்டு வேலைகளும் குறைவில்லை. வீடுபெருக்குவது, துடைப்பது தொடங்கித் தயிர் கடைவது, சமைப்பது வரையெல்லாம் என் வேலையேயாகும். அப்போது என் உடல் உறுதியாக இருந்தது. வீட்டிலும் அதிக ஆட்கள் இல்லை. நான் என்றைக்கோ தாலி பாக்கியத்தை இழந்தவள். இந்தக் குழந்தை—அதற்கு அப்போது மூன்று வயதோ என்னவோ—என்னைக் கேட்டது: 'பாரம்மா, உனக்கு ஏன் அப்பா நல்ல புடவை வாங்கிக்கொடுப்பதில்லை? நீ ஏன் எப்போதும் வெள்ளைப் புடவையையே உடுத்திக்கொள்கிறாய்? அதற்குக் கரையுமில்லை, தலைப்புமில்லை. உனக்குக் கொஞ்சம்கூட பொன் நகையே இல்லை. என்னுடைய அந்த அம்மாவுக்கு எவ்வளவோ நகையிருக்கிறது, புடவை இருக்கிறது' என்றது. நான் சிரித்துக் கொண்டே, 'அவளை உன் அப்பா மணந்துகொண்டிருக்கிறார். அவள் நிறைய நகைகளை அணிந்துகொண்டே இந்த வீட்டுக்கு வந்தாள். உன்னைப் பெற்றெடுத்து. நோய் மிகுந்ததாலே இப்போது அதிகமாகப் படுத்துக்கொண்டேயிருக்கிறாள். அவ்வளவுதான்' என்றேன்.

'' 'பெற்றெடுப்பது என்றால் என்ன பாரம்மா?' என்று கேட்டான். நான் சிரித்துவிட்டுச் சும்மாயிருந்தேன்.

'' 'எனக்குத் தெரியும்—முந்தாநாள் காளியின் பசு கன்று போட்டதல்லவா, அப்படித்தானே?'

'' 'ஆமாம்டா, கண்ணு!' என்றேன்.

'' 'நீ என்னைப் பெறவில்லை அல்லவா?'

'' 'இல்லை அவள்தான் பெற்றாள். உன்னைப்பெற்றதிலிருந்து அவளுக்கு உடம்பு சரியில்லை, பாவம் இல்லையா? நீ அவளுக்குத் தொல்லை கொடுக்கக்கூடாது. அவளிடம் பிடிவாதம் செய்யக் கூடாது.'

'' 'சரி. ஆனால், அப்பா உனக்கு நல்ல புடவை, வளையல், நகை ஏன் கொடுப்பதில்லை? நீ எவ்வளவு வேலை செய்கிறாய்?'

'' 'எனக்கு நகை எதற்கு? என்னிடம் நிறையத் தங்கம் இருக்கிறது.'

'' 'எங்கே?'

'' 'இருக்கிறது, அது உனக்குத் தெரியாது. எனக்குத் தெரியும்!'

'' 'பொய் சொல்கிறாய் நீ!'

'' 'இல்லை, யசு' என்று கூறி நான் அவனையெடுத்துத் தழுவிக் கொண்டு கன்னத்தில் முத்தமிட்டு, 'என் தங்கம் இதுதான்' என்று அவனை அணைத்துக்கொண்டேன். அப்போது அந்தக் குழந்தைக்கு எவ்வளவு மகிழ்ச்சி, பெருமை ஏற்பட்டது தெரியுமா? எத்தனையோ தடவை இதே போன்ற தந்திரங்களால் அவனைச் சமாதானப்படுத்தவேண்டியதாயிற்று.

''பிறகு பெரியவன் ஆனான். அவன் தாய் அதன் பிறகு நெடுங் காலம் வாழவில்லை. ஹெக்கடே விரைவிலேயே மற்றொரு பெண்ணை மணந்துகொண்டார். அந்த மனைவி வந்த சில நாட்களுக்குச் சும்மாயிருந்தாள். இந்த யசு என்னிடம் ஒட்டிக்கொண்டிருப்பதைப் பார்த்து அவளுக்கு என்ன தோன்றியதோ! என்னை அலட்சியமாகப் பார்க்கத் தொடங்கினாள். அவனையும் அப்படியேதான். ஒருநாள் அவள் ஏதோ காரணத்திற்காகக் கோபம் கொண்டு 'இந்த முண்டை வந்ததால் என் வீடு பாழாயிற்று' என்றாள். அந்தப் பேச்சை என்னால் காது கொடுத்துக் கேட்க முடியவில்லை, அப்போது எனக்கென்று யாருமேயில்லை. வயிற்றுக்குச் சோறு போடுபவருமில்லை, வாய்ப் பேச்சுக் கொடுப்பவருமில்லை, என்றாலும் எனக்குக் கோபம் வந்தது. அந்த வீட்டை விட்டு வெளியே புறப்பட்டு விட்டேன். நேராக அந்தப் பிள்ளையார் கோவிலுக்கு நடந்தேன். இந்தக் குழந்தை எங்கிருந்ததோ என்னவோ! நான் இல்லாததைத் தெரிந்துகொண்டு, அழுது கொண்டே அதுவும் புறப்பட்டது. அவளாவது அதைத் தடுத்து நிறுத்த வேண்டாமா? அதன்மேல் என்ன கோபம்? அந்தக் கோவில் பக்கத்திலேயே 'பாரம்மா, பாரம்மா' என்று கூவும் அதன் கூக்குரலைக் கேட்டு நான் ஓடினேன். அதை அழைத்துக் கொண்டு கோவிலுக்கு வந்தேன். 'உன் மாற்றாந்தாய் சொன்னாள், நான் அவள் வீட்டைப் பாழாக்கினேனாம்; எனக்கு மிகவும் வருத்தம், அதனாலேயே இங்கே வந்தேன். இனி நான் எங்கே

யாவது போகிறேன். காடோ, மேடோ போய் சாகப்போகி றேன்' என்றேன். என் அழுகையைக் கண்டு அதற்கு எப்படி யிருக்கும் என்பதை நான் நினைத்துப் பார்க்கவேயில்லை. அது என்னைப் பிடித்து அடித்து, குத்தி, பிள்ளையாருக்கு முன்னால் கீழே விழுந்து அழத்தொடங்கியது. என்னால் அதனுடைய வருத்தத் தைப் பார்க்கமுடியவில்லை. இனி அவர்கள் வீட்டில் காலிடுவ தில்லை என்று முடிவுசெய்து நான் வந்தால், இந்த ஒரு பிணைப்பு என்னை எதைச் செய்வதற்கும் விடவில்லை. அதைச் சமாதானப் படுத்தும் வேலையே பெரிதாக இருந்தது.

''எங்களுடைய இந்த அழுகை மிகவும் பெரிதாக இருந்ததோ என்னவோ! மாடுகளைத் திருப்பி ஓட்டிக்கொண்டு போவதற்காக வந்த மூகாம்பிகையின் காதில் அது விழுந்தது. அவளும் அங்கே வந்து சேர்ந்தாள். அவளிடம் என்னுடைய கவலையை எடுத்துக் கூறினேன். மாலை மயங்கும் வரையில் நாங்கள் எல்லோரும் அங்கேயே இருந்தோம். அப்போது, சுவாதிக்குப் போயிருந்த பகவந்தையா செருப்புக் காலுடன் டக், டக் என்று நடந்து வந்து கொண்டிருந்தார்; வந்தவர் வழக்கம்போலக் சோவிலுக்கு அருகே வந்தார்; செருப்பைக் கழற்றினார். இன்னும் அவருடைய கண்கள் எங்களைப் பார்த்திருக்காது. அதற்குள் இந்த யசு: 'அப்பா! பாரம்மா சாகப்போகிறாளாம்! ஓடிப்போகிறாளாம்! நீ அந்தச் சின்னம்மாவை கொன்று விடு' என்றான். நான் அவன் வாயை அழுத்தி மூடினேன். மூகாம்பா என்றால் அவருக்கு மிகுந்த அன்பு. அவள் எல்லாக் கதையையும் எடுத்துக்கூறினாள். அப்பொழுது அவர் 'பாரு, அவள் என் மனைவி என்பது உண்மை. ஆனால், வீட்டுக்கு நான்தான் இன்னும் எஜமானன். வா, போக லாம்' என்று சொல்லி, அழைத்துக்கொண்டு போனார். போய், தன் மனைவியை அழைத்து, 'இதோ பார், இந்தப் பார்வதி வேலைக் காக வந்தவள் என்பது உண்மைதான்! ஆனால், அவள் செத்துப் போனவளின் இடத்தில் இருந்து என் குழந்தையைக் காப்பாற்றி யவள்! வேறு யாரும் அவளைப்போல இல்லை. இன்னொரு முறை இந்த மாதிரி ஏதேனும் நடந்தால் . . . இந்த வீட்டிலிருந்து யார் வெளியே போகவேண்டியிருக்கும் என்பது அப்போது உனக்கே தெரியவரும்' என்று பயமுறுத்தினார்.

''அன்று முதல் சாவித்திரியின் கோபதாபங்களும், வெறுப்பும் ஓர் அளவுக்குள்ளேயே இருந்தன. நேர் எதிராக ஒன்றும் கூறாமல், யாராவது வந்தவர்களுடனும் போனவர்களுடனும் நஞ்சு கலந்த

பேச்சுக்களில் அவற்றைக் காட்டிக்கொண்டிருந்தாள். யசு வளர்ந்து பெரியவனான பிறகு அவளை மதிப்பதேயில்லை. நானே அவனுடைய துடுக்குத்தனத்தை அவ்வப்போது அடக்கி அவனைத் திருத்த வேண்டியதாயிற்று. 'என்னதான் இருந் தாலும் அவள் உன் தந்தையின் கைப்பிடித்து வந்தவள். உன் சித்தி. இது உன் தந்தைக்கு மனவருத்தத்தை உண்டுபண்ணும்' என்று சொல்லி வந்தேன். யசுவுக்கு அப்பா என்றால் உண்மை யிலேயே மிகுந்த அன்பு. அவருக்கும் இந்தக் குழந்தையின்மீது அவ்வளவு ஆசை.''

''உள்ள ஒரே மணிக் குழந்தையிடம் ஆசை காட்டாமல் இருப் பார்களா? அந்தக் குழந்தையும் அப்படித்தானே யிருந்தது?''

ஒவ்வொரு நிகழ்ச்சியாக நினைத்துக்கொண்டார்கள். அடுத்த வீட்டு மூகாம்பாவின் அறிவுரைக்கும் ஆலோசனைக்கும் தோட்டத் திலோ, பிள்ளையார் கோவில் பின்னாலோ, பாக்குத் தோட் டத்தில் மரங்களின் பின்னாலோ காத்து நின்று பார்வதியம்மாள் அதைக் கேட்டதுண்டு; திருப்தியடைந்ததுண்டு. இப்படிப்பட்ட பல்வேறு நிகழ்ச்சிகளின் சித்திரங்களை நான் கேட்டுப் பூரித்தேன். இளமையிலிருந்தே யசவந்தராயரின் வாழ்க்கை ஒரு முட்பந்த ராக இருந்தது என்றே எனக்குத் தோன்றியது. தான் பட்ட கஷ்டங்களையெல்லாம் நினைத்துப் பார்க்கும் ஒருவன் பிறருடைய இன்ப துன்பங்களையும் எளிதாகப் புரிந்துகொள்கிறான். அப்படிப் புரிந்துகொண்டதால்தான் அவர் வளர்ந்த பிறகும் பிறரிடம் மிகவும் இரக்கம் உள்ளவராக நடந்துகொண்டார். வீட்டின் தலை வனாக ஆன பின்பு அவருடைய கை பிறர்க்கென அதிகமாக நீண்டது. கொடுப்பதில் அகலக் கால் வைத்தார். கொடுப்ப வர்கள் இருந்தால், அப்படிப்பட்டவர்களை ஏமாற்றுவதற்காக உலகம் எப்போதுமே காத்துக்கொண்டிருக்கிறது. கள்ளரும், பொய்யரும் அவருடைய இரக்கத்தைத் தம்முடைய இலாபத்துக் காகப் பயன்படுத்திக்கொண்டது ஒரு வியப்பல்ல. ராம ஹெக்கடே தன்னுடைய தந்தை நடந்துகொண்ட முறையை எடுத்துச் சொன்னாரல்லவா? அப்படிப்பட்ட மக்கள் எல்லாக் காலத்திலும் இருப்பார்கள். நல்லவர்களா, இல்லையா என்ப தைக் கொடுப்பவனே இனம் கண்டுகொள்ள வேண்டும்.

முன்னாலேயே சொல்லியிருந்தேன்—யசவந்தருக்கு வந்திருந்த பல கடிதங்களின்மீது அவர் தக்கவன், தகாதவன் என்பதைப் பற்றி எழுதியிருந்தார் என்பதாக. அவருடைய நினைவில் அப்படி

யொரு போராட்டம் பெரிதாக இருந்தது. ஒருவன் தகாதவன் என்று தெரிந்த பிறகும், தான் நினைத்தது சரியா அல்லது அவன் போக்கு சரியா என்னும் போராட்டம் அவர் மனத்தில் தோன்றத் தவறியதேயில்லை. அறிவுக் கூர்மையுடையவர்களுக்கு வாழ்க்கை யென்பது கடைசி நேரம்வரை ஒரு முள்படுக்கையாகவே அமைந்துவிடும்போல் இருக்கிறது!

பெனகனஹள்ளியில் நான், ஊரைச் சுற்றிக்கொண்டும், சங்கர ஹெக்கடேயின் மூலம் என் வேலையை முடித்துக்கொள்ளத் திட்டமிட்டுக்கொண்டும், பிள்ளையார் கோவிலை வலம் வந்து கொண்டு, பார்வதியம்மா, மூகாம்பா இவர்களின் பழங்கதைகளைக் கேட்டுக்கொண்டும் மொத்தம் மூன்று நாட்களைக் கழித்தேன். அந்த ஊரை விட்டுப் புறப்படுவதற்கு முன்பு அந்த அதிர்ஷ்டம் கெட்டவளின் வீட்டுக்கு ஒரு தடவை போய், ''அம்மா, அடுத்த மாதத்திலிருந்து பத்து ரூபாயாவது அனுப்பி வைக்கட்டுமா? இந்த மூன்று மாதப் பணம் இங்கிருக்கிறது. பெற்றுக்கொள்ளுங்கள்'' என்று சொல்லி, கொடுத்தேன்.

''இவ்வளவு ரூபாயை நான் எங்கே வைத்துக்கொள்வேன்? ராமனிடம் கொடுக்கவேண்டும்'' என்றாள்.

''அவரிடமா!'' என்று நான் வியந்தேன்.

''ஏன்? அவன் அடுத்த வீட்டுக்காரன். எனக்கு எது வேண்டுமானாலும் அவனே கொண்டுவந்து கொடுக்கிறான்.''

''அது சரி. என்றாலும்கூட...''

என் கருத்தை அறிந்துகொண்டதைப்போல அந்த அம்மாள், ''ராமன் தின்று விடுவான் என்கிறாயா? தின்னட்டுமே! அவனும் எனக்கு ஒரு பிள்ளையைப் போல. இந்த வட்டாரத்தில் எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்? மேலும் பணம் இருப்பதே தின்பதற்காகத்தான்; நானானால் என்ன, அவனானால் என்ன?''

நான் வயிறு வெடிக்கச் சிரித்தேன். ''அப்படியானால், அம்மா, நானே அதைத் தின்று விடுகிறேன். பணத்தைப் பொறுத்த வரையில் எனக்கு நல்ல ஜீரணசக்தி யுண்டு. ஆயிரம் ரூபாய் கொடுத்தால் ஒரே நாளில் அதைத் தீர்த்துக் கட்டிவிடுவேன்'' என்று நான் சொன்னதைக் கேட்டு அவர் சிரித்தார். ''அந்தப் புத்தி உனக்கு இருந்திருந்தால் நீ இங்கே வந்திருப்பாயா? எங்கள் யசவந்தன் உனக்கு நன்றாக உபதேசம் செய்ததைப் போலவே தெரிகிறது. இதோ பார், தம்பி, பணத்தை வைத்துக்கொண்டு நாம் இப்படியெல்லாம் பேசக்கூடாது. பணம் என்பது லட்சுமி.

அந்த லட்சுமியைப் பொறுத்தவரை என் மகன் அலட்சியமாக நடந்துகொண்டதால்தான் பல துன்பங்களை அனுபவிக்க நேர்ந்தது!''

நான் மீண்டும் சிரித்துக்கொண்டே, ''பாட்டி, கடைசியில் உங்கள் வேதாந்தமும் அவ்வளவுதான்! உங்களைப் போன்றவர் களும் 'காசே கடவுள்' என்றால் சாதாரண ஜனங்களுக்கும் அதே புத்திதான் வரும்'' என்றேன்.

''அப்படியல்ல, தம்பி, காசு லட்சுமிதான். லட்சுமி கடவுள் தான். காசினால் நல்லதும் உண்டு; கெட்டதும் உண்டு. ஒரு ரிஷி சொல்லியிருக்கிறானல்லவா, பர்த்ருஹரியோ, யாரோ—'தானம், இன்பம் இந்த இரண்டுக்கும் உதவாத பணம் பாழாகும்' என்று. லட்சுமி நல்லதாக இருந்தால் கடவுள், அளவோடு இருந்தால் கடவுள்; இல்லாவிட்டால் பேய்!''

அந்தக் கிழவியின் உலக அனுபவத்தை வியந்து, அடுத்த ஆண்டில் வருவேன் என்று நம்பிக்கை தெரிவித்து, சங்கர ஹெக்க டேயின் வீட்டுக்குப் போனேன். மறு நாள் சம்பு என்னுடன் கவாதிவரைக்கும் வந்தான். அன்றே நான் சிர்சியில் ஒரு நண்பர் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன். அங்கிருந்து நேராக ஊருக்குத் திரும்புவதா அல்லது என் நண்பருடைய குடும்பத்தவர்கள் இருக்கக்கூடிய குமட்டிக்குப் போவதா என்னும் சிந்தனையில் ஆழ்ந்தேன். எல்லாவற்றையும் ஒரே மூச்சில் முடித்துக்கொண் டால் சுவை குன்றிவிடும் என்று நினைத்து, ஊருக்குப்போவதே சரி என்று முடிவுசெய்து, நேராக ஊருக்குப்போய்ச் சேர்ந்தேன்.

## ஏழாம் அத்தியாயம்

நான் கஜினி முகமதும் அல்ல, பார்வதியம்மாளைப்போலப் பக்தர்கள் கூட்டத்தைச் சேர்ந்தவனுமல்ல. பிள்ளையார் கோவில் திருப்பணி செய்து முடிக்கிறேன் என்று ஒப்புக்கொண்டு ஊருக்குத் திரும்பிய பிறகு, சங்கர ஹெக்கடேக்கு அந்த வேலை யைத் தொடர்வதற்காக அவ்வப்போது பணம் அனுப்பிக்கொண்

டிருந்தேன். என்றாலும் அவரிடம் அவ்வளவு நம்பிக்கை வைக்கலாமா கூடாதா என்பதில் எனக்கு ஐயம் தீரவே இல்லை. அவர் மட்டும் பணத்துக்காக அவ்வப்போது கடிதம் எழுதிக்கொண்டிருந்தார். அவருடைய மகன் சம்பு, ''சம்புபட்டன்'' என்னும் விருதை விட்டு, ''சம்பு ஹெக்கடே'' என்ற பெயரிலே, ''இதுவரை கோவில் வேலைகள் இந்த அளவிற்கு முடிந்திருக்கிறது'' என்று எழுதிவந்தான். புதிதாகச் சீட்டாட உட்கார்ந்தவனைப் போல என் கையிலிருந்த சீட்டுக்களையெல்லாம் ஹெக்கடேக்கு நான் காட்டியது பொருத்தமா அல்லவா என்னும் ஐயமும் என்னுள் எழுந்தது. யசவந்தருடைய பணத்துக்கும், அவர் என்னிடம் வைத்த நம்பிக்கைக்கும், நான் மேற்கொண்டிருந்த இந்த வழி சரியா அல்லவா என்னும் ஐயமும் எனக்குத் தீர்ந்தபாடில்லை. பெனகனஹள்ளியைச் சேர்ந்தவர்கள் செய்ய வேண்டிய இந்த வேலையில் நான் என் நண்பரின் சார்பில் தலையிட்டதற்குக் காரணமே, அவருடைய வளர்ப்புத் தாய்க்கு அதனால் மகிழ்ச்சி ஏற்படும் என்பதனால்தான். விநாயகனைப் பொறுத்தவரை, யசவந்தருக்கு எந்த அளவுக்கு நம்பிக்கையிருந்ததோ அந்த அளவே இருந்தது எனக்கும். அதாவது, அந்த வகையான வடிவத்தில் பூசை நடத்துவதில் எங்கள் இருவருக்கும் நம்பிக்கையில்லை. அப்படியிருக்கும்போது, அவர் இருந்திருந்தால் இந்தப் பாழடைந்த கோவிலைச் செப்பனிடுவதற்கு முன்வந்திருப்பாரோ இல்லையோ? நல்ல சிற்பம் அல்லது நல்ல கட்டிட வேலைப்பாடாவது இருந்திருந்தால் அதைச் செப்பனிடுவதில் எனக்குச் சிறிது ஆர்வம் இருந்திருக்கும். அந்த நோக்கில் பார்த்தால் இந்தப் பிள்ளையார் வெறும் பிள்ளையார். யசவந்தராயரிடம், பார்வதியம்மாள் இந்த விருப்பத்தை வெளியிட்டிருந்தால் அவர் தட்டாமல் இதைச் செய்திருப்பார் என்ற நம்பிக்கையே எனக்கு அமைதியைத் தந்துவந்தது. நான் சிறிது திறமையுடையவனாக இருந்திருந்தால், என்னிடமிருந்த சீட்டுக்களையெல்லாம் மறைத்துவைத்து, நான்கு நாட்கள் அங்கேயேயிருந்து, சங்கர ஹெக்கடேயை முன்னுக்குத் தள்ளி, ''ஊருக்குப் பெரியவரான நீங்கள், இந்தக் கோவிலை பாழடையவிட்டது சரியா?'' என்று சொல்லி, அவரைத் தாழ்த்தி, பிறகு உயர்த்தி ஊக்கமூட்டி, ''உங்கள் பெயர் என்றுமே அழியாமல் இருக்கும்'' என்று சொல்லி, பணத்தைச் செலவிடும் பொறுப்பிலிருந்து தப்பித்துக்கொண்டிருக்கலாம். அதற்காகக் கோவில் வேலை

முடியும்வரை நான் அந்த ஊருக்குப்போய் வரவேண்டியிருந் திருக்கும். அப்படிச் செய்தாலும் பக்தியைவிடப் பணத்தின்மீது அதிகப் பற்று வைத்திருந்த மக்கள் அந்த ஊரில் இருந்தார்கள் அல்லவா? அப்படிப்பட்டவர்கள் இருந்ததனுல்தான் அந்தக் கோவில் பாழடைந்து கிடந்தது. ராம ஹெக்கடே போன்றவர் களும் அதேபோன்ற இன்னும் நான்குபேரும் அந்த ஊரில் இருப் பார்களே? நான் அதிக ஆர்வத்தைக் காட்டினுல் என் பின்னு லேயே "இவர் ஊரிலிருந்து வந்து நமக்குப் பிள்ளையார் கோவில் கட்டவேண்டுமென்று உபதேசம் செய்வதானுல் அதில் ஏதோ ஒரு நோக்கம் இருக்கிறது" என்று பேசிக்கொள்வார்கள். இந்த "ஏதோ" என்றுல் பத்துப்பேருக்கு இடையில் பணத்தை ஏப்பம் இடுவது என்பதுதான். தவறு செய்தாலும் கவலையில்லை. முன்பின் தெரியாத ஊருக்குப்போய் இப்படி ஒரு சந்தேகத்துக்கு ஆளாவது வேண்டாம். ஆகவே என் கையிலிருந்த சீட்டுக்களை யெல்லாம் காட்டியதே நல்லதாயிற்று என்று நினைத்துக் கொண்டேன்.

நான் ஊருக்குத் திரும்பி வந்தபிறகு குளிர்காலம் தொடங் கியது. பின்பு வழக்கம்போல வெயில் காலம் வந்தது. ஒவ்வொரு மாதமும் சங்கர ஹெக்கடேயிடமிருந்து 'பில்' வந்துகொண் டிருந்தது. சம்பு ஹெக்கடே நடந்த வேலை விவரத்தை எழுதி வந்தான்: "நாங்கள் மழை நின்ற மறுநாளே பழைய கோவிலைப் பிரித்துப் போட்டோம்; அதன் மரச்சட்டங்கள் எதற்கும் பயன் படமாட்டா. அது வெடித்துப் பாழாகியிருந்ததால் அடிக்கல் வரை இடிக்கவேண்டியதாயிற்று. அடிப்படை கருங்கல்லால் கட்டவேண்டாமா?" என்று ஒரு முறை எழுதியிருந்தான். மற்றொரு முறை: "எங்கள் அப்பா மரவேலைக்காக இப்போதே எங்கள் நிலத்திலுள்ள மரங்களை வெட்டிவிட்டார்; ஆனுல் எங்கள் ஊரில் மரம் அறுப்பவர்கள் இல்லை; இங்கே தச்சர்களும் எளிதில் கிடைக்கமாட்டார்கள். சிர்சியிலிருந்தோ, குமட்டியி லிருந்தோ அவர்களை வரவழைக்கவேண்டும். ஒன்றுக்கு இரண் டாக அவர்கள் கூலி கேட்கலாம்" என்று எழுதியிருந்தான். "அப்படியே செய்யுங்கள்; நம்பிக்கையானவர்களை வரவழைத் துக்கொள்ளுங்கள். முன்பணம் கொடுத்துவிட்டுப் பின்பு தொல்லைப்படும் நிலைமையை உண்டாக்கிக்கொள்ளாதீர்கள்" என்று நானும் அவர்களுக்கு அறிவுரை கூறினேன். "கல்வேலை தொடங்கியிருக்கிறது; கட்டும் வேலையை ஆரம்பித்திருக்கிறோம்.

தச்சர்களும் வந்துள்ளார்கள். இந்த கோடைகாலம் முடிவதற்குள் கோவிலுக்குக் கூரை வேய்ந்துவிடலாம்'' என்று நம்பிக்கையூட்டும் கடிதம் ஒன்று அதன் பிறகு வந்தது. மற்ெறாரு கடிதத்தில், ''ராம ஹெக்கடே, 'நீங்கள் செய்வதுதான் செய்கிறீர்கள்; மூலஸ்தானத்திற்கு முன்னால் சிறிது இடம் விடுவதற்குப பதில் மேலும் நான்குபேர் உட்கார்ந்துகொள்ளும் வகையில் ஒரு மண்டபம் கட்டக்கூடாதா?' என்று சொல்கிறார். 'மூலஸ்தானத்திற்குமேல் உயரமாகச் சுவர் எழுப்பிச் செப்புத்தகட்டால் கூரை வேயவேண்டும்; செய்கிற வேலை நிலையானதாக அமைய வேண்டும்' என்கிறார்'' என்பதையும் அவன் தெரிவித்திருந்தான். அங்கிருந்து நான் கோவிலின் நீள, அகலங்களின் அளவை வரவழைத்து, ஒரு படம் வரைந்து கொடுத்திருந்தேன். இப்போது மூலஸ்தானத்திற்காகத் தனியே உயர்ந்த சுவர் முதலியவை கொண்டதாக மீண்டும் ஒரு படம் தயாரித்து அனுப்பினேன். ''உங்கள் பிள்ளையார் இத்தனை ஆண்டுகளாக வைக்கோல் கூரையில் இருந்து நனைந்துகொண்டிருந்தான். கோவில் கூரைக்குக் குயவன் செய்த சாதாரண பழைய ஓடுகள் கூட இல்லை; அவனுக்கு மங்களூர் ஓடு போட்ட கூரை போதுமானது. உங்கள் ராம ஹெக்கடேக்குத் தாராள மனம் வந்து, அவர் செப்புத் தகடுகளை வருவித்துக் கொடுப்பதானால் முன்பின் யோசிக்காமல் கூரை வேலையை உடனே முடித்து விடுங்கள்'' என்று எழுதினேன். அதற்குச் சம்பு, ''ஐயோ கடவுளே, ராம ஹெக்கடே கொடுக்கின்றேன் என்று சொன்ன ஐம்பது ரூபாய்களை இன்னும் கொடுக்கவில்லை. கொடுப்பார் என்னும் நம்பிக்கையும் எனக்கு இல்லை. அதற்குப் பதிலாக அவர் பார்வதியம்மாளுக்கு ஏதேதோ சொல்லி அவரிடமிருந்து எனக்குப் பேச்சு வாங்கிக் கொடுக்கிறார்'' என்று பதில் எழுதியிருந்தான்.

இந்தச் செய்தி மிகவும் சுவையானதாக இருந்தது. யசவந்த ராயர் விட்டுச் சென்ற பணம் என் கைக்கு வந்திருக்கிறது என்பது சங்கர ஹெக்கடேயின் மூலமாகவோ, பார்வதியம்மாளிடமிருந்தோ அவர் காதில் விழுந்தபிறகு தலைமை தாங்கி நடத்துவதற்கு அவர் பின் வாங்குவாரா? ஒரு நாள் அவர் பார்வதியம்மாளுக்குச் சொன்னாராம்: ''நீ ஒரு மூடம். மாதத்துக்கு ஐம்பது ரூபாயாவது செலவுக்குக் கேட்டிருக்கலாம். அதை விட்டுவிட்டாய். நான் உன்னை இத்தனை நாள் ஆதரித்ததனால் அல்லவா இந்தப் பெருமை? வந்த ஆள் (அதாவது நான்)

யசவந்தன் குடும்பத்தைச் சேர்ந்தவனல்ல. உன்னைப் போன்றவனுமல்ல. நானாக இருந்தால், எல்லாப் பணத்தையும் யசவந்தராயனை வளர்த்த உன் காலடியில் கொண்டுவந்து சொரிந்திருப்பேன். நீ அப்படியும் செய்யவில்லை. கோவில் கட்டவேண்டும் என்று நீ சொன்னது சரிதான்; அதைச் செய்யவேண்டியதுதான். எனக்கும் அதில் ஆர்வம் இருக்கிறது. அதுவும் கடவுள் வாழும் கோவிலல்லவா? விநாயகன் என்ன சாதாரணமான கடவுளா? அவனுடைய கோவிலுக்குச் செப்புத் தகடுகள் வேய வேண்டாமா? ஒன்று அல்லது இரண்டு ஆயிரம் அதிகமாகச் செலவாகலாம். அவன் கொடுப்பது யசவந்தனின் பணத்தைத் தானே? தன் தகப்பன் வீட்டுப் பணத்தையா கொடுக்கிறான்? கொடுக்கட்டுமே. இந்த ஊரில் பிறந்து வளர்ந்த பையன் யசவந்தன். அவனாக இருந்தால் கொடுத்திருப்பான்.''

''அந்த யசவந்தன் குமட்டியைவிட்டுப் புறப்படும்போது இரண்டு லட்ச ரூபாய் எடுத்துக்கொண்டு பம்பாய்க்குப் போனான் என்று கேள்விப்பட்டேன். மனைவிமீதும், மக்கள்மீதும் இருந்த கோபத்தில், அவர்கள் எல்லோருக்கும் நாமம் போட்டுவிட்டு, இரண்டு லட்ச ரூபாய் கையில் எடுத்துக்கொண்டு போய் விட்டான். அந்தப் பம்பாயில் துரையைப்போல உட்கார்ந்து கொண்டு தர்பார் நடத்தினான். உனக்கு அவன் அனுப்பிவந்த பணம் எவ்வளவு? மாதத்திற்கு ஐந்து; ஐந்து ரூபாய் போதுமா? உன் வீட்டுக்கு வந்தான் அல்லவா, அவன் கையில் வந்த பணம் பதினைந்தாயிரமாக இருக்காது; நான் சொல்கிறேன். குறைந்தது ஐம்பதாயிரமாவது இருக்கும். ஒரு லட்சமும் வந்திருக்கலாம். அந்த இரகசியத்தையெல்லாம் யாராவது சொல்லுகிறார்களா?'' என்று அவளைக் குத்திக்கொண்டேயிருந்ததாக, சம்பு எனக்கு எழுதிய கடிதங்களிலிருந்து தெரியவந்தது. சம்பு தானாகவே அப்படியெல்லாம் பொய்களை ஜோடித்து எனக்கு எழுத மாட்டான் என்று தோன்றியது.

இதற்கிடையே குளிர்காலத்தில், பார்வதியம்மாளின் நிலைமையைத் தெரிவித்து சம்பு எனக்கொரு நீண்ட கடிதம் எழுதியிருந்தான்: ''நீங்கள் கூறைப்பற்றித் தெரிவித்த கருத்துக்களைப் பாட்டிக்குக் கூறினேன். அவர் உங்கள் கருத்தை ஒப்புக்கொண்டார். ஆனால் பக்கத்து வீட்டு ராம ஹெக்கடே அவரை நெருக்குகிறார் என்று தெரிகிறது. அவ்வப்போது அவர் வந்து, 'இதுவரை உனக்கு வயிற்றுக்கில்லாதபோது கொடுத்தோம்,

இனிமேல் உன் ஐந்து ரூபாயைக்கொண்டு நீ சுகமாய் இருக்க லாம். உனக்கு ஏன் இனி எங்கள் தயவு? அவனுக்குக் கடிதம் எழுதி, யசவந்தன் பணத்திலிருந்து மாதம் ஐம்பது ரூபாயாவது வரவழைத்துக்கொள் என்றால் நீ கேட்கவில்லை. நீ படுத்து விட்டால் யார் உன்னைப் பார்த்துக்கொள்வார்கள்? உனக்கு என்ன சொத்தா, காசா? முன்னால் இருபது, இருபத்தைந்து வருடங்கள் எங்கள் வீட்டில் வேலை செய்து உன் வயிற்றை நிரப்பிக்கொண்டாய். பிறகு கிழவி ஆனாய். நாங்கள் இரக்கப் பட்டு உன்னைக் காப்பாற்றினோம். இனியும் காப்பாற்றுவோம் என்றா நினைத்துக்கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டுத் துளைக் கிறாராம்'' என்பதாகக் கடிதம் எழுதியிருந்தான்.

எனக்கு ஒரே அச்சமாக இருந்தது. ''பணம் என்பது லட்சுமி'' என்று கூறியிருந்தார் பார்வதியம்மாள். ''பணம் என்பது கொடிய பேய்'' என்று நினைத்து வருந்தும் காலம் வந்ததே என்று எண்ணினேன். அவரைக் கருவியாகப் பயன்படுத்தி, என்னிடமிருந்து என்னுடையதல்லாத பணத்தைப் பறித்துக் கொள்ளும் புதுச் சூழ்ச்சி ஒன்றை அவர் மேற்கொண்டிருந்தார். பிள்ளையார் கோவில் அதற்கு ஒரு சாக்காக அமைந்தது. பார்வதியம்மாளின் முதுமைக் காலத்தில் அவரைத் துளைத்துக் கொண்டிருந்தால் சிறிதாவது இலாபம் கிடைக்கும் என்னும் தீய எண்ணம் அவர் மனத்தில் ஏற்பட்டிருக்கவேண்டும். இதனால் நாளுக்கு நாள் அவருடைய கெடுபிடி மிகுந்து, பார்வதியம்மா ளின் தொல்லையும் அதிகமாயிற்று. அவருக்கு நான் இருபத் தைந்து ரூபாய்களை அனுப்பினாலும்கூட அது சம்புவுக்கும், தபால்காரனுக்கும் போவதற்குப் பதிலாக இனிமேல் ராம ஹெக் கடேக்குப் போய்ச் சேரும். பணம் உப்பைப்போன்றது. சிறிது நாக்கிலிட்டுக்கொண்டால் சுவையாக இருக்கும். அதிகமாகத் தின்றால்...? ஒரே வேட்கைதான். ராம ஹெக்கடேக்கும் வெறும் பேச்சைக் கேட்டே வேட்கை தொடங்கிவிட்டது. நான் மாதத் துக்குப் பத்து ரூபாய் என்னும் கணக்கில் பார்வதியம்மாளுக்குப் பணம் கொடுத்துவிட்டு வந்ததே அவருடைய அந்த வேட்கைக் குக் காரணமாயிற்று. அவருடைய வளர்ப்பு மகனின் பணம் இருக்கிறது என்பதே அந்த அரக்கப் பசிக்குக் காரணமாயிற்று. பார்வதியம்மாளின் முதுமைக் காலத்து அமைதி என் அறிவின் மையால் குலைந்துவிட்டதல்லவா என்று வருந்தினேன். அவர் இன்னும் ஒன்று அல்லது இரண்டு ஆண்டு வாழ்க்கையைக்

கழிக்கவேண்டுமல்லவா? அவர் அந்த இடத்தைவிட்டு வெளியேறுவாரா? எனக்கு எந்த வழியும் தோன்றவில்லை. இனி, சங்கர ஹெக்கடேக்கு, ஒரு தற்காலிக ஏற்பாட்டைப் பற்றி எழுதுவதைத் தவிர வேறு வழியில்லை என்று பட்டது. ''உங்கள் அக்காவுக்கு இரண்டாவது உயிராக இருக்கும் பார்வதியம்மாளை உங்கள் வீட்டிலேயே வைத்துக்கொண்டு காப்பாற்றுவதாக இருந்தால், எவ்வளவு செலவு ஆனாலும் நான் அனுப்பி வைக்கிறேன்'' என்று கடிதம் எழுதினேன். அவரும் தன் அக்காளுடன் இதைப் பற்றிப் பேசியதாகத் தெரிந்தது. தானும் தன் அத்தைக்கு இதுபற்றிக் கூறியதாகச் சம்புவும் எழுதியிருந்தான். இந்த எல்லா வேலைகளுக்கும் சம்புவே ஓடிக்கொண்டிருந்தான். என் யோசனையைச் சங்கர ஹெக்கடேயும் ஒப்புக்கொண்டார். அவளுடைய அக்காளுக்கும் அதில் அதிக அக்கறை இருந்தது. அந்த அம்மாள் இந்தச் செய்தியை எடுத்துக்கொண்டு தன் தோழியின் வீட்டுக்குப்போய் வருமாறு அழைப்பு விடுத்தாராம். ஆனால் அவருக்கும் இதன் முடிவைப்பற்றிச் சந்தேகமாகவே இருந்தது. ராம ஹெக்கடே எவ்வளவுதான் கஞ்சராக இருந்தாலும், வஞ்சகராக இருந்தாலும் இதுவரை தனக்கு ஆதரவு தந்த அந்த நிழலிலிருந்து வெ வருவதற்குப் பார்வதியம்மாள் ஒப்புக்கொள்வாரா என்னும் ஐயம் இருந்தது. அதுவுமின்றி, பழைய கதையை நினைத்துப் பார்த்தால், பழைய வெறுப்பின் காரணமாக அவரும் துன்பப்பட்டார். சங்கர ஹெக்கடேயின் தந்தையார் மனத்தில் தம் மக்கள் அவருடன் பேசுவதே கோபத்திற்குக் காரணமாக இருக்க, அவருடைய வீட்டிலேயே தான் போய் இருப்பதுபற்றி இறந்தவருடைய ஆவி என்ன சொல்லுமோ என்று பார்வதியம்மாள் நினைத்துப் பார்க்கமாட்டாரா? இது ஒரு பெரும் தடையாக மூகாம்பாளுக்குத் தோன்றியது. தான் அவர் வீட்டுக்குப் போனதைப்போலவே அவரும் எப்போதாவது தன் வீட்டுக்கு வரத் தயங்கமாட்டார்; அதுவும் தன்மேலுள்ள அன்பினால்தான். ''எங்கள் வீட்டிலேயே வந்து தங்கிவிடு'' என்று எப்படிக் கேட்பது?

அப்படியும் மூகாம்பாள் அந்த பொறுப்பை ஏற்றுச் சென்று வெறும் கையுடன் திரும்பியதாக, சம்பு எழுதிய கடிதத்திலிருந்து தெரிய வந்தது. மூகாம்பா நினைத்த அந்த இரண்டு சந்தேகங்களும் பார்வதியம்மாளை வாட்டி வந்தன. அவர் சொன்னாராம்: ''மூகாம்பா, நான் இதுவரை யாரிடமும் பேச்சுக் கேட்காமல்

வாழ்ந்ததுண்டா? மேல் வீட்டில் இருந்தபோது என்னை எல்லோ ரும் திட்டினார்களல்லவா? யசவந்தனின் மாற்றாந்தாய் சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லித் தீர்த்தாள். என்னை எதுவுமே சொல்லாதவள் அவனைப் பெற்ற தாய். அதன் பிறகு இந்த ராம ஹெக்கடேயும், அவனுடைய தந்தையும், அவர்கள் வீட்டில் வேலை செய்து வந்தபோது ஏதாவது ஒன்று சொல்லிக்கொண்டே யிருந்தார்கள். நான் வயிற்றுக்கில்லாமல் வந்தவள் என்பது அவர்களுக்குத் தெரியாததா? விடியற்காலையில் எழுந்து நள்ளிரவு வரை உடம்பு ஓடிய வேலை செய்து களைத்தாலும், வசவு வாங்கு வது தப்பியதில்லை. நான் உயிர் வாழ்வதே அதற்காகத்தான் என்று தெரிந்துகொண்டேன். இப்போது நான் கண் தெரியாத வள். உழைக்க முடியாதவள். திட்டுகிறார்கள்! திட்டட்டும். எனக்குத் தெரிந்த குழந்தைகள்தானே திட்டுகிறார்கள்? நான் செத்த பிறகாவது அவர்கள் வாயிலிருந்து 'ஐயோ பாவம், பார்வதி செத்துப்போனாள். நாம் எவ்வளவுதான் அவளைத் திட்டினாலும் அவள் ஒரு தடவையாவது எதிர்த்துப் பேசிய தில்லை' என்று வரும். நிச்சயமாக அப்படிச் சொல்லுவார்கள். அப்படித் திட்டுவதும் ஒரு ராசி'' என்று கூறி, மூகாம்பிகையை வெறும் கையுடன் திருப்பி அனுப்பினாராம்.

சம்புவின் கடிதங்களிலிருந்து ராம ஹெக்கடேயின் குத்தல்கள் பெருகி வந்ததாகத் தெரிந்தது. இது போதாதென்று மூகாம்பா தங்கள் வீட்டுக்கு வரும்படி பார்வதியம்மாளை அழைத்தது அவருக்குத் தெரிந்துவிட்டதாம். அன்றே அவர் பார்வதியம்மா ளின் வீட்டுக்குப்போய், ''ஓகோ, நான் உனக்குச் சொன்னது தவறாகப் போயிற்றா? உன்னுடைய நன்மைக்காகச் சொன்னதை ஊர் ஊராகத் தெரிவித்துவிட்டு வருகிறாயா? அப்படியே செய். நீ இந்தத் தள்ளாத வயதில் உன்னுடைய மூட்டை முடிச்சுக் களுடன் சங்கர ஹெக்கடேயின் வீட்டுக்குப் போய் நிம்மதியாக வாழ்ந்துகொள். அதனால் எங்களுக்கு ஒன்றும் நஷ்டமில்லை'' என்று ஒரு பிரம்மாஸ்திரத்தையே எய்துவிட்டுப் போனாராம். அன்று இரவெல்லாம் பார்வதியம்மாள் மிகவும் கலங்கினாராம். நான் அவருடைய நிலைமையைக் கற்பனை செய்து காணமுடிந்தது. மறுநாள் பொழுது விடியும்பொழுது, ராம ஹெக்கடே தமது மனைவியின்மூலம் மற்றொரு நன்மொழியை அனுப்பிவைத்தா ராம். ''போ, மகராசியாகப் போ, ஆணை வைத்துத் தடுத்த வீட்டுக்குப்போய் அங்கே உன் உயிரை விடு. பிறகு உன் ஆவி

சிராத்தம் செய்பவர்கள் இல்லாமல்போய் ஊரிலிருப்பவர்களை யெல்லாம் பிடித்து ஆட்டட்டும். இனி நீ எங்கள் வீட்டுப்படி ஏற வேண்டாம்'' என்று சொல்லுவித்து, தமது உறவை முறித்துக் கொண்டு விட்டாராம். அந்தப் பார்வதியம்மாள் சிவனைப்போல அந்த நஞ்சை அப்படியே விழுங்கினாரே தவிர ஒன்றுமே பேசவே இல்லை. ''இப்படியே போனால், இந்தப் பாட்டி கவலையிலே மெலிந்து, வயிற்றுக்கு இல்லாமல் நலிந்து, அடுத்த மழைக் காலத்தைக் காணுமலே போய்விடுவாள் என்றே எனக்குத் தோன்றுகிறது'' என்பதாகச் சம்பு எழுதியிருந்ததைப் படித்த போது, எனக்கு மிகவும் அச்சமாக இருந்தது. பிள்ளையார் கோவில் திருப்பணி யாருக்காக? நான் யசவந்தராயர் சார்பில் ஏற்றுக்கொண்ட பொறுப்பு யாருடைய அமைதிக்காக? என்று சலிப்பு ஏற்பட்டது.

நம்மைப்போன்ற படித்தவர்கள் கிராம வாழ்க்கையின் அமைதி யைப்பற்றி மிக நீளமாகப் பேசிக்கொண்டிருக்கிறோம். ஆனால் தீய மனிதர்கள் எத்தனை பேர் நமது கிராமங்களில் இல்லை? அவர்கள் செயல்களால் அமைதி எவ்வளவு கெடுகிறது என்பதை நினைத்தபோது எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. தொலை வில் சும்மாயிருந்த நான், என்பாட்டுக்குப் பணத்தை மணியார்ட ரில் அந்த அம்மாவுக்கு அனுப்பிவிட்டு, யாருடைய பேச்சுக்கும் போகாமல் இருந்திருந்தால் எவ்வளவு நன்றாய் இருந்திருக்கும் என்று நினைத்தேன். சம்புவைப்பற்றி எனக்கு ஐயம் தோன்றி யிராது. பார்வதியம்மாளுக்கும் கஷ்டம் அதிகமாயிருக்காது. இப்பொழுது நானாகவே எல்லாவற்றையும் கெடுத்துவிட்டதைப் போலத் தோன்றுகிறது. இருநூறு மைல் தொலைவில் உட்கார்ந்து கொண்டு அறிவு மிகுந்தவனைப்போல மற்றவர்களுக்கு அறிவுரை கூறி அதனால் அவர்களுக்குத் துன்பத்தை விளைவித்துக்கொண்டி ருக்கிறேன். ஓரிரண்டு நாட்களுக்கு என் மனம் மிகவும் கொதித் தது. சம்புவுக்குக் கோவில் வேலை பற்றிச் சுருக்கமாக எழுதி னேன்; வேறு எதையும் அதில் சேர்க்கவில்லை. இனி அறிவுரை கூறுவதற்கு முன்னால், நன்றாகச் சிந்தித்து, முடிந்தால் ஓய்வாக அங்கே போய், பார்வதியம்மாள் வசிப்பதற்கு வேறே ஏற்பாடு செய்ய முடியுமானால் செய்து வரவேண்டும். இல்லாவிட்டால், இதுவரை என்னால் ஏற்பட்ட தொல்லையே போதும் என்றும் எண்ணினேன்.

இதற்கிடையே மேலும் ஓரிரு தொல்லேகளே மேலே போட்டுக் கொண்டேன். யசவந்தர் இன்னும் மூவருக்குப் பணம் அனுப்பச் சொல்லியிருந்தாரல்லவா? அவர்களுக்கு அவர் இறந்த செய்தியைத் தெரிவித்ததோடு, "அவரைப்பற்றி உங்களுக்குத் தெரிந்த செய்திகளே எழுதினுல் மிகவும் உதவியாய் இருக்கும்" என்றும் தெரிவித்தேன். அதற்கு, குறிப்பிட்ட காலத்திற்குள் விஷ்ணு பந்த காட்டி என்பவரிடமிருந்து ஒரு பதில் வந்தது. யசவந்த ராயரிடம் மிகவும் மதிப்பு வைத்திருந்தவர் அவர் என்பது கடிதத்திலிருந்து தெரியவந்தது. என் நண்பர் ஆண்டுக்கொரு முறை மகாபலேஸ்வரத்திற்குப் போய் ஓய்வாக நாளேக் கழித்தபோது அவருக்கும் இவருக்கும் நட்பு ஏற்பட்டதாம். காட்டி இப்போது அங்கே இல்லே. அங்கிருந்து, தமது எழுத்துக்கும் படிப்புக்கும் வசதியாக இருக்கும் என்று பூனுவிலுள்ள தமது மகள் வீட்டில் வந்து தங்கி இருக்கிருராம். "எனக்கு உடல் நலம் இல்லே. எப்போதும் மருந்து உட்கொள்வதுதான் வேலே. படிப்பிலும், எழுத்திலும் பொழுதைக் கழிக்கிறவன் நான். வயதும் ஆயிற்று. ஏதோ ஒரு பைத்தியக்கார வேலேயைத் தொடங்கியிருக்கிறேன். அது இப்பொழுது முடியும் நிலேமைக்கு வந்திருக்கிறது. அநேகமாக ஆறு மாதங்களில் முடிந்துவிடலாம். யசவந்தருடைய உதவியும், ஊக்கமும்தான் இந்த வேலேயில் ஈடுபடும்படி என்னேச் செலுத்திய சக்தியாகும். நீங்கள் யாரோ, நான் யாரோ? அவர் மேலுள்ள அன்பால் அவர் கொடுத்துக்கொண்டு வந்த தொகையைத் தொடர்ந்து கொடுத்துவருகிறீர்கள். நான் உங்களுக்குப் பெரிதும் கடன்பட்டிருக்கிறேன். நீங்கள் எப்போதாவது பூனு வழியாகச் செல்ல நேர்ந்தால் எங்கள் வீட்டுக்கு வாருங்கள்; அப்போது அவரைப்பற்றி எனக்குத் தெரிந்ததை நான் சொல்லுகிறேன்" என்பதாக அவர் எழுதியிருந்தார். என் நண்பரின் பொருட்டு நான் என் சொந்தப் பணத்தை அவருக்கு அனுப்பிவந்ததாக அவர் மனத்தில் ஒரு தவருன கருத்து ஏற்பட்டிருக்கிறது என்று எனக்குப்பட்டது. "அப்படியல்ல; யசவந்தருடைய பணமேதான்; அவர் சொன்னதைப்போலவே நான் அனுப்பி வருகிறேன்" என்று அவருக்குக் கடிதம் எழுதினேன். அதனேடு, "பூனு வழியாகச் செல்லும் வாய்ப்பும், போதிய நேரமும் கிட்டுமானுல் உங்களே வந்து சந்திக்கிறேன்" என்றும் எழுதினேன். இதனுல் ஏற்பட்ட ஆர்வத்தினுல், "உங்கள் எழுத்து என்று குறிப்பிட்டிருந்தீர்களல்லவா? அது என்ன?

எனக்கு தெரிவிக்கலாமா?'' என்றும் கேட்டேன். ஒரு மாதம் அல்லது ஒன்றரை மாதத்திற்குப் பிறகு அவரிடமிருந்து வந்த கடிதத்தில் கால தாமதத்திற்குக் காரணம் காட்டியிருந்தார். அவர் நோய்வாய்ப்பட்டிருந்ததே அதற்குக் காரணம். தமது எழுத்தைப்பற்றி, ''அற நூல்களைப்பற்றி ஏதோ கிறுக்கி என் தினவைத் தீர்த்துக்கொள்கிறேன்'' என்று தெரிவித்திருந்தார். அதன் பிறகு அந்தக் கடிதத் தொடர்பை நான் வளர்க்கவில்லை.

பண உதவி பெற்றுவந்த மற்ற இருவரில், குமட்டிக்கு அருகிலிருந்த ஹொன்னகத்தே மஞ்சையா என்பவர் ஒருவர். ஒரு காலத்தில் நானும் ஹொன்னகத்தேக்கு போனதுண்டு, அது குமட்டியிலிருந்து மூன்று அல்லது நான்கு மைல் தொலைவிலிருக்கிறது. அங்கே நான் நள்ளிரவில் பத்துப் பன்னிரண்டு பேரைக் கூட்டி வைத்துக்கொண்டு சொற்பொழிவு செய்ததுண்டு. எப்படியும் மற்றொரு முறை குமட்டிக்குப் போகவேண்டி வரும். அப்போது அந்த மஞ்சையனைப் பார்க்கலாம் என்று எண்ணினேன். நான் அவருக்கு எழுதியிருந்த கடிதங்களுக்கு ஐந்து, ஆறு மாதங்கள் வரை பதிலே இல்லை. மணியார்டர்க் கூப்பனில் அவருடைய கையெழுத்தே இருந்தது. நடுங்கிய கையால் எழுதியதைப் போன்று அது காணப்பட்டது. அதனால் அவர் ஒரு கிழவராக இருக்கவேண்டும்; நானே போய் அவரைக் காணவேண்டுமே தவிர, ''உங்களிடமிருந்து கடிதமே வரவில்லை'' என்று பழி சொல்லக்கூடாது என்பதாக முடிவு செய்தேன். பண உதவி பெற்ற மற்றொருவரும் குமட்டிக்கு அருகிலிருப்பவரே. நெடுநாட்களுக்குப் பிறகு எனக்கு அவரிடமிருந்தும் ஒரு கார்டு வந்தது. அவரும் உதவியை நினைவுகூர்ந்து எழுதியிருந்தார். ''யசவந்த ராயர் இறந்த செய்தியைக் கேட்டு என் தாய் மூன்று நாட்கள் நீரைக்கூடக் குடிக்கவில்லை'' என்று தெரிவித்திருந்தார். அதன் பிறகு, ''நீங்கள் யார்? உங்கள் தாயார் யார்?'' என்று கேட்டு நான் எழுதிய கடிதங்களுக்குப பதில் வரவில்லை. நான் அவற்றையெல்லாம் தூண்டித் துருவிக் கேட்கவேண்டாம் என்று விட்டுவிட்டேன். அந்த ஆளின் பெயர் தாரேசுவரத்துச் சீனன். தாரேசுவரம் என்பது நான் கேட்ட ஊர்; பார்த்த ஊர். ஆனால், அந்த ஆள் கோடகணி என்னும் ஏதோ ஒரு கிராமத்தில் வசித்து வருகிறார். குமட்டிக்குப் போனால், வாய்ப்பு இருந்தால், ஓய்வு கிடைத்தால் அவரையும் பார்க்கலாம்.

இந்தப் பக்கத்தில் சம்பு ஹெக்கடேயிடமிருந்து வந்த இரண்டு, மூன்று கடிதங்களிலும், ''நீங்கள் பாட்டியைப் பற்றி ஒன்றும் எழுதவில்லை; அவர் இன்னும் அங்கேயே இருக்கிறார். ராம ஹெக்கடே கொண்டிருக்கும் பகைமையை நினைத்து அவர் மிகவும் கலங்குகிறார். நாங்கள் வீட்டுக்கு வாருங்கள் என்று அழைத்தாலும் வருவதில்லை. இந்த இரண்டு மாதங்களில் அவர் மிகவும் இளைத்துவிட்டார். அடுத்த சதுர்த்தி வரை, விநாயகர் பிரதிஷ்டை ஆகும் வரை அவர் உயிருடன் இருப்பாரோ என்ற ஐயமும், அச்சமும் எனக்கு ஏற்பட்டிருக்கின்றன. கோவிலைப் பிரித்துப் போட்டிருக்கிறோம். அதைக் கட்டிப் புதிதாகப் பிரதிஷ்டை செய்யும் வரை பூசை செய்வதற்கில்லை. நீங்கள் இவ்வளவெல்லாம் அறிவுரை கூறியது அந்தப் பாட்டியின் அந்த ஒரே ஓர் ஆசையை நிறைவேற்றுவதற்காகத்தான். அதற்குள்ளேயே அவர் இறந்துவிட்டால், 'என் போதாத காலம், கடவுளும் இப்படி நடுத்தெருவில் நிற்கிறான்' என்று நினைக்கலாம். மொத்தத்தில் அந்த விநாயகர்தான் காப்பாற்றவேண்டும்'' என்று எழுதியிருந்தது. கடிதத்தின் முடிவில், ''கோவில் மதிலின் வேலை இன்னும் ஒரு வாரத்தில் முடிந்துவிடும். மரவேலைகள் நடந்துவருகின்றன. கூடவே கூரை வேய்ந்து வருகிறோம். இன்னும் ஓடுகள் வந்து சேரவில்லை. விரைவில் வந்து சேரும்'' என்று குறிப்பிட்டிருந்தான்.

இதையெல்லாம் நினைத்துப் பார்த்தால் சில சமயம் எனக்குச் சிரிப்பாக வருகிறது. நானே எழுதிக் கொடுத்த வரைபடத்தின் மேல் புதிய பிள்ளையார் கோவில் என் கனவிலும் பகற் கனவிலும் தோன்றுகிறது. பழைய கோவிலிருந்த இடத்தில் தோன்றியிருக்கும் இந்தப் புதிய கோவிலை நான் பகுதி பகுதியாகக் காண்கிறேன். அதில் கூரை வேலையெல்லாம் முடிந்து, பூச்சு வேலையும் முடிந்து, பிரதிஷ்டை செய்யும் நாளும் வந்து அதுவும் முடிந்தது. பார்வதியம்மாளின் வேண்டுதலுக்கு ஏற்ப பெரிய பூசைக்கு ஆயிரம் தேங்காய்கள் குவியலாகக் கிடப்பதைக் காண்கிறேன். சில சமயங்களில் இந்தக் கனவுக் காட்சிக்குப் பதிலாக கோவில் மேலே எழாமலேயே, அதன் வேலை பாதியிலேயே நின்று, விநாயகர் வெயிலில் காய்வதைக் கண்டேன். ராம ஹெக்கடேயின் சாபம் உண்மையாகி, பார்வதியம்மாள் செத்துப் போயாகி, சங்கர ஹெக்கடேயின் வீட்டுக்கு மேற்கிலுள்ள மூங்கில் புதரிலிருந்து பிள்ளையார் கோவில் வரை ''கீச்'' என்று ஓலமிடுவதைக்

கேட்டு நடுங்கியிருக்கிறேன். இவையெல்லாமே வெறும் கனவு தான். அவ்வளவுதான் வித்தியாசம். கனவு தொடர்கிறவரை யில் அதற்கு ஆளான உயிருக்கு இன்பம், துன்பம், அச்சம், நடுக்கம் எல்லாமே உண்மையாக இருக்கின்றன. வாழ்க்கை என்பது மாயை என்கிருர்களல்லவா? அது முழுவதும் மாயை. யாருக்கு என்ருல் நமக்கு; செத்த பிறகு அது மாயை. உயிருடன் இருக்கும்போது அந்த இன்பம், துன்பம், அச்சம், நடுக்கம் எல்லாமே மிகமிக உண்மை. மற்றவர்களுடைய இன்ப துன்பங்கள் நமக்கு மாயையாகத் தோன்றும்போது, நம்முடைய தும் மாயையா அல்லவா என்பதை அறிய நம்முடைய போக்கை ஆராயவேண்டும்.

ஆண்டுப் பிறப்பு கழிந்தது; அடுத்த நாளும் வந்துபோயிற்று. ''பிள்ளையார் கோவில் மதிலின்மீது கூரை ஏறிவிட்டது. அதன் மீது வெயில் படும்போது சிவப்புக் கொடிகளைப்போல, மூங்கில் புதர்களிடையே மிக அழகாக அது தோற்றமளிக்கிறது'' என்ப தாகச் சம்பு எழுதியிருந்தான். அதனுடன் ''ஐயா, எனக்கும் எழுதி எழுதி அலுத்துப் போய்விட்டது. நீங்கள் ஒரு தடவை இங்கு வந்துபோகவே வேண்டும். இதுவரை முடிந்துள்ள வேலையைப் பார்ப்பதற்காகவாவது அல்லது பார்வதிப் பாட்டிக்கு ஒரு பேச்சுக் கூறுவதற்காகவாவது நீங்கள் வரவே வேண்டும்'' என்று இரண்டே வரிகளில் தன்னுடைய ஆவலையும் கோபத்தையும் காட்டியிருந்தான். எனக்கும் என் மனச்சாட்சித் துளைத்துக் கொண்டேயிருந்தது. கோவில் என்னவோ எழுந்துவிட்டது. பூச்சு முடியாவிட்டாலும் கவலையில்லை. உடனே பிரதிஷ்டை ஆகவேண்டும். அதைப் பற்றி அதிகமாகச் சிந்திக்க வேண்டிய தில்லை. பார்வதியம்மாளைப் பார்த்து வரவேண்டியது அதைவிட முக்கியமான வேலையாகும். நான் அங்கே போவதா, வேண்டாமா என்னும் சிந்தனையில் ஊசலாடினேன்.

இரண்டு நாட்களுக்குள்ளேயே நான் விரும்பாத ஓர் இடத்தி லிருந்து ஒரு கடிதம் வந்தது. யசவந்தராயர் இறந்த செய்தி பெனகனஹள்ளியிலிருந்து மெதுவாகப் பயணம் செய்து குமட்டியை அடைந்திருக்கவேண்டும். அதுவே அந்தக் கடிதத் திற்கு அடிப்படை.

''ஐயா, நீங்கள் யார், என்ன என்னும் விஷயம் எனக்குத் தெரியாது. ஆகவே, நான் எழுதுவதில் ஏதாவது ஏற்றத்தாழ்வு இருந்தால் என்னை மன்னிக்கவேண்டும். உங்களுக்கு மட்டும்

நான் யார் என்னும் சங்கதி தெரிந்தே இருக்கவேண்டும். தெரிந்து கொள்ளும் முயற்சியை நீங்கள் மேற்கொள்ளாததே மிகவும் வருத்தத்தை உண்டாக்குகிறது. எங்கள் தந்தை இறந்த செய்தியை அறிந்திருந்தும், நீங்கள் அவருடைய குடும்பத்தவ ராகிய எங்களுக்கு, பிண்டம்போட வேண்டியவர்களாகிய எங்க ளுக்கு, ஒரு வரி எழுதியிருக்க வேண்டாமா? எங்கள் தாய் இன்னும் உயிருடன் இருக்கிறூரல்லவா?''

''இதையெல்லாம் பார்க்கும்பொழுது, நீங்கள் பெனகன ஹள்ளியில் ஒரு கிழவியின் வீட்டுக்குப் போய் எங்கள் தந்தையின் பெயரால் பணத்தை வீணுக்குவதைக் கேட்கும்பொழுது எனக்கு மட்டுமல்ல, யாருக்குமே வியப்பாகத்தான் இருக்கும். எங்கள் தந்தையின் சொத்து, பத்து பணம் காசுகளுக்கு நீங்கள் அல்ல உரியவன், அது நான்தான். உங்கள் கைக்கு அவருடைய பணம் நிறைய வந்திருக்கிறதாம். அவருடைய மரணச் செய்தியை எங்களுக்குத் தெரிவிக்காமலிருந்ததற்கு நல்லெண்ணம் ஏதும் காரணமாக இருக்கமுடியாது. இனியாவது அவருடையவை என்னென்ன இருக்கின்றனவோ அவற்றின் விவரங்களை எனக்கு எழுதி அவற்றை என்னிடம் ஒப்புவித்து, ஒழுங்கான ரசீதைப் பெற்றுக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் ஒரு வக்கீலைக் கலந்துகொண்டு உரிய நடவடிக்கை மேற்கொள்ளவேண்டி வரும் என்பதை இதன் மூலம் தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்படிக்கு,
முதல் வீட்டுச் சீதாராம ஹெக்கடே.''

''நல்லது'' என்று நினைத்தேன். போகட்டும், தந்தை இறக்கும் போது அவர் கையில் நாலு காசு இருந்திருக்கலாம் என்னும் நம்பிக்கையில், தந்தையராகிய அவருக்குப் பிண்டம்போட வேண்டும் என்னும் நல்லெண்ணமாவது தோன்றியதல்லவா! ஏறக்குறைய பதினைந்து ஆண்டுக் காலத்திற்குப் பிறகு தந்தை யின் நினைவு வந்தது மகனுக்கு. அத்துடன், அவனுடைய தாய் கமலம்மா என்னும் பெயருடைய அவள், உயிரோடு இருக்கிறுள் என்பதை அறிந்தபோது எனக்குச் சிறிது வருத்தம் உண்டாயிற்று. சூழ்நிலை எத்தகையதாஞலும், சுமங்கலி என்பவள் விதவைக் கோலம் பூண்பது என்பது விரும்பத்தக்கதல்ல. என்னுடைய இந்தப் புதிய நண்பர் என்மீது பழியைச் சுமத்தி, உரிய நட வடிக்கை மேற்கொள்வதற்கு முன்பு நான் அவரைச் சென்று

காண விரும்பினேன். உண்மையில் போய்க் கண்டும் இருப்பேன். ஆனால், இவ்வளவு விரைவாக அல்ல. அவர் சாதாரணமான ஒரு மனிதராக இருந்தால் பம்பாயிலிருந்து நான் திரும்பி வந்த அன்றே அவருடைய மகனுக்குத் தந்தை இறந்த செய்தியை எழுதியிருப்பேன். என் நண்பருடைய நாட்குறிப்பும், அவருடைய நம்பிக்கைகளும் அதற்குத் தடையாக அமைந்தன.

''நான் இருப்பது இப்போது; செத்த பிறகு அல்ல. பிறப்பதற்கு முன் நான் இருந்ததில்லை; இறந்த பிறகு நான் வாழ்ந்த நினைவுகள் மட்டுமே மிஞ்சும்; நான் அல்ல. இந்த இல்லாத, எனக்காக நடத்தும் சிராத்தம் முதலிய சடங்குகள் எனக்குப் பிடித்தமானவையல்ல. எனக்குச் செலுத்தக்கூடிய சிராத்தம் என்னிடம் ஏதேனும் ஒரு நல்ல குணமிருந்தால் அதைத் தம்முடைய வாழ்க்கையில் கொண்டுவருவதேயாகும். அப்படிப்பட்ட சிராத்தத்தை யாரும், யாருக்கு வேண்டுமானாலும் செய்யலாம். அது மனிதப் பண்புக்குச் செய்யும் சிராத்தம்; தனி மனிதனுக்கு அல்ல. மனிதன் நிரந்தரமானவன்; நாம் நான்கு நாட்களுக்கு வந்து போகும் ஒரு காட்சி'' என்று யசவந்தர் தம்முடைய நினைவுக் குறிப்பின் முதல் பக்கத்திலேயே எழுதியிருந்தார். யசவந்தராயருடைய கருத்து இவ்வாறு இருக்க, அவர் வாழ்ந்திருந்த காலத்தில் அவரை அலட்சியமாகக் கருதி நடத்தி, துன்பப்படுத்தி, செத்த பிறகு உறவை எண்ணி அவருக்குப் பிண்டம் போட்டால் அதனால் என்ன பயன்? அது காக்கைக்குப் போடும் பிண்டமாகத் தான் இருக்கும். தந்தையிடத்தில் காட்டக்கூடிய அன்பின் எந்த விதமான குறிப்பும் அதில் இருக்காது.

இப்படியிருக்க, நான் குமட்டியிலிருந்த அவருடைய முகவரியைத் தேடுவதற்கு எந்த விதமான முயற்சியையும் மேற்கொள்ளவில்லை. என் நண்பருடைய வாழ்க்கையைப்பற்றிக் கூறுவதற்காக, ஓய்வாகச் சென்று அவரைப் பார்த்துப் பேசியிருப்பேன். மேலும், அவருடைய பாங்க் பாஸ் புத்தகத்தில ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் எஞ்சியிருக்கிறது. அது பாங்கிக்குச் சேர வேண்டிய தொகையல்ல. சட்டப்படி வாரிசுக்குப் போய்ச் சேர வேண்டும். இந்தப் பணம் இருந்ததை அவருடைய வீட்டாருக்கு முதலிலேயே நான் தெரிவித்திருந்தால் நன்றாக இருந்திருக்குமோ என்னவோ. இப்போது நான் யசவந்தருடைய மகன் எழுதிய கடிதத்திற்கு நான்கு வரி பதில் எழுதினேன்.

''எனக்கு மிகவும் நெருங்கியவரான யசவந்தராயரின் மகன் நீங்கள் என்பதை அறிந்து மிகவும் மகிழ்ந்தேன். விளையாட்டாகவே என்மீது வீண் பழியைச் சுமத்தியிருக்கிறீர்கள். உங்களுக்கு ஓய்வு இருந்தால் இங்கே வாருங்கள். உங்கள் தந்தையின் பணம் என்னிடம் இருப்பது உண்மை. அவரே தம்முடைய இறுதிக் காலத்தில் தகுந்த ஏற்பாடுகளைக் குறிப்பிட்டு இந்த வகையில் அதைச் செலவிடுங்கள் என்று தெரிவித்து எனக்கு 'டிராப்ட்' மூலமாகப் பணம் அனுப்பியிருந்தார். அவருடைய அந்தக் கருத்தைத் தெரிவிக்கும் கடிதத்தை நீங்கள் பார்க்கலாம். இனி அவருடையதாகிய சில சித்திரங்கள் இருக்கின்றன; புத்தகங்கள் இருக்கின்றன. அவற்றையெல்லாம் நீங்கள் எடுத்துக் கொண்டு போகலாம். பம்பாயில் இன்டியன் ஓவர்சீஸ் பாங்கில் 2516ஆம் எண் உள்ள கணக்கில் ரூபாய் 1613—7—0 அவருடையதாக மிஞ்சியிருக்கிறது. நீங்கள் நேராக பாங்குக்கே எழுதி அதைக் கூடிய விரைவில் பெற்றுக்கொள்ளலாம். உங்களுக்கு, உங்கள் வக்கீல் உரிய நடவடிக்கையையோ அல்லது சட்டத்தையோ ஆலோசனைக் கூறியிருந்தால் அப்படியும் செய்யலாம்'' என்று தெரிவித்தேன். இப்படியொரு தொல்லையைக் கொண்டு வந்து சேர்த்த புண்ணியவான் யார் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்னும் ஆர்வம் என்னுள் எழுந்தது. அதற்கு ஏற்ற ஆளாக என் கண்ணில் பட்டவன் மதிப்பிற்குரிய ராம ஹெக்கடே அவர்கள்தான். அவருடைய நினைவிலிருந்து அவருடைய தந்தையின் நினைவும் வந்தது. யசவந்தன்மீது வலைவீசி, கடன் தந்து, மீன் பிடிக்கப்போய் திமிங்கிலத்தையே பிடித்த மகான்! இத்தகைய மீன் வியாபாரம் தம்முடைய வாழ்க்கைக்கு ஓர் அணிகலனாய் இருப்பதாகப் பிராமணர்களும் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட காலத்தில் பார்வதியம்மாளின் தன்னலமற்ற வாழ்க்கைக்கும், ஆசையற்ற மனதுக்கும் அவர்கள் மதிப்புக் கொடுப்பார்களா?

சீதாராம ஹெக்கடேக்குக் கடிதம் எழுதிய அன்றே, சம்பு ஹெக்கடேக்கும், ''இந்தக் கடிதம் உங்களை அடைவதற்குள் நான் உங்கள் ஊருக்கு வந்தாலும் வருவேன்'' என்று தெரிவித்தேன். கடிதத்தின் வேகத்தையும் மீறிக் குமட்டிக்கும், சிர்சி வழியாகச் சுவாதிக்கும் போய் அங்கிருந்து பெனகனஹள்ளிக்கும் போனேன். போகும்போது நான் குமட்டியில் தங்கவில்லை. அதற்குள் என் கடிதம் சீதாராம ஹெக்கடேக்குக் கிட்டியதோ, இல்லையோ

என்ற ஐயம் எழுந்தது. திரும்பி வரும்போது அந்த வழியாக வரும் எண்ணம் எனக்கு இல்லை. குமட்டிக்குப் போனால் அங்கே எட்டு நாட்களாவது தங்கவேண்டியிருக்கும். யசவந்தராயர் பண உதவி செய்துவந்த இருவர் அங்கே இருக்கிறார்கள். குடும்பத்தவரின் உண்மையான இயல்பைத் தெரிந்துகொள்ள வேண்டுமானால் வேறு நண்பர்களை நாடி அறியவேண்டும். அதெல் லாம் பிள்ளையார் அருள்புரிந்த பிறகுதான் என்று நினைத்துக் கொண்டு நேராகச் சென்றேன். இந்தத் தடவை சுவாதிக்குப் போவதற்கு மாட்டுவண்டியில் பயணம் செய்யவேண்டி வரவில்லை. அங்கே பஸ் போக்குவரத்து தொடங்கியிருந்தது. ஒன்றரை மணி நேரத்தில் என் பயணம் முடிந்தது. அங்கிருந்து நான் முதலில் நடந்து சென்ற காட்டு வழியை அடையாளம் கண்டு, அப்படியே சென்றேன். முன்பு போனபோது மழைக்காலமாயிருந்தது. இப் போது கடும் கோடை வெயிலில் தாவரங்களும் வாடியிருந்தது புலப்பட்டது. ஆங்காங்கே நூற்றுக்கணக்கான பறவைகள் கூக்குர லிட்டதைக் கேட்டேன். இலையுதிர்ந்து நின்ற பெரிய மரங்களின் கிளைகளிலும் கொம்புகளிலும் சிவப்புப் பூக்கள் பூத்து உதிர்வதைக் கண்டேன். வெயிலில் வியர்த்து, நா உலர்ந்து, காலை வீசி நடந்து, பிள்ளையார் இருந்த குன்றை அடைந்தேன். அந்தக் கோவிலின் நான்கு பக்கங்களிலும் புதர்களையும், மூங்கில் குருத்துக்களையும் அழித்து ஒழுங்குபடுத்தியிருந்தார்கள். புதிய கோவிலின் மூலஸ் தானத்தில் ஓட்டுக்கூரை போட்டிருந்தார்கள். எதிரிலிருந்த மண்டபத்துக்கும் ஓடு வேய்ந்திருந்தார்கள். நம்முடைய சம்பு, தான் செய்த பாவத்துக்குக் கழுவாய்த் தேடிக்கொண்டுவிட்டான் என்னும் திருப்தி எனக்கு ஏற்பட்டது. கோவிலின் சிவப்புக் கூரை யைக் கண்டு பெருமையுண்டாயிற்று. ''பார்வதியம்மாள் இதை யாவது பார்த்திருப்பார்களா? பார்த்திருந்தால் அந்த உயிர் பிள்ளையார் சதுர்த்தி வரையில் காத்து இருக்கும்'' என்று எண்ணி னேன். தொலைவிலிருந்தே அந்தக் கோவிலைப் பார்த்துக்கொண் டிருந்தேன். இவ்வாறு கனவு கண்டுகொண்டிருந்தபோது வீசிய மேல்காற்றில் சம்புவின் குரல் என் காதில் வந்து மோதியது:

''வந்துவிட்டீர்களா, வந்துவிட்டீர்களா? எனக்கு அதுவே அச்சமாக இருந்தது. நீங்கள் வாராது இருந்தால், பாட்டி என்ன ஆவாளோ என்று நடுங்கிக்கொண்டிருந்தேன்''—இவ்வாறு சொல்லிக்கொண்டே சம்பு என்னை வரவேற்றான். அந்தக் கோவிலை நான்கு, ஐந்து முறை சுற்றிவரச் செய்தான். நான்

கண் நிறைய எல்லாவற்றையும் பார்த்துப் பெருமை அடைந்தேன். மரவேலையை நன்ருகச் செய்து முடித்திருந்தார்கள். பழைய—முறையிலேயே பருத்த தூண்களையும், போதிகைகளையும், சட்டங்களையும் நன்ருகச் செதுக்கி வைத்திருந்தார்கள். உள்ளே உட்சுவரில் வேலை தொடங்கியிருந்தது. நான் சம்புவின் முதுகைத் தட்டிக்கொடுத்து, ''பேஷ் மிக நன்ருக இருக்கிறது'' என்று புகழ்ந்தேன். அதுவரை என் முன்ஞல் புழுவைப்போலக் காட்சி அளித்த அவன், ''நான் ஒரு மனிதன் ஆனேன்'' என்னும் பெருமையால் நிமிர்ந்து நின்றதும் கண்ணில் பட்டது. நான் பேச்சுக்களாலேயே அவனைப் பெருமைப்படுத்தினேன். ''சம்பையா, உங்கள் அப்பா வீட்டில் இருக்கிருரா?'' என்று கேட்டேன்.

''இந்த நேரத்துக்கு எங்கே போவார்? பூசை செய்துகொண்டிருப்பார்.''

''உங்களுக்கு அதெல்லாம் இல்லையா?''

''அதெல்லாம் எங்கள் அப்பா இருக்கும் வரையில் அவரே பார்த்துக்கொள்வார்.''

''அப்படியாஞல் கடவுள் ஒருவருக்கே . . . ''

''அது என்னவோ, நீங்களும் என்னைப்போலத்தானே? நீங்கள் அன்று சாப்பாட்டுக்கு முன்ஞல் சந்தியும் செபமும் செய்ததை நான் காணவில்லை.''

''அதென்ன புதிதா? நானே அதைப் பார்க்கவில்லை.''

''இவ்வளவு தூரம் கணபதியின்மேல் பக்திவைத்து . . . ''

''கணபதியின்மேல் பக்திவைத்து அல்ல; பக்திவைத்தவர்களின் மேலே பக்தியிட்டு.''

இது அவன் தலையில் ஏறவில்லை. எனக்கு ஆகவேண்டியிருந்த வேலை வேறு. அதஞல் ''வாருங்கள், முதலில் பாட்டியைப் பார்த்துக் கொண்டு வருவோம். அதன் பிறகு உங்கள் வீட்டுக்குப் போகலாம்'' என்றேன்.

''சிற்றுண்டிகூடச் சாப்பிடாமலா?'' என்று கூறிக் கொண்டு, அவன் என்னுடைய கையைப் பிடித்துக் கொண்டே கீழே இறங்கிஞன். நான் முதன் முதலில் வழுக்கி விழுந்த இடம் வந்தது. முதல் முயற்சியே முற்றும் தோல்வியான இடம் அது.- ஆகவே அந்த இடம் வருவதற்கு முன்பே ''அங்கே இப்போதும் சேறு இராதல்லவா?'' என்று கேட்டேன். "வாருங்கள், வந்து பாருங்கள்" என்ருன் அவன். அந்த வழியும் நன்ருகத் திருத்தப்பட்டிருந்தது.

அந்தப் பாதையை மேலும் அகலமாக்கி, அங்கங்கே கருங்கல்லால் படி அமைத்துக் கட்டி, அழகாக்கி யிருந்தார்கள். அவர்கள் வீட்டுக்குப் போனேன். சங்கர ஹெக்கடேக்கு என் குரலை உயர்த்திச் சமாச்சாரத்தைத் தெரிவித்தேன். அவருடைய அக்காவுக்கு, ''சீக்கிரம் வந்து விடுகிறேன்'' என்று கூவிச் சொல்லி, சம்புவை உடன் அழைத்துக் கொண்டு புறப்பட்டேன். எனது பாழும் கண்கள் வீட்டின் மேற்புறம் திரும்பியே. பங்காளிக் காய்ச்சலின் விளைவான மூங்கில் புதர் கண்ணில் பட்டது. அவர்களுடைய வீட்டுத் தோட்டத்தைத் தாண்டியதும் ''சம்பையா, நான் உங்களிடம் வைத்த நம்பிக்கையை நீங்கள் நன்றாக நிறைவேற்றி யிருக்கிறீர்கள். அதனால் உங்களுக்கு எதிர்காலத்தில் நன்மை இருக்கிறது. எனக்கு இன்னும் ஓர் ஆசை உண்டு, அதையும் நிறைவேற்றிக் கொடுப்பீர்களா, சொல்லுங்கள்'' என்று கேட்டேன்.

''என்ன வேண்டும். சொல்லுங்கள், நீங்கள் என்னைச் சிறைக்கு அனுப்பியிருக்கலாம். பெரிய மனது வைத்து என்னை மன்னித்தீர்களே. அப்படியிருக்க . . . ''

''நீங்களும் அப்படியே பெரிய மனது வைத்துச் செய்யுங்கள்.''

''என்ன என்று சொல்லுங்கள். என் சக்திக்கு உட்பட்டதானால் இல்லை என்று சொல்லமாட்டேன்.''

''சக்திக்கு மீறியதை நான் சொல்லவும் மாட்டேன். இப்பொழுது நம் யசவந்தரின் அடிமனை யாருக்குச் சொந்தம்? அது உங்கள் குடும்பத்தை அடைந்திருக்கிறதா அல்லது ராம ஹெக்கடேயிடம் போய்ச் சேர்ந்துவிட்டதா?''

''ராம ஹெக்கடேயிடம் போயிருக்க முடியாது. அனுபோகம் காரணமாக அது எங்களுடையது. வேறொருவர் இந்த இடத்துக்கு வரவில்லை; வரவும் மாட்டார்கள். இனி குடும்பத்தவர்களுடைய உரிமை எவ்வளவு என்பது எனக்குத் தெரியாது. நாற்பது வருடங்கள் ஆயின; அந்த உரிமையில்லாதது போலத்தான் அல்லவா?''

''அதென்னவோ உண்மை. அப்படியானால் நீங்கள் அந்த மூங்கில் புதரை அழித்து, எரித்து, சீராக்கி ஒரு சிறு குடிசையை அங்கே கட்டுவிக்க வேண்டும்; அது வேறு எதற்காகவுமல்ல; பார்வதிப் பாட்டிக்கு அங்கே யிருப்பது கஷ்டமாக இருந்தால், உங்கள் வீட்டில் வந்து தங்கியிருப்பதற்குப் பிடிக்காவிட்டால், அந்த இடத்தில் அவரைக் கொண்டுவந்து வைக்கலாம். பதினைந்து

நாட்களில் இந்த வேலையைச் செய்துவிட முடியுமல்லவா? இதனால் உங்கள் அத்தைக்கும் மகிழ்ச்சி ஏற்படும்'' என்றேன்.

''அந்த உபாயம் சரியாகவே தோன்றுகிறது. அதை முடிப்பதில் கஷ்டமொன்றுமில்லை. பாட்டி வருவதற்கு ஒப்புக்கொண்டாலும் போதும்.''

''ஒப்புக்கொள்ளச் செய்யும் வேலை என்னுடையது.''

இவ்வாறு பேசிக்கொண்டே நாங்கள் வயலைத் தாண்டி, ராம ஹெக்கடேயின் தோட்டத்தைக் கடந்து பார்வதியம்மாளின் வீட்டுக்கு முன்னால் போய் நின்றோம். சம்பு அங்கே கிணற்றிலிருந்து தண்ணீரை மொண்டு என் கால்களுக்குச் சிறிது ஊற்றி, தன் கால்களையும் கழுவிக்கொண்டு உள்ளே நுழைந்தான். ''பாட்டி, உங்கள் வளர்ப்பு மகனின் நண்பர் வந்து விட்டார்'' என்று பெருங் குரலில் சொன்னான். அவன் பின்னாலேயே நானும் நுழைந்தேன். உள்ளே போனேன். அங்கே இருள் கவிந்திருந்தது. அந்த இடத்திலல்லவா நான் ஒருவேளை சாப்பிட்டது! என்னைச் சாப்பிடவைத்து, தான் சாப்பிடாது அந்த அம்மாள் தன் வளர்ப்பு மகனின் பெயரில் செபம் செய்தது! இப்போது அதே இடத்தில் ஒரு கிழிந்த பாயின்மீது அந்த மூதாட்டி படுத்துக் கிடந்தார். நான் முன்பு பார்த்ததைவிட இப்போது அவருடைய உடம்பு பாதியாகியிருந்தது. அந்த மூதாட்டியை நான் தரையில் விழுந்து வணங்கினேன். ''குழந்தாய், இந்த ஏழையைப் பார்ப்பதற்காக நீ அவ்வளவு தூரத்திலிருந்து ஏன் வந்தாய் என்பதைச் சொல். அதற்காக அல்லவா வந்தாய்?'' என்று கேட்டார். ''அம்மா, அதற்காகவே வந்தேன். என்னை வரவழைத்துக் கொண்டது நீங்கள்; உங்கள் வளர்ப்பு மகன்; நீங்கள் கட்டளையிட்டுக் கட்டுவித்த பிள்ளையார் கோவில்'' என்றேன்.

சிறிது நேரம் அவர் என்னையே பார்த்தார். பிறகு மெல்லச் சிரித்தார். ''அந்தப் பிள்ளையாரின் அருள் உனக்கு இருக்கட்டும். அந்தக் கோவில் திருப்பணி முடிந்துவிட்டதை எனக்கு நீ காட்ட வேண்டுமென்பதற்காகவே வந்திருக்கிறாய், என் மகன் உன் மூலம் அதைச் செய்விக்கிறான். ஆனால் என் தலையில் . . . '' என்று கூறி பெருமூச்சு விட்டு, மௌனமானார்.

''அம்மா, உங்கள் வேதாந்தம் இவ்வளவுதானா? இப்பொழுது உங்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது? நீங்கள் பிள்ளையாருக்கு அவ்வளவு தொண்டு செய்த பிறகு அவர் உங்களிடம் அந்த

வேலையையும் வாங்கிக்கொள்ளாமல் உங்களைத் தன்னிடம் அழைத்துக்கொள்வாரா?''

''அது நடந்தால் போதும்.''

''நடக்கும்—விடுங்கள். உங்கள் பிள்ளையார் உண்மையிலேயே கடவுளாக இருந்தால் உங்கள் ஆசையை நிறைவேற்ருமல் இருப்பாரா?'' என்று மிகவும் பக்தியுள்ளவன்போல நான் சொன்னலும், அந்த அம்மாளைப் பார்க்கும்போது என் மனத்தில் அப்படி உறுதி ஏதும் இல்லை. சம்பு உரத்த குரலில் ராம ஹெக்கடேயினல் ஏற்பட்ட தொல்லைகளை விவரமாகக் கூறினன்.

''அதுவும் நான் பிறந்த வேளையின் பலன்தான்'' என்ருர் பார்வதியம்மாள்.

''அம்மா, உங்கள் வளர்ப்பு மகனின் பணத்தைப் பற்றிச் சொன்னதினல்தான் இவ்வளவு தொல்லைகளும் ஏற்பட்டன. உங்கள் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கிறேன் என்று கூறியிருந்தேன். நான் யாரோ, எந்த ஊரைச் சேர்ந்தவனே, எந்தக் குலத்தைச் சேர்ந்தவனே?''

''நீயும் என் வயிற்றில் பிறந்த குழந்தைதான்; எந்தப் பிறவியிலோ நான் உனக்குத் தாயாக இருந்திருக்கவேண்டும் அல்லது நான் உன் குழந்தையாக இருந்திருக்க வேண்டும்'' என்ருர் அந்த அம்மாள்.

''மிகவும் பெரிய நம்பிக்கையை நீங்கள் வைத்திருக்கிறீர்கள். அதே நம்பிக்கையின்மேல் உங்களை நான் ஒன்று வேண்டிக்கொள்கிறேன்'' என்று கூறி, என் விருப்பத்தை அவரிடம் குறிப்பிட்டேன். என் பேச்சைக் கேட்டு சம்பு, ''நீங்கள் 'இல்லை' என்று சொல்லக்கூடாது; 'ஆ, உ' என்று சொல்லக்கூடாது; 'ஆகட்டும்' என்றே கூறவேண்டும். இப்படி நீங்கள் இங்கே கிடந்து சோறு தண்ணீர் இல்லாமல் வாடுகின்ற நிலை இனிமேல் இருக்கக்கூடாது'' என்ருன்.

அந்த அம்மாளினுடைய மௌனத்தையே சம்மதமாகப் பெற்று இருவரும் வீட்டுக்குத் திரும்பினேம். நாங்கள் திரும்பும்போது ராம ஹெக்கடே தன் வீட்டுத் திண்ணையின்மீது உட்கார்ந்து வெற்றிலை போட்டுக்கொண்டே எங்களைப் பார்த்தும் பாராதவரைப்போல இருந்தார். நாங்களும் அவரைக் கண்டும் காணுதவரைப்போலப் புறப்பட்டுப் போனேம்.

நாங்கள் ஹெக்கடேயின் வீட்டுக்குத் திரும்பும்போது, அவருடைய செபம், தபம், பூசை எல்லாம் முடிந்து பட்டையாகத்

திருநீற்றை அணிந்து கொண்டு, காட்டிலிருந்து தப்பி வந்த, மெலிந்த, வாடிய வரிப்புலியைப்போல, வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து எங்களுக்காகக் காத்திருந்தார். ஐந்தாறு தடவை ஆ, ஊ என்று சொல்வதன் மூலமே என்னை வரவேற்ருர். இந்தத் தடவை நான் அவர் வீட்டில் ஆறு நாட்கள் தங்கினேன். சங்கர ஹெக்கடே, அவருடைய மகன் சம்பு ஆகியவர்களின் திறமையால், இரண்டே நாட்களில் பத்துப் பன்னிரண்டு ஆட்கள் வேலைசெய்து, பகவந்தையாவின் பழைய வீட்டடி மனையை ஒழுங்குபடுத்தினர். மூங்கில்களையும் புதர்களையும் வெட்டி எடுத்து, தொலைவில் ஒரு குவியலாகப் போட்டார்கள். பழைய வீட்டின் நடுப் பகுதியைக் கண்டுபிடித்து ஒழுங்குபடுத்தி அங்கே கம்பங்களை நட்டு ஓலைகளை வைத்துக் கட்டி இரண்டே நாட்களில் ஒரு குடிசையும் தயார் ஆகிவிட்டது. மழை தொடங்குவதற்குள் வேண்டிய அளவிற்கு மண் சுவர் வைத்துக் கொடுத்துவிடுவதாக சங்கர ஹெக்கடே வாக்குறுதி கொடுத்தார். இவ்வளவுக்கும் ஐம்பது ரூபாய்க்கு மேல் செலவாகியிராது. இது யசவந்தராயர் கணக்கில்தான் சேரவேண்டும் என்று வற்புறுத்திக் கூறி நான் சங்கர ஹெக்கடே யின் கையில் பணத்தைத் திணித்தேன். மிகவும் மனவருத்தத்துட னேயே அவர் அதைப் பெற்றுக் கொண்டார். இந்தத் தடவை அவர் மனத்தில் தன் பங்காளியைப் பற்றிய எண்ணத்தில் மாறுதல் ஏற்பட்டிருந்தது. ஐந்தாம் நாள் பார்வதியம்மாளின் வீட்டுக்கு நான், சம்பு, மூகாம்பாள் மூவரும் சேர்ந்தே போனோம். அடுத்த நாள் நல்ல நாள் என்று அறிந்து அந்த அம்மாளைத் தூக்கிக் கொண்டு அவருடைய வளர்ப்பு மகனின் வீட்டுக்குக் கொண்டுவந்து சேர்க்கும் தொண்டை முடித்தோம். அங்கே கொண்டுவந்து சுவரில் சாய்ந்த நிலையில் வைத்தபோது, மூகாம் பாள், ''பார்வதி, இது நீ உன் யசவந்தனைக் கால் நீட்டி அதன் மீது படுக்கவைத்துக் கொண்டு எத்தனையோ தடவை தட்டித் தூங்க வைத்த இடம்'' என்று பழைய நினைவை எடுத்துக் கூறிய போது, அந்த அம்மாளுக்கு ஆனந்தக் கண்ணீர் பெருகியது. அந்தக் காட்சியை அந்த அம்மாள் உண்மையிலேயே கண்டும் இருக்கலாம்!

''என்னுடைய பிள்ளையார் இவ்வளவாவது நடத்திவைத் தாரே'' என்ருர். அவருடைய இளமையில் அவருக்கு உணவு அளித்த வீடு, மீண்டும் ஒரு குடிசையாகவாவது தன் இறுதிக்

காலத்தில் நிழல் தந்ததை நினைத்து அவருக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டிருக்கலாம்.

ஆறாவது நாளன்று பிற்பகலில் அந்த அம்மாளை மீண்டும் சுமந்து கொண்டு பிள்ளையார் கோவில் வரை சென்றோம். ஒரு மணி நேரம் அந்த அம்மாளும் மூகாம்பாளும் இரண்டு தூண்களில் சாய்ந்துகொண்டு, கனவுலக இன்பத்தை அனுபவித்தார்கள். அதைக் கண்ட எனக்கு எல்லா ஐயங்களும் தீர்ந்துபோயின. இது என் நண்பர் யசவந்தர் உண்மையில் ஒப்புக்கொள்ளும் வேலைதான் என்று திருப்தி ஏற்பட்டது. அவருடைய நினைவுக்கு நான் ஊறு ஏதும் விளைவிக்கவில்லை என்னும் உறுதியும் உண்டா யிற்று.

மூன்றாவது தடவை நான் பெனகனஹள்ளிக்குப் போயிருக்க லாம் என்று நீங்கள் ஊகிக்கலாம். நானும் அப்படியே எண்ணி யிருந்தேன். அந்தப் பிள்ளையார் பிரதிஷ்டைக்குப் போயிருந் தேன். பார்வதியம்மாளின் கண்ணெதிரிலேயே பூசை நடைபெறு வதைக் காண்பதற்காகவே போனேன். அது நடந்ததைக் கண்டு, அந்த அம்மாளின் ஆசியைப் பெற்றுக் கொண்டு, என் ஊருக்குத் திரும்பிய மறுநாளே, ''பார்வதியம்மாளை விநாயகர் அழைத்துக் கொண்டுவிட்டார்'' என்னும் துக்கச் செய்தி வந்து சேர்ந்தது.

## எட்டாம் அத்தியாயம்

சித்திரை மாதத்தில் நான் பெனகனஹள்ளிக்குப்போய் பார்வதி யம்மாளை மேல்வீட்டுக்கு அழைத்துக்கொண்டுவந்த பிறகு, வேறெங்கும் போகாமல் நேராக ஊருக்கு வந்தேன். அதை யடுத்துப் பதினைந்து நாட்களுக்குள் முதல் வீட்டு சீதாராம ஹெக்கடேயிடமிருந்து மற்றொரு கடிதம் எனக்கு வந்தது. அது அவருடைய முதல் கடிதத்தைவிட அதிகச் சூடாக இருக்கும் என்ற எண்ணத்திலேயே அதைத் திறந்து படிக்கத் தொடங்கி னேன். ராயர் இந்தக் கடிதத்தில் ஓரளவுக்கு அமைதியாகவே எழுதியிருந்தார்.

''ஐயா! நீங்கள் எங்கள் தந்தை இறந்த விஷயத்தைப்பற்றி நான் எழுதிய தடைகளையெல்லாம் கவனிக்காமல் பதில் எழுதியிருக்கிறீர்கள். ஒருவேளை, எங்களுக்கும் எங்கள் தந்தைக்கும் கருத்து வேறுபாடு இருந்தது என்ற விஷயம் உங்களுக்குத் தெரிந்திருந்ததால் உரிய நேரத்தில் செய்தியை எங்களுக்கு அறிவிக்காமல் போயிருக்கலாம். நீங்கள் தெரிவிக்காவிட்டாலும், தூரத்து உறவினர்களிடமிருந்து, அது எங்களுக்குத் தெரியவந்தது. அதன் பிறகு பெரியவருக்குச் செய்யவேண்டிய இறுதிச் சடங்குகளைச் செய்து முடித்துவிட்டோம். பாங்கியிலிருக்கும் பணத்தைப் பற்றி அறிவித்ததற்காக மிக்க நன்றி. எங்கள் தந்தையிடமிருந்து ரொக்கமாக உங்களுக்குக் கிடைத்த பணம் எவ்வளவு, என்ன என்பதைப்பற்றி நீங்கள் வாயே திறக்கவில்லை. உங்கள் போக்கு போற்றத்தக்கதாக இல்லை. எங்களுக்கு எங்கள் தந்தையின் சொத்து முதலியவற்றில் முழு உரிமை உண்டு என்பதைச் சட்டம் தெரிந்த யாராகிலும் உங்களுக்கு எடுத்துக் கூறலாம். இதைவிட அதிகமாக, இப்போதைக்கு சரியான தகவல் தெரியாத நிலையில், நாங்கள் ஏதும் எழுதுவதற்கில்லை. கூடிய விரைவில் நானே நீங்கள் இருக்கும் இடத்திற்கு வருகிறேன். அப்போது உங்களிடமுள்ள காகிதங்கள், பத்திரங்கள் முதலியவற்றை நீங்கள் காட்டுவீர்கள் என்று நம்புகிறேன். மேலும் எங்கள் தந்தையின் சொத்து, சாமான்கள் பம்பாயில் எங்கே இருக்கின்றன, என்னென்ன மிஞ்சியிருக்கின்றன என்பதையெல்லாம் முன்கூட்டியே தெரிவித்தால், அங்கே சென்று பெற்றுக்கொள்வதற்கு உதவியாக இருக்கும். எங்கள் தந்தைக்கு வேண்டியவர், எங்களுக்கும் வேண்டியவராக இருப்பார் என்னும் நம்பிக்கையில் இந்தக் கடிதத்தை எழுதுகிறேனே தவிர, வேறுவிதமாக எண்ணவேண்டாம்.

வணக்கம்.

இப்படிக்கு,

சீதாராம ஹெக்கடே.''

நான் அறிந்தவரையில், யசவந்த ஹெக்கடேக்கு ஒரே ஒரு மகன்; மூன்று பெண்களோ என்னவோ இருக்கவேண்டும். பெண்கள் எல்லாம் திருமணமாகி வெளியே போய்விட்டார்கள். இந்த சீதாராமன் தன் கடிதத்தில் ''நாங்கள், நாங்கள்'' என்று எழுதும்போது அதில் அந்தப் பெண்களும் சேர்ந்திருக்கிறார்கள்

என்பதாக எனக்குத் தோன்றவில்லை. இந்த ''நாங்கள்,'' மன்னர்கள் கூறும் ''நாங்கள்'' என்னும் எண்ணமே உண்டா யிற்று. ''எங்கள் தாய்,'' ''எங்கள் தந்தை,'' ''நாங்கள்'' என்று கூறும்போது அதில் பரந்த மனமும் புலப்படவில்லை. வந்த கடிதத்திற்கு ஒரு பதில் எழுதவேண்டுமே என்பதற்காக நான் சிறிது குத்தலாகவே ஒரு கார்டு எழுதிப்போட்டேன்.

''என்மீது நீங்கள் வைத்திருக்கும் நம்பிக்கையை வெளியிட்டு எழுதிய கடிதம் வந்து சேர்ந்து விஷயங்கள் தெரிந்தன. உங்க ளோடு தொடர்புள்ள விஷயங்களை முன்பே எழுதியிருந்தேன். அவர் பம்பாயில் வாழ்ந்திருந்த வீட்டு முகவரியைக் கீழே கொடுத் திருக்கிறேன். அங்கே அவருடையவையான பாத்திரம், பண்டங் கள், மேஜை, நாற்காலிகள் இருக்கின்றன. நான் அவற்றை எடுத்துக்கொண்டு வரவில்லை. அவற்றை வீட்டுக்கு உடையவ ரிடம் ஒப்படைத்துவிட்டு வந்திருக்கிறேன். நீங்கள் இங்கே உங்களுக்கு வசதியிருக்கும்போது வரலாம். எனக்குத் தெரிந்த தைச் சொல்ல நான் எப்போதும் தயாராக இருக்கிறேன். இங்கே உள்ள அவருடைய பொருள்கள் எல்லாவற்றையும் நீங்கள் பார்க்கலாம்.

இப்படிக்கு,
உங்கள்........''

என்று எழுதி, கடிதம் முடித்து, தபால் பெட்டியில் போட்டுவிட்டு, என் கடமையை முடித்துக்கொண்டேன். இந்தக் கடிதம் போன வுடனேயே அவர் வரக்கூடும் என்று எண்ணிக் காத்துக்கொண் டிருந்தேன். அதற்குப் பதிலாக மிகுந்த சொத்து கிடைக்கலாம் என்னும் ஆசையாலோ, இயல்பாகவே என்மீது இருந்த அவ நம்பிக்கையாலோ, அவர் நேராகப் பம்பாய்க்குப் போய்வந்தார் என்னும் செய்தி எனக்கு அறிமுகமாயிருந்த ஜாம்சேட்ஜி கண்டிராக்டரிடமிருந்து தெரிய வந்தது. அங்கே போய் அவர் தனது இயற்கைக் குணத்தைக் காட்டிவிட்டு வந்ததாகத் தெரிந்தது.

ஜாம்சேட்ஜியின் கடிதத்தில் கீழ்க்காணும் கருத்துக்கள் அடங்கியிருந்தன:

''உங்களிடமிருந்து நான் உங்கள் முகவரியை வாங்கி வைத்துக் கொண்டு இப்போதைக்கு ஓர் ஆண்டு கழித்துவிட்டது; என்ற லும் நான் கடிதம் எழுதவில்லை. உங்கள் நினைவும் மறக்கலா யிற்று. இப்போது இங்கே நடந்த ஒரு நிகழ்ச்சியின் காரணமாக

இந்தக் கடிதம் எழுதவேண்டியதாயிற்று. நான்கு நாட்களுக்கு முன் உங்கள் ஊர்ப்பக்கத்திலிருந்து சீதாராமன் என்பவர் ஒருவர் இங்கே வந்திருந்தார். வந்து, தான் யசவந்தனின் மகன் என்பதாகச் சொல்லிக்கொண்டாராம். அப்போது நான் வீட்டில் இல்லை. என் மனைவி அவரை உட்காரவைத்து 'என்ன விஷயம்?' என்று கேட்டாளாம். அவருடைய பேச்சும், நடத்தையும் அவளுக்கும் பிடிக்கவில்லை. நான் வந்த பிறகு பேசிக்கொள்ளலாம் என்று அவள் கூறியதால், வந்தவர் புறப்பட்டுப்போனாராம். அதன் பிறகே நான் வீட்டுக்கு வந்தேன். நீங்கள் யசவந்தராயரின் உறவினர் என்று நான் ஊகம்செய்திருந்தேன். அவருடைய தந்தைக்கும் உங்களுக்கும் எந்தவித உறவுமில்லை என்பதாக அவர் மற்றொரு முறை வந்திருந்தபோது என்னிடம் சொன்னார். நீங்கள் அவருடைய உறவினர் என்று சொல்லாவிட்டாலும் நான் நினைத்துக்கொண்டது அப்படித்தான். யசவந்தராயரும் தம் சொந்தக் குடும்பத்தினரைப்பற்றி எதுவுமே சொன்னவரில்லை. என்றாலும் அவருக்கு அவருடைய மக்களிடமிருந்து பணம் வந்துகொண்டிருக்கவேண்டும் என்று நானாக நினைத்துக்கொண்டிருந்தேன். என்னுடைய இந்தக் கருத்து தவறு என்று தோன்றுகிறது.

''அவர் பேசும்பொழுதெல்லாம் உங்களை நிந்திப்பதிலேயே குறியாக இருந்ததால் எனக்கும் அதைக் கேட்டு அதிருப்தி ஏற்பட்டது. நான் சொன்னேன்: 'கடைசி நேரத்தில் தந்தையார் உடல் நலம் கெட்டுப் படுத்திருந்தபோது, அவருடைய முகவரியைக் கொடுத்திருந்தபோது, அவருடைய முகவரியைக் கொடுத்து வரவழையுங்கள்' என்று கூறியதால் நான் அவரை வரவழைத்தேன். அவர் வந்தார். வந்து பார்ப்பதற்குள் யசவந்தராயர் இறந்துவிட்டார். அதன் பிறகு அவர் வந்து எல்லாப் பொருள்களையும் வசப்படுத்திக்கொண்டார். வீட்டை வீட்டுக்காரரிடம் ஒப்படைத்தார். இப்போது அங்கே வேறு யாரோ குடியிருக்கிறார்கள். உங்கள் தந்தையின் பொருள் ஏதேனும் இருந்தால் அதை வீட்டுக்காரரிடமிருந்து பெற்றுக் கொள்ளுங்கள் என்றேன். அதற்கு அந்த ஆள், 'நானும் நீங்களுமாகக் கூடி அவனுடைய தந்தையின் ஆயிரக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள சொத்துக்களைத் திருடிக்கொண்டோம்' என்ற வகையில் பேசினான். எனக்குக் கோபம் வந்து, 'புறப்பட்டுப்போங்கள்' என்று சீறினேன். அடுத்த நாள், அவர் வீட்டுக்காரருடன்

வந்திருந்தாராம். நீங்கள் விட்டுச்சென்ற யசவந்தராயரின் மேஜை, நாற்காலிகளைக் காட்டி, 'இவற்றையெல்லாம் கொண்டு போங்கள்' என்றாராம். ஒருவேளை அவர் வீட்டுக்காரருடனும் சண்டையிட்டிருக்கலாம். வீட்டுக்காரன் நன்றாகத் திட்டியிருக்க லாம். அதனால் மூன்றாவது முறையாக நான் இருந்தபோது வந்து, 'இவற்றுக்கெல்லாம் என்ன விலை கொடுப்பீர்களோ கொடுங்கள். நீங்களே எடுத்துக்கொள்ளுங்கள்' என்று சொன்னார். 'இங்கேயே இருந்தவை தானே அவைகள்' என்று சொல்லி, ரூபாய் நூறு கொடுத்து அவற்றை எடுத்துக்கொண்டேன். அவனுக்குத் திருப்தி ஏற்பட்டிருக்காது. எனக்கு அந்தச் சாமான்கள் தேவையில்லை. என்றாலும் நம்முடைய நண்பரின் பொருள்கள் என்பதால் அவற்றை நான் வைத்துக்கொண்டிருக்கிறேன்.

''அதன் பிறகு இரண்டு மணி நேரம் இருந்து, அவன் தன் தந்தை பற்றிய விஷயங்களைச் சொன்னான். அவருக்கு இலட்சக் கணக்கான ரூபாய் சொத்து இருந்ததாம். அவர் தமது மனைவி, மக்களைக் கைவிட்டு, பம்பாய்க்கு வந்து சேர்ந்தாராம். இங்கே பணத்தைத் தண்ணீராகச் செலவழித்தாராம். தனக்கும், தன் தாய்க்கும், தங்கைகளுக்கும் எண்ணற்ற வகையில் துன்பம் கொடுத்த புண்ணியவான் அவர் என்றெல்லாம் சொன்னான். ஒரு மகன் சொல்லக்கூடாததை யெல்லாம் அவன் சொன்னான். நான் காதைப் பொத்திக்கொண்டு, கேட்டுக்கொண்டிருந்தேன். அவன் சொன்னது உண்மையானால், குடும்பத்தைப்பற்றி யசவந்தராயர் வாய் திறவாமல் இருந்ததற்கு இந்த வகையான பகைமையே காரணம் என்பது தெரிகிறது. ஆனால் இந்த மகன் கூறிய குற்றச்சாட்டுக்கள் எந்த அளவுக்கு உண்மையோ கடவுளுக்குத்தான் தெரியும்.

''அவர் தாதாவை நடத்திய முறை—அதன் பிறகு அவரைத் தன் வலையில் வீழ்த்திக்கொண்ட ஒரு நர்ஸை நடத்திய முறை—இவற்றை நான் கண்ணாரக் கண்டிருந்தேன். யசவந்தராயருடைய இயல்பு, தீங்கு இழைத்தவருக்கும் துன்பம் தாராது என்பது எனக்கு எப்போதோ தெரிந்துவிட்டது. இந்த சீதாராமன் எனக்கு மற்றொரு சங்கதியும் சொன்னான்; தன் தந்தை ஒழுக்கம் கெட்டவர் என்றான் அவன். அப்படிப்பட்ட போக்கை நான் அவரிடம் என்றுமே கண்டதில்லை. அவனுடைய குற்றச்சாட்டில் பெரும்பகுதி உங்கள்மீதுதான். உங்களுக்கு

யசவந்தராயர் ஐம்பதாயிரமோ, எழுபதாயிரமோ கொடுத்திருக்கிறாராம். வைத்திருக்கும்படி கொடுத்த அந்தப் பணத்தை, தன் குடும்பத்தவரிடம் சேர்ப்பிக்க வேண்டுமென்று கொடுத்திருந்த அந்தப் பணத்தை, நீங்கள் ஏப்பம் விட்டுவிட்டீர்கள்; யசவந்தர் இறந்த செய்தியைக்கூட அவனுக்குத் தெரிவிக்கவில்லை என்றும் சொன்னான்.

''சுருக்கமாக, அவன் வந்து எனது நல்ல நண்பரைப்பற்றி இல்லாத ஐயங்களையெல்லாம் கிளப்பிவிட்டுப்போனான்.''

வம்புப்பேச்சில் வயிறு வளர்க்கும் சுயநலவாதிகளின் எண்ணம் இப்படித்தான் இருக்கும் என்பதில் ஐயமில்லை. அதுவும் பணமும் சேர்ந்துகொண்டால் எப்படிப்பட்டவர்களாயிருந்தாலும் பழிச்சொல்லுக்கு ஆளாக வேண்டியதுதான். நான் மட்டும் அதற்கு விலக்காக முடியுமா? இந்த சீதாராமன் இப்படியெல்லாம் பேசுவதற்கு முன்பு என்னிடம் வந்து, அதன் பிறகு ஏதாவது சொல்லியிருந்தாலும் பொருள் இருந்திருக்கும். இப்படியெல்லாம் உலகத்துக்கு எடுத்துச்சொல்ல நான் யார்? யசவந்தராயர் என் கையில் விட்டுச்சென்ற பணத்திலிருந்து எப்படியாவது விடுதலை கிடைத்தால் போதும் என்ற எண்ணமே என்னுள் மேலோங்கியிருந்தது. இந்தக் கடிதம் எனக்கு வந்த பதினைந்து நாட்களுக்குள் சீதாராம ஹெக்கடே எங்கள் வீட்டுக்கு வந்தான். முகத்தைப் பார்த்தால் யசவந்தராயருடைய மகன் என்னும் சாயல் உடனே தெரிந்தது. நடுத்தர வயது, மெலிந்த உடல்; சுறுசுறுப்பான போக்கு. வட கர்நாடகத்துக் கிராமச் சூழ்நிலை அவன் முகத்தில் தெளிவாகத் தெரிந்தது. அழுந்தச் சீவிய கிராப்பு; அதன்மேல் ஒரு கறுப்புத் தொப்பி; காதில் கடுக்கன்; வெள்ளை வேட்டி; வெள்ளைச் சட்டை; பித்தான் போட்ட கறுப்புக் கோட்டு; அதன் மேல் சரிகை போட்ட அங்கவஸ்திரம்; பர்லாங் தூரத்திலேயே தமது வரவை அறிவிக்கும் குமட்டிப் பகுதியின் செருப்புக்கள்; முகத்தில் முறுக்கிவிட்ட சிப்பாய் மீசை. அவர் வந்த நடையும் அதேபோல் அழகாக இருந்தது. தொலைவிலிருந்து பார்த்தபோது ''யார் இவர்?'' என்று நான் யோசித்துக்கொண்டிருந்தபோதே, ''மறக்கலாமோ?'' என்னும் பாட்டு என்னை அறியாமலேயே என் வாயிலிருந்து வந்தது. சட்டென்று, நான் எதிர்பார்க்கும் ஆள் இவர்தான் என்று தோன்றியதும், அவர் வணங்குவதற்கு முன்பே நான் வணங்கினேன். ''குமட்டிப் பகுதியைச் சேர்ந்தவர்களா?'' என்று கேட்டேன்.

''உம்.''

''முதல் வீட்டு சீதாராம ஹெக்கடே அல்லவா நீங்கள்?''

''உம்.''

''வாருங்கள், உட்காருங்கள், நீங்கள் வரலாம் என்று நினைத்துக்கொண்டிருந்தேன். முதலில் கை, கால் கழுவிக்கொள்ளலாமா? டீ போடச் சொல்லட்டுமா? காப்பி குடிப்பீர்களா?''

''அதற்கெல்லாம் எனக்கு நேரமில்லை. உங்களிடம் வேலையை முடித்துக்கொண்டு இன்றே மங்களூருக்குப் போகிறேன். குமட்டி பக்கத்தில் இல்லை. வந்துபோவதும் அவ்வளவு சுலபம் அல்ல.''

''ஆம். பஸ்ஸில் வரவேண்டும்; வழியில் ஆறேழு ஓடைகள் இருக்கின்றன. நானும் அந்தப் பக்கம் போயிருக்கிறேன். வாருங்கள், கால் கழுவிக்கொண்டு சிற்றுண்டிக்குப் பிறகு ஓய்வாகப் பேசலாம்'' என்றேன் நான்.

''அவ்வளவு ஓய்வு எனக்கு இல்லை என்று சொன்னேன் அல்லவா?''

அந்த ஆளின் பேச்சில் ஒவ்வொரு சொல்லிலும் துடுக்குத்தனமும் அகம்பாவமும் தெறித்தன. அதனால் நான், ''அப்படியானால் எனக்கு நிறைய வேலையிருக்கிறது'' என்று சொல்லி, சட்டென்று பேச்சை நிறுத்தி எழுந்து சென்று வேறொரு மூலையில் உட்கார்ந்து கொண்டேன். அடுத்த விநாடியே அது சரியல்ல என்று நினைத்து என் அறைக்குப்போய் ஒரு புத்தகத்தை எடுத்துத் திறந்து வைத்துக்கொண்டேன். நல்ல வேளையாக என்னுடைய ஆசிரிய நண்பர் ஒருவர் என்னைக் காண்பதற்காக அதே நேரத்தில் வந்து சேர்ந்தார். எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. அரை மணி நேரம் அவருடன் தேவையான, தேவையற்ற பேச்சுக்களைப் பேசி, காலத்தைக் கழித்தேன். அந்த நண்பர் ''வெளியில் இருப்பது யார்? நல்ல ராவணனைப்போலக் காட்சி அளிக்கிறார்... அவர் வந்தது உங்களுக்குத் தெரியாதா? வெற்றிலைப் பையைத் திறந்து வைத்துக்கொண்டு, வெற்றிலை போட்டுக்கொண்டு, உதட்டின்மீது இரண்டு விரல்களை வைத்துப் பூவாளியைப்போல எச்சிலைத் துப்புகிறாரே!'' என்றார். எனக்கு அதைக் கேட்டு மகிழ்ச்சி மிகுந்தது. ''வீசாதே பூவாளி'' என்று இழுத்துப் பாடினேன். அந்த ஆசிரியர், ''வேண்டாம், அவர் காதில் விழப்போகிறது'' என்றார்.

''சங்கீதம், நான்கு பேர் கேட்கவேண்டிய விஷயம்தான்'' என்றேன் நான்.

அப்பொழுது வெளியிலிருந்தே சீதாராம் ஹெக்கடே, ''ஐயா, ஏதோ காகிதம் காட்டுகிறேன் என்றீர்களே; காட்டுகிறீர்களா?'' என்று கூவினர். நான் உள்ளேயிருந்தபடியே ''உங்கள் கோபமும், ஆர்ப்பாட்டமும் குறைந்திருந்தால், இங்கே எழுந்துவரும் எண்ணமிருந்தால், காட்டுகின்றேன்'' என்றேன். அந்தப் புதிய காட்சியைக் காண்பதற்கு எனக்கு ஒரு சாட்சி தேவையாக இருந்தது. அவரிடம் நான் காகிதங்களைக் கொடுத்தால், அவர் அவற்றைத் தானே வைத்துக்கொண்டால் அல்லது கிழித்துப் போட்டுவிட்டால், அதனுல் பின்னுல் எனக்குத் துன்பம் வரும் என்று அஞ்சினேன். அதற்குள் ஹெக்கடே உள்ளே வந்தார். ஒரு நாற்காலியைக் காட்டினேன். உட்கார்ந்துகொண்டார். சமையல்காரப் பையன் அப்போது எங்கள் மூவருக்கும் காப்பியும், சிற்றுண்டியும் கொண்டுவந்து கொடுத்தான். ''எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றேன் நான்.

''வாய் கொப்பளிப்பதற்கு கொஞ்சம் தண்ணீர் வேண்டும்'' என்ருர் அவர். பையன் தண்ணீர் கொண்டுவந்து கொடுத்தான். ஒருவேளை, என் வீட்டில் தண்ணீரும் தொடுவதில்லை என்ற உறுதியோடு அவர் வந்திருக்கலாம். அத்தகைய அந்த முதல் வீட்டுக் குழந்தை கை, கால், முகம் கழுவிக்கொண்டது. மெதுவாகச் சிற்றுண்டியையும் முடித்தது. நான் வேறு பேச்சுக்கள் எதையும் தொடாமலேயே முதலில், ''இதோ பாருங்கள்—எனக்குப் பம்பாயிலிருந்து வந்த கடிதம்'' என்று ஜாம்சேட்ஜி கண்டிராக்டர் எனக்கு எழுதிய கடிதத்தைக் காட்டினேன். படித்துப் பார்த்துத் திருப்பிக்கொடுத்தார்.

அதன் பிறகு ''இதைப் பாருங்கள், உங்கள் தந்தை உடல் நலம் இன்றி இருந்தபோது அவர் எனக்குக் கொடுத்த தந்தி.'' அதையும் படித்துப் பார்த்தார்.

''இதையும் பாருங்கள். இறப்பதற்கு ஒரு வாரத்திற்கு முன்னுல் உங்கள் தந்தை எனக்கு எழுதிய கடிதம்.''

அதைப் படித்துப் பார்த்து, திருப்பிப் பெற்றுக்கொண்ட பிறகு, ''இதைப் பாருங்கள். உங்கள் தந்தை பதினைந்தாயிரம் ரூபாய் டிராப்டுடன் எனக்கு எழுதிய கடிதம்'' என்று கூறிக் கொடுத்தேன். அதையும் அவர் படித்துப் பார்த்தார். அவருக்கு என்ன தோன்றியதோ, ''இதில், 'நான் வருகிறேன்; வந்தால் நானே இருக்கிறேனல்லவா' என்று எழுதியிருக்கிருரே. இந்தப் பணம் அவருக்குத் திரும்பவும் கிடைக்கவேண்டும் என்பது அதற்குப்

பொருள். அதாவது, அவருக்கு என்றால், அவருடைய காலத்துக்குப் பிறகு அவருடைய வாரிசுகளாகிய எங்களுக்கு...''

''அதை எழுதவில்லையே, கடிதத்தின் அடுத்துவரும் பகுதியில், தான் இல்லாவிட்டால் அதை எப்படியெப்படியெல்லாம் பகிர்ந்து அளிக்கவேண்டும் என்பதை விவரமாக எழுதியிருக்கிறாரல்லவா? நான் அவருடைய கட்டளையை நிறைவேற்றவேண்டாமா?'' என்று சொல்லிக்கொண்டே மெதுவாகப்போய் அந்தக் காகிதத்தை அவர் கையிலிருந்து பறித்துக்கொண்டேன். எனக்கு அவர்மீது ஐயம்.

''அவர் இல்லாவிட்டால் நாங்கள் இல்லையா?''

''நீங்கள் இருக்கிறீர்கள் என்பது அவர் நினைவிலேயே இல்லை! அதனால்தான் இந்தத் தொல்லை வந்தது.''

காகிதத்தைப் பறித்துக்கொண்டதும், நான் அவ்வாறு கூறியதும் இயல்பாகவே அவருக்குக் கோபமூட்டின. ''எங்கள் தந்தையிடம் அவர் வயிற்றில் பிறந்த குழந்தைகளைவிட நீங்கள் அதிகமாக உரிமை உடையவரா? எல்லாம் போக, கிராமத்தில் அழுகிக்கொண்டு கிடந்த அந்த விதவைக்கும் ஒரு பங்கா?'' என்று கத்தினார்.

எனக்குச் சிறிது கோபம் வந்தது. ''இதெல்லாம் நீங்கள் உங்கள் தந்தை இருந்தபோதே வரையறுத்துக்கொண்டிருக்க வேண்டிய விஷயங்களாகும். என்னிடம் சொல்லிப் பயனில்லை. யசவந்தராயருடைய விருப்பத்தை நான் நிறைவேற்றுகிறவன். அதற்கு யாருடைய தடையும் வரலாகாது.''

''அதற்குத்தான் என்று தோன்றுகிறது—பார்வதியம்மாளின் பெயரில் கோவிலைக் கட்டுகிறேன் என்று நாடகமாடி, மிஞ்சிய பணத்தை ஏப்பமிட்டு, குடும்பத்தவர்களுக்கு ஒன்றும் தரக் கூடாது என்று நினைத்துக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. எங்கள் ராம ஹெக்கடே சொன்னது பொய் அல்ல.''

''ஓ, உங்கள் குரு அவர்தானா! சரி, இங்கே பாருங்கள். இந்த இரண்டு டிரங்குப் பெட்டிகளில் அவருடைய புத்தகங்கள் இருக்கின்றன. ஒன்றில் அவர் தீட்டிய சித்திரங்கள் சில இருக்கின்றன. அவற்றைப் பார்க்கிறீர்களா? அதற்கு நேரம் இருக்கிறதா? இவற்றையெல்லாம் அவர் எனக்குக் கொடுக்கவில்லை. நானே கொண்டுவந்தேன். நீங்கள் விரும்பினால் அவற்றையெல்லாம் கொண்டுபோகலாம்.''

''அவற்றையெல்லாம் ஆற்றில் தூக்கிப்போடுங்கள். எங்கள் தந்தை எழுதிய அந்தக் கடிதத்தை மட்டும் எனக்குக் கொடுங்கள்.''

''ஆற்றிலா! இங்கிருந்து எட்டு மைல் தூரத்தில் 'குமார தாரை' ஓடுகிறது. அருகில் வேறு எந்த நதியும் இல்லை. அவர் எனக்கு எழுதிய கடிதத்தை உங்களுக்குக் கொடுப்பதற்கு இல்லை.''

பத்து நிமிடம்வரை அவருடைய முகம் சிவந்தது; கறுத்தது; சோர்வுற்றது. இங்குமங்குமாகப் பார்வையை ஓட்டினார். பிறகு என் அருகே உட்கார்ந்திருந்த ஆசிரியரைப் பார்த்து, ''பாருங்கள் ஐயா, குழந்தைகள்மீது இவ்வளவு கொடிய வெறுப்பைக் கொண்டிருந்த தந்தையை நான் புராணங்களில்கூடக் கேட்டதில்லை'' என்று தந்தையைப் பழிக்கத் தொடங்கிய போது எனக்கும் கோபம் கட்டுமீறியது.

''புராணங்களில் தந்தையை வெறுத்த இப்படிப்பட்ட மக்களைப்பற்றிய கதையும் அதிகமாக இல்லை. இதுபோன்ற கதைகளை அவிழ்ப்பதற்கு இது தகுந்த இடமும் அல்ல'' என்றேன். இதெல்லாம் ஒன்றுமே புரியாமல் திகைப்புற்று உட்கார்ந்திருந்த என் ஆசிரிய நண்பருக்கு, சுருக்கமாகவே எல்லாவற்றையும் எடுத்துச் சொன்னேன்.

''அப்படியானால் நான் போகலாம் என்கிறீர்களா?'' என்று கேட்டார் ஹெக்கடே. ''வீட்டுக்கு வந்தவர்களைப் போகுமாறு நான் எப்படிச் சொல்வேன்? அதுவும் என் நண்பருடைய மகனுக்கா? ஒருநாள் தங்கியிருந்து மன அமைதியைத் தேடிக் கொண்டு சென்றால், வந்ததும் பயன் தருவதாகும்'' என்றேன்.

அன்று சீதாராம ஹெக்கடே என் விருந்தினராகத் தங்கியிருந்தார் என்றால் உங்களுக்கு வியப்பாக இருக்கும். நான் மட்டும் அவருடைய தந்தையின் விஷயத்தை எடுக்காமலே மிகுந்த விழிப்புடன் இருந்தேன். அவரோ அதையே கேட்கவேண்டுமென்று துடித்துக்கொண்டிருந்தார். பிறகு கேட்டும் விட்டார். அவர் கேட்ட பிறகு நான் யசவந்தர்மீது எனக்கிருந்த அன்பை எடுத்துச் சொன்னேன். சீதாராம ஹெக்கடே மிகவும் வருந்தி, மற்றொரு வழியைக் கையாண்டார். என்னை மிகவும் புகழ்ந்தார்; என் பொறுமையையும் அடக்கத்தையும் உயர்த்திப் பேசினார். தம்முடைய இன்ப துன்பங்களை எடுத்துச் சொன்னார். தன் தாயின் துக்கத்தை விவரித்தார். தமக்கு மிகுந்த கடன் இருப்ப

தாகக் கூறி, கண்ணீர்விட்டார். சுருக்கமாக, என் இரக்கத்தைப் பெறுவதற்காக விதவிதமாக நடித்துக் காட்டினார். யட்சகான நாடகத்தில் பாகவதர் அரக்கர் வேடம் பூண்ட நடிகர்களுக்கு முன்னால் நின்றுகொண்டு, ''ஐயா, அப்படியா, ஆகா'' என்று கூறுவதைப்போல, நானும் அவருக்கு ஓரிரு சொற்களால் பதில் கூறிவந்தேன். அடுத்த நாள், அவரை அதிகமாக வாட்டக் கூடாது என்று எண்ணி, அவர் தந்தை எனக்கு எழுதிய கடிதத்தின் பிரதி ஒன்றை எடுத்து, அதில் ''இதன் மூலப்பிரதி என்னிடமிருக்கிறது'' என்று குறிப்பிட்டு, என் கையெழுத்திட்டு அவரிடம் கொடுத்தேன். இதனால் எனக்கு நஷ்டம் ஏதுமில்லை.

அவர் பேசிய பேச்சுக்களில் ஒன்றாவது அவரிடம் இரக்கம் கொள்ளும்படி என்னைத் தூண்டவில்லை. அவருடைய வேடம், நடை, பேச்சு, ஆடம்பரம் எதுவுமே அவருடைய உண்மை உருவத்தை எனக்குக் காட்டவில்லை. அவர் இல்லாவிட்டால், அவருடைய தங்கைகளில் யாராவது கஷ்டப்படுகிறவர்கள் இருப்பார்களல்லவா? அதனால் அவர் புறப்படும்பொழுது, ''ஐயா, நீங்கள் வந்தது மிகவும் நல்லதாயிற்று. உங்கள் தந்தை கொடுத்த பணத்தை நான் உடனே கரைத்துவிடப்போவதில்லை. பிள்ளையார் கோவிலுக்குச் சிறிது செலவழித்திருக்கிறேன். அவர் சொல்லிய நான்கு பேர்களுக்கு ஒவ்வொரு மாதமும் சிறிது பணம் அனுப்புகிறேன். ஒரு நாள் உங்கள் ஊருக்கும் நான் வருகிறேன். அவருடைய குழந்தைகளில் யாருக்கேனும் கஷ்டமிருந்தால், அது என்ன என்று தெரிந்துகொண்டு, ஏதாவது கொடுக்கிறேன். என்னால் எதைச் செய்ய இயலுமோ அதைச் செய்கிறேன்'' என்று சொன்னேன். அதனால் ஹெக்கடே என் எதிரில் மட்டுமாவது அமைதியடைந்தவராகத் தோற்றமளித்து, ஊருக்குத் திரும்பினார்.

ஊருக்குப் போனபிறகு கடுமை நிரம்பிய ஒரு கடிதம், இனிமை ததும்பும் ஒரு கடிதம், என்னைப் புகழ்ந்து ஒரு கடிதம், என்னை இகழ்ந்து பழிக்கும் ஒரு கடிதம்—இப்படி வரிசையாகப் பல கடிதங்கள் எழுதத் தொடங்கினார். நான் அவற்றிற்கு விடை அளிக்கும் முயற்சியை மேற்கொள்ளவேயில்லை. அவருடைய அவசரமும், ஆசையும் எனக்குத் தெரிந்தவையே. நான் அவசரப்பட்டு எதையும் செய்வதற்கில்லை. சும்மாயிருந்தேன். பிள்ளையார் கோவில் விழாவைப் பார்த்துவிட்டுத் திரும்பும்போது குமட்டிக்குப் போய் வரலாம் என்று எண்ணியிருந்தேன்;

என்றாலும் எனக்கு அப்போது அதற்கு வாய்ப்புக் கிட்டவில்லை. நான் அங்கே போயிருந்த செய்தியை ராம ஹெக்கடே, சீதாராம ஹெக்கடேக்குத் தெரிவிக்கவும் செய்தார். எங்கள் பக்கத்தில் ''ஸீதாராமன்'' என்பதை ''சீதாராமன்'' என்றே கூறுவார்கள். ஆனால் இந்த மனிதனோ ''சீத''மும் (குளிர்ச்சி) இல்லை; ''ஆராம''னும் (பொறுமையுடையவன்) அல்ல.

நவராத்திரியின்போது எனக்குக் குமட்டி வக்கீல் ஒருவரிடமிருந்து, ''இதன் மூலம் தெரிவிப்பது என்னவென்றால்'' என்னும் ஒரு நோட்டீஸ் அவர் அனுப்பச் செய்திருந்தார். அந்த நோட்டீஸின்படி, நான் என் கையிலிருந்து ஐம்பதாயிரம் ரூபாயும், அதற்கு எட்டுச் சதவீதம் வட்டியும் தரவேண்டுமென்றும், அந்த ரிஜிஸ்டர் நோட்டீஸ் செலவு நான்கு அணாவும், வக்கீல் சார்ஜ் ஒரு ரூபாயும் அதனுடன் சேர்த்துத் தரவேண்டும் என்று தெரிவித்திருந்தார். தராவிட்டால்? தெரிந்தது தானே—''பின்வரும் விளைவுகளை ஏற்கவேண்டி வரும்.''

அந்தக் கடிதம் எனக்கு வியப்பையூட்டியது. யசவந்தராயரின் கடிதம் ஓர் உயிலைப்போல மாறியது. ஆகவே, நானும் ஒரு வக்கீலைத் தேடிப் போகவேண்டியதாயிற்று. என் நண்பரான வக்கீல் ஒருவர் எல்லாவற்றையும் கேட்டு விட்டு வெடிக்கச் சிரித்தார். ''இதற்கெல்லாம் என்ன பதில் எழுதுவது? யசவந்தர் தம்முடைய கடிதத்தில் உங்களுக்கு எல்லா அதிகாரங்களையும் வழங்கியிருக்கிறார். இதனுடைய 'Cause of action' இந்த ஊர்தான். அவர் வந்து இந்த ஊர் கோர்ட்டிலேயே வழக்குத் தொடரட்டும். ஓ . . . இங்கும் நடக்காது. பதினைந்தாயிரம் ரூபாய் வழக்கல்லவா? மங்களூருக்கு வரட்டும். அவருக்கு வெற்றி கிடைக்காவிட்டாலும் நம் ஊர் வக்கீல் ஒருவருக்குக் கிடைக்கக் கூடிய வருமானத்தைக் கெடுத்துவிடாதீர்கள்'' என்று அறிவுரை கூறினார்.

''நீங்களெல்லாம் வக்கீல்கள்; கழுகைப் போன்றவர்கள்.''

''அப்படியென்றால்?''

''அதாவது, மனிதன் உயிர் வாழ்ந்தாலும் நீங்கள் அவன் தசையைத் தின்கிறீர்கள், செத்தாலும் விடுவதில்லை, தின்றுவிடுகிறீர்கள்'' என்றேன். அவரும் சிரித்தார், நானும் சிரித்தேன்.

அதன் பிறகு மூன்று மாதங்கள் ஆகியும்கூட, ''இதன் மூலம் தெரியப்படுத்திய'' சீதாராம ஹெக்கடே அதன் மூலமாகவே சும்மாயிருந்துவிட்டதாகத் தோன்றியது. ''போனால் ஒரு கல்;

விழுந்தால் நாலு பழம்'' என்று அவருடைய வக்கீல் அறிவுரை கூறியிருக்கலாம். கல் போனதும் உண்மை; இல்லாத பழம் விழாததும் உண்மையாயிற்று.

குமட்டி சென்றுவரும் வேலையைக் கோடை நாட்களிலே முடித்துவிட வேண்டுமென்று நான் முடிவு செய்தேன். அங்கே போய் வரவேண்டியிருந்தது. அப்போது நமது ஹெக்கடேயைப் பார்க்கவேண்டும். முடிந்தால் அவருடைய தாயையும், தங்கைகளையும் பார்த்து வரவேண்டும். என் நண்பரின் அன்பிற்குரிய தாரேஸ்வரத்துச் சீனன், ஹொன்னகத்தே மஞ்சையா ஆகியவர்களையும் பார்த்துவிட்டு வரவேண்டும். யசவந்தராயரின் உறவினர்களிடமிருந்து அவரைப்பற்றி நல்ல சேதி ஏதும் அறிய முடியாது என்று எனக்குத் தோன்றியது. சீதாராம ஹெக்கடேயை அரைநாள் நான் பார்த்துப் பழகியதிலிருந்தே அவரைப் பற்றி நான் தெரிந்துகொள்வதற்குப் போதுமானதாக இருந்தது. அவருடைய கடிதங்களும், அவர்மீது எனக்கு அன்புகொள்ளச் செய்யும் வகையில் அமைந்திருக்கவில்லை. என் நண்பர் தனது நாட் குறிப்பில் மல்லிகை—மாமரங்களின் உவமை ஒன்றைக் கூறியிருந்தார். தம்முடைய இல்லற வாழ்க்கையைப்பற்றிக் குறிப்பிடுவதற்காகவே அந்த உவமையைக் கையாண்டிருந்தார். மல்லிகை என்னும் சொல் மிகவும் மதிப்பிற்குரியது. பிறருடைய உதவியை நாடி நிற்கும் மல்லிகையின் தன்மையையே அது குறிப்பிட்டது. குழந்தைகளைப்பற்றி அவர் என்னென்ன எழுதவேண்டியிருக்குமோ? மகனைப்பற்றி ஒரே ஒரு சொல்கூட அவர் எழுதியிருக்கவில்லை. சீதாராமன் போனபிறகு அந்த நாட்குறிப்பை இந்த நோக்கோடு புரட்டிப் பார்த்தேன். அதைப்பற்றிய பேச்சேயில்லை. பெண் மக்களையும் அவர் நினைத்துப் பார்க்கவில்லை. ஏன்? பொதுவாக, பெண் குழந்தைகளின் விஷயத்தில் தந்தைக்கு எந்த விதமான வெறுப்பும் இருப்பதில்லை. அந்தப் பெண்களாவது தம் தந்தைக்குக் கடிதம் எழுதினார்களா என்றால் அப்படியும் தெரியவில்லை. என் நண்பருக்குத் தம் மனைவியின்மீது ஏற்பட்ட எல்லையற்ற வெறுப்பின் பயனைப் பெண் குழந்தைகளும் அனுபவிக்க வேண்டி வந்தது என்று எனக்குப்பட்டது. என் நண்பர் தன் குழந்தைகளைப்பற்றி அவ்வளவு தூரம் வெறுப்படைந்திருக்க வேண்டியதில்லை என்றே நான் நினைத்தேன். அப்படி வெறுப்படைந்தது உண்மையானால், அதற்கேற்ற வலுவான காரணங்களும் இருந்திருக்கலாம். அப்படி ஒரு காரணம் இருந்தால்—தம்

முடைய பழைய தொடர்புகளை மறந்தே விடவேண்டும் என்னும் உறுதி அவரிடம் அழுத்தமாக இல்லாதிருந்தால், அது நடந்திருக்காது, அவர் ஓவியங்களும் எழுதியிருக்கமாட்டார். அங்கேயும் உறுதியும் பிடிவாதமும் காட்சியளிக்கின்றன. ஒரே ஒரு பொருளைப் பதினைந்து தடவை எழுதிப் பார்த்த முயற்சிகளையும் அங்கே காணலாம். அவர் மனம் கூறியபடி கையிலிருந்த தூரிகைகள் ஓடவில்லை; பென்சில்கள் கோடு இழுக்கவில்லை. அப்படியிருக்க, பிடிவாதத்தால் மட்டுமே ஓவியத்தை எழுதி முடிக்கவேண்டியதாயிற்று.

ஒருநாள் நான் அவருடைய நாட்குறிப்பைத் திறந்து பார்த்த போது, இந்த ஓர் உவமை என்னைக் கவர்ந்தது:

''பால், பாலுடன் கலப்பதைப்போல நீருடனும் கலந்துவிடுகிறது. பால், பாலுடன் கலப்பது அழகு. நீர் அதனுடன் கலந்தால் பால் நீர்த்துப்போகிறது; அதன் சுவையும் குன்றுகிறது. மிக அதிகமாக நீரைச் சேர்த்தால் பாலின் நிறம் மட்டுமே மிஞ்சுகிறது. அதுவாவது வேண்டும் . . .

''மோருக்கும், நீருக்கும் அப்படிப்பட்ட இணைப்பு இல்லை. மோர் புளிக்கக்கூடிய ஒன்று. புளித்த மோருடன், புளித்த மோர் இணைந்தால் அதுவும் ஓர் அழகு. அந்த மோருடன் நீரைச் சேர்த்தால் அது கலந்திருப்பதைப்போல் தோன்றுகிறது. தோற்றம் மட்டுமே அப்படி. அதனுல் கலக்க முடியுமா? கடைசியில் அது திரிந்த பாலைப் போலாகிறது. மோரின் துணுக்குகள் வேறே, நீர் வேறேதான்.

''பாலாகட்டும், நீராகட்டும் பானையில் விடலாம். பாலுக்குப் பதில் மோரை விடலாம். மோரை விட்டால்? புளித்த நீர்—மோரை விட்டால்? செப்புப் பாத்திரத்தில் இட்டால் அப்படியே இருக்குமா? அதில் களிம்பு பிறக்கிறது. ஏழ்மை என்னும் பானையில் நிலைத்திருந்த புளித்த மோரின் இயல்பு உலகத்துக்குத் தெரிவதில்லை. செல்வம் என்னும் வெண்கலப் பாத்திரத்திலும் அது என்ன என்பது மக்களுக்குத் தெரியாது. மாருக, செப்புப் பாத்திரம் மோருக்குத் தன் குணத்தைக் கொடுத்து, அதன் குணத்தால் தானும் கெட்டு, உலகத்தில் நஞ்சை நிரப்புகிறது.''

உலகத்தில் எதைப் பார்த்து என் நண்பர் இப்படிக் கூறியிருக்கிருர்? தம்மைச் சுற்றியிருந்த பத்து, இருபது குடும்பங்களையாவது அவர் பார்த்திருக்கலாம். அவற்ருேடு அவர் தம்முடைய குடும்பத்தையும் ஒப்பிட்டுப் பார்த்திருப்பார். ஏழையின் குடும்பத்

ளைப் பானைக்கும், பணக்காரன் குடும்பத்தை வெண்கலத்துக்கும் உவமையாகக் கொண்டிருப்பார். வெவ்வேறு கணவன், மனைவியரை எண்ணிப் பார்த்து, நீர்—மோர், மோர்—மோர், பால்—பால், பால்—நீர் என்பதாக அந்தக் கலப்புக்களை நினைத்து, பாத்திரங்களில் ஏற்படும் களிம்பைத் தீட்டியிருக்கிறார். அவருடைய மனத்தில், அவருடைய இல்லறம் பால்—பால் ஆகவுமில்லை; பால்—நீராகவுமில்லை; செப்புப் பாத்திரத்தில் நிறைத்து வைத்த மோர்—நீர் கலப்பாகவே தோன்றியிருக்கவேண்டும். அது களிம்பைத் தோற்றுவிக்காமல் வேறு எதைத் தோற்றுவிக்கும் என்று பெருமூச்சுவிட்டிருப்பார். இரண்டும் ஒரே மாதிரியான பொருளாக இருந்தால் அவற்றில் ஒரு கலப்பு ஏற்படுகிறது. ஆனால், அவற்றைத் தாங்கிய பாத்திரம் செப்பாக இருந்தால் குடும்பம் அல்லது சமுதாயத்துக்கு நஞ்சை அளிக்கிறது. இதிலிருந்து பாத்திரம் பானையானாலும் நல்லது, வெண்கலமானாலும் நல்லது என்று அவர் நினைத்ததைப்போலத் தோன்றுகிறது. நீர் பாலுடன் கலக்கும்போது அது பாலின் இயல்பைக் குறைத்தாலும், தன் தன்மையை இழந்துவிடுவதால் தீமை உண்டாவதில்லை. எத்தனை கணவன் மனைவியர், பால்—பாலாக இருக்கமுடியும்? அதில் ஒன்று நீராய் இருந்தாலும் அந்தக் குடும்பம் பிழைத்துவிடும். என் நண்பரின் வாழ்க்கையில் காணப்பட்டது கலக்கமுடியாத, கலந்ததுபோல் தோற்றமளித்த நீர்—மோர். அது இருந்ததோ செப்புப் பாத்திரத்தில். அதனாலேயே அப்படிப்பட்ட வாழ்க்கை குடும்பத்திற்கு, அதாவது சமுதாயத்திற்கு நஞ்சாகிறது என்ற எண்ணம் அவருக்கு வந்திருக்கவேண்டும். அது அவரில் பொறுக்க முடியாததாக ஆனதால் அவர் பம்பாய் என்னும் காட்டை நாடிச் சென்றார். அவருடைய ஒற்றுமையற்ற குடும்பத்தில் நஞ்சே விளைந்தது என்பது சீதாராம ஹெக்டேயின் நடத்தையைக் கண்டபோது எனக்குத் தோன்றியது. என்றாலும் எல்லாக் குழந்தைகளும், குறிப்பாகப் பெண் குழந்தைகள், அப்படியிருப்பார்கள் என்று நான் கருதவில்லை. அவர்களையாவது காணவேண்டும், கண்டு உண்மையை அறிய வேண்டும் என்னும் பிடிவாதம் என்னுள் மிருந்ததால் ஒருநாள் யாருக்கும் தெரிவிக்காமலே நான் குமட்டிக்குப் புறப்பட்டு விட்டேன்.

குமட்டியோ! சீன நாடகங்களில் சொல்வதுபோல, எங்கள் ஊரிலிருந்து ''தொலைவு என்றால் மிக மிகத் தொலைவு; அருகில்

என்றால் அடுத்தே இருக்கிறது.'' வட கன்னடம், தென் கன்னட மாவட்டங்கள், அடுத்தடுத்து இருக்கின்றன. நான் இருக்கும் ஊரிலிருந்து குமட்டி நூற்றைம்பது மைல் தூரம்கூட இல்லை. ஆனால் பிரயாணம் செய்வதற்கோ இரண்டு நாட்கள் வேண்டும். ''பஸ்'' (போதும்) என்று சொல்லும் அளவுக்கு ''பஸ்'' பிர யாணம். ஏறவேண்டும், இறங்கவேண்டும்; ஆற்றின் கரைகளில் படகு ஏறவேண்டும். ஆற்றைக் கடந்து, அடுத்த பஸ் எப்போது வருமோ என்று காத்துத் தவம் செய்யவேண்டும். அப்படிப் பயணம் செய்து, நான் துவண்டு போனேன். சீதாராம ஹெக் கடே எங்கள் வீட்டுக்கு வந்தபோது எப்படிக் கடுகடுத்த முகத் தோடு வந்தாரோ, அப்படியே நானும் ஹொன்னுவரத்தில் ஆற்றைக் கடந்து பஸ் ஏறியபோது இருந்தேன். இனிக் கவலை யில்லை, பன்னிரண்டு மைல் தூரம்தான் என்ற திருப்தியுடன் அந்தத் தேரில் ஏறினேன். அது பழைய காலத்துத் தேர். கடந்த உலகப்போரில் பல களங்களைக் கண்டு வெற்றிகொண்டு திரும்பி வந்த, விழுப்புண்பட்ட வீரர்களைப் போன்றது. அதற்குள் வெளியே விழுந்துவிடும் அளவிற்கு மக்கள்; அதிலேயே உட் கார்ந்து சென்றோம். கர்கி வந்தது; ஹளதிபுரம் கடந்தது; இனி வருவது தாரேஸ்வரம், அடுத்தது குமட்டி. தாரேஸ் வரத்தில் பஸ் நின்றுவிட்டது. ஏன் என்பது தெரியவில்லை. தாரேஸ்வரம் பழைய காலத்து ஒரு புண்ணியத்தலம், அங்கிருந்து பஸ் புறப்படவேயில்லை. ஏதோ ஓர் இயந்திரப் பகுதி பழுதாகி விட்டதாம்; இரும்பு துண்டாகிவிட்டதாம்; ஒரே நேரத்தில் பல நோய்களுக்கு ஆளாகி, எங்கள் வண்டி நின்றுவிட்டது. நாங் களும் கீழேயிறங்கினோம். இன்னும் இரண்டு மணி நேரத்திற்கு வேறு பஸ் இல்லை. வேறு வண்டி வந்தாலும் அதில் அத்தனை பேருக்கும் இடம் கிடைக்கும் உறுதியும் இல்லை. ''டிரைவர் சார், எவ்வளவு நேரத்தில் ரிப்பேர் ஆகும்?'' என்று கேட்டால் குமட் டிக்கோ, சிர்சிக்கோ தகவல் போய் அங்கிருந்து ஏதோ ஒரு ''ஸ்பேர்'' வண்டி வந்து ரிப்பேர் ஆகவேண்டும் என்று பதில் வந்தது. அதாவது அன்றைக்குப் பிரயாணம் செய்யும் எண்ணத் தைக் கைவிடவேண்டும். அப்போது பிற்பகல் மணி இரண்டு! வெயில் என்றால் கடுவெயில்! என்னுடன் வந்த சிலர் நடந்து முன்னே செல்லத் தொடங்கினார்கள்; நானும் செல்வது நல்லது என்று நினைத்தேன், அது தாரேஸ்வரம். என்னிடமிருந்த குறிப்புக் களில் கண்ட சீனன் இந்த ஊரைச் சேர்ந்தவன். ஆகவே அங்கே

நின்றேன். ஒரு கடைக்குப்போய் உட்கார்ந்து சிறிது அவல் வாங்கித் தின்றுவிட்டு, தேநீர் குடித்தேன். கடைக்காரர் வயதானவராக இருந்ததால் பேச்சுக்கொடுத்தேன். ''ஐயா, இங்கே முன்பு 'தாரேஸ்வரத்து சீனன்' என்று ஒருவன் இருந்தானு?'' என்று கேட்டேன்.

அவர், ''முன்பு எதற்காக? இப்போதும் இருக்கிறார்கள். தாரேஸ்வரத்தில் பத்துப் பேர் சீனன் என்ற பெயருடையவர்கள் இருக்கிறார்கள். மலை வீட்டுச் சீனன், வயல் நாட்டுச் சீனன், கெசரு கத்தெ சீனன் . . .'' என்று சீனர்களுடைய பட்டியலையே தொடங்கினார்.

''இப்போதே அவ்வளவு பேர் சீனர்கள் இருக்கும்போது, முன்னால் எத்தனை பேர் சீனர்கள் இருந்திருப்பார்களோ'' என்று அஞ்சி, சும்மாயிருந்து விட்டேன். என் கைப் பையைக் கையில் பிடித்துக்கொண்டு, அதே வெயிலில், செம்மண் பாதையில் அடியிட்டுக் குமட்டியை நோக்கி நடக்கத் தொடங்கினேன்.

## ஒன்பதாம் அத்தியாயம்

இரண்டு நாட்கள் பயணம்; அதிலும் புழுதி வெயில், இவற்றில் குளியல்; இவற்றையெல்லாம் அனுபவித்த பிறகு குமட்டிக்குப் போய்ச் சேர்வதற்குள் போதும், போதும் என்றாகிவிட்டது. குமட்டிக்கு வரும்வரை யார் வீட்டுக்கு முதலில் போகவேண்டும் என்பதைச் சிந்திக்கவேயில்லை. ஊரை நெருங்கும்போது அங்குள்ள நண்பர்களை ஒவ்வொருவராக நினைத்துப் பார்த்தேன். எல்லாம் பழங்காலத்து நினைவுகள். ஊரில் அவர் இருப்பாரா, இவர் இருப்பாரா என்று நினைவுக் குவியலைக் கிளறினேன். நான் எடுத்து வைக்கும் முதல் அடியே தவறாக இருக்கக்கூடாது. சீதாராம ஹெக்கடேயின் வீட்டுக்குப் போகக்கூடாது என்று முடிவு செய்தேன். சீதாராமன் என்றதும், அதே பெயருடைய வேறொரு நண்பர் நினைவுக்கு வந்தார். இவர் ஹெக்கடேயல்ல; சபாவந்தர். ஊரை அடைந்ததும் முதலில் இருக்கும் வீடு அவருடை

யதுதான். பழங்காலத்து இனிய நினைவுகளோடு கூடியது அது என்பதால் அவர் வீட்டுக்கே போனேன். பழைய நண்பரைப் பார்க்கும் மகிழ்ச்சியோடு அங்கே சென்றேன். ''ஐயா இருக்கிறார்களா?'' என்று கதவைத் தட்டிக் கேட்கும்போது அவரே வந்து கதவைத் திறந்தார். ''காரந்தரா; வாருங்கள் வாருங்கள்'' என்று என்னை அன்போடு வரவேற்றார், தாகத்தைத் தீர்த்தார். அவர் ''ஏன் வந்தீர்கள், இந்த ஊருக்கு?'' என்று கேட்கவில்லை. அதற்குப்பதில், ''இரண்டு நாட்கள் இருப்பீர்கள் அல்லவா?'' என்று கேட்டார். ''இரண்டு நாட்கள் அல்ல, நான்கு நாட்கள் இருந்தாலும் இருப்பேன்'' என்று சொன்னதும், ''மிகவும் நல்லதாயிற்று'' என்றார் அவர். நான் எப்போதும் திரிந்துகொண்டேயிருப்பவன் என்பது அவருக்குத் தெரியும். ஆகவே, ''ஏதோ வேலையிருக்கலாம்; இல்லாமல் வருவாரா'' என்று தமக்குள் நினைத்துக்கொண்டு இருப்பாரே தவிர, ஏன் எதற்கு என்று கேட்கவில்லை. அதேபோல நானும் சீதாராமனைப்பற்றிய கேள்விகளைக் கேட்கும் வம்பில் இறங்கவில்லை. என்னுடையது போலீஸ் விசாரணை அல்ல. அந்த ஊரில் எனக்கு இன்னும் பல நண்பர்கள் இருந்தார்கள். ஒவ்வொருவர் வீட்டுக்கும் போய் வந்து உபாயமாக, ஆர்வம் இருந்தும் இல்லாதவனைப்போல நடித்து, தானாக வெளிவரும் பேச்சுக்களிலிருந்து என் கற்பனையினால் மற்றவற்றை நிரப்பிக்கொள்ள வேண்டியதாயிற்று.

வந்த அன்று இரவு சபாவந்தர் வீட்டிலேயே கழிந்தது. குளியலும், தூக்கமுமே எனக்கு அப்போது தேவையாயிருந்தவை. அவற்றோடு உணவும் உபசாரமும் சேர்ந்ததால் இரவெல்லாம் நன்றாகத் தூங்கினேன். மறுநாள் காலையில் சிற்றுண்டியை முடித்துக்கொண்டு மற்றொரு நண்பர் வீட்டுக்குப் போனேன். போகும் வழியிலேயே முதல் வீட்டாரின் பாக்கு மண்டி இருந்தது. அது ஒரு பெரிய வீடு. வாயிலை அடுத்து ஒரு முற்றம்; அதன் பிறகு கடை, அதன் பின்னால் குடியிருக்கும் வீடும் இருக்கலாம். வெளியே ''போர்டு'' இருந்ததால் கடைக்கண்ணினால் படித்துத் தெரிந்துகொண்டு வேகமாக நடந்து, என் நண்பர் வக்கீல் முர்டேஸ்வரர் வீட்டுக்குப் போனேன். அவர் ஒருவகையில் வேலை மிகுந்தவர்: வக்காலத்துக் குறைவாக வந்த காரணத்தால் ஓய்வு மிகுந்தவர். அவருக்கு நான் வந்ததைத் தெரிவிப்பது மட்டும் போதுமானதாக இருந்தது. அவர் எனக்கு மிகவும் தெரிந்தவர்; உள்ளூர்க்காரர். உறவினர்களிடமிருந்தும், அதே இனத்தவரிடமிருந்தும்

திரிந்த நிலையில் கிடைக்கக்கூடிய குறிப்புக்களைவிட, தொடர்பில்லாத பிறரிடமிருந்து என் நண்பரைப் பற்றிக் கிடைக்கும் கருத்துக்கள் உண்மையாக இருக்கும் என்று நம்பி, அவருக்கு என் வருகையின் நோக்கத்தைத் தெரிவித்து, ''நான் சாயங்காலம் வருகிறேன். நீங்கள் இப்போது கோர்ட்டில் ஆஜராகவேண்டுமல்லவா?'' என்று சொல்லி, புறப்பட்டு வந்தேன்.

நான் அடுத்தபடியாக அடியெடுத்து வைத்தது மூன்று மைல் தூரத்திலிருந்த ஹொன்னகத்தேயை நோக்கி. அந்தக் கிராமத்தை நான் எப்போதோ இரவில் கண்டிருந்தேன். கண்டும் காணுததைப்போல்தான். அந்த ஊருக்குச் செல்லும் வழியில் சோள வயல்களையும், ஆங்காங்குள்ள குடியிருப்புக்களையும் பார்த்துக்கொண்டே நடந்தேன். இரண்டு மைல்கள் சென்ற பிறகு ஒரு பள்ளிக்கூடப் பையன், சுமார் பதினுன்கு வயதுப் பையன் எனக்கு எதிர்ப்பட்டான். வீணுக அலைந்து திரிவது வேண்டாம் என்று எண்ணி, அவனைத் தடுத்து நிறுத்தி, ''ஹொன்னகத்தே மஞ்சையருடைய வீட்டுக்கு எப்படிப் போகவேண்டும்?'' என்று கேட்டேன்.

''ஹொன்னகத்தே இதுவேதான்; இங்கிருந்தே அது தொடங்குகிறது. மஞ்சையருடைய வீடு என்றல் எங்கள் வீடா? மஞ்சையா என்று இன்னெருவரும் இருக்கிறர்'' என்றன்.

அந்தப் பையன் அவர்கள் வீட்டுக்குப் போகும் வழியை விளக்கினுன்—பூவரச மரம், கோவில், இடம், வலம், பனை மரம், அத்தி மரம் என்றெல்லாம் குறிப்புக்கள் கொடுத்தான்! மரங்களைப்பற்றிய என் அறிவு போதுமானதல்ல. அதுவுமன்றி, ஊரில் எத்தனையோ பனை மரங்களும் பிற மரங்களும் இருக்கலாம். அதனுல் ''அதை எனக்குச் சிறிது காட்டுகிறயா? உனக்குப் பள்ளிக்கூடம் போகும் நேரம் ஆகிவிட்டதோ என்னவோ? நேரமாகுமானுல் வேண்டாம்'' என்றேன்.

அந்தப் பையன், ''நான் காட்டுகிறேன்'' என்று சொல்லி வேகமாக நடைபோட்டான். நானும் அவனைப் பின்தொடர்ந்தேன். நடப்பது சலிப்பாக இருக்கக்கூடாது என்பதற்காக அவனிடம் பேச்சுக் கொடுத்தேன். ''உங்கள் வீடு எவ்வளவு தூரத்திலிருக்கிறது?''

''இரண்டு பர்லாங்.''

''உங்கள் வீட்டில் யார் யார் இருக்கிறர்கள்?''

''அப்பா, அம்மா, இரண்டு தம்பிகள். அவ்வளவுதான்.''

''தம்பிகள் பள்ளிக்கூடம் போவதில்லையா?''

''போகிறார்கள், சிறிய பள்ளிக்கூடத்துக்கு.''

''நீ?''

''கிப் ஹைஸ்கூலுக்கு.''

''பகலில் சாப்பாட்டுக்கு வந்துபோவதற்குத் தொலைவு அல்லவா?''

''ஆம், நான் வருவதில்லை.''

''பள்ளிக்கூடத்திலேயே இருந்து விடுகிறாயா? அப்படியானால் சாப்பாடு?''

''இல்லை''—இதைச் சொன்னபோது, அந்தப் பையனுடைய உலர்ந்த உருவத்தைக் கண்டு எனக்கு வருத்தமாக இருந்தது.

''உனக்கு, உறவினர்கள், நண்பர்கள் என்று நகரத்தில் யாருமே இல்லையா? ஒருவேளை சாப்பாடு போடுகிறவர்கள்?''

''இருக்கிறார்கள், ஆனால் நான் போவதில்லை.''

''ஏன், அவர்கள் ஏழைகளா?''

''அவர்களுக்கு உண்டு ஏப்பம் விடும் அளவுக்கு இருக்கிறது. என் தாய் மாமன் வீடே இருக்கிறது. அவர்களுடைய கடையும், வீடும் நகரத்திலேயே இருக்கின்றன. ஆனால், எங்களுக்கும், அவர்களுக்கும் அவ்வளவு பிடித்தமில்லை.''

''என்ன பெயர்?''

''முதல் வீட்டுக்காரர்கள் என்று பெயர்.''

''நீ அவருக்கு என்னவாக வேண்டும்?''

''நானா? அவருடைய தங்கை மகன்.''

''உன் தந்தையின் பெயர் மஞ்சையா என்று சொன்னா யல்லவா?''

''ஆம்... உங்களுக்கு எந்த ஊர்? உங்களைப் பார்த்தால் வெளி யூர்க்காரர் மாதிரி இருக்கிறது.''

''ஆம், நான் வெளியூர்க்காரன்தான். மங்களூர்ப் பக்கம்.''

''அங்கிருந்தா இங்கே வந்தீர்கள்?'' என்று சொல்லிக்கொண்டே அவன், ''அதோ பாருங்கள்; அந்தப் பனை மரம்தான். அதற்கு முன்னாலிருப்பது கேத்தரகி மஞ்சையருடைய வீடு'' என்று காட்டினான்.

என் மனம் தடுமாறியது. நான் அவனை அழைத்து, ''நில், உன் பெயர் என்ன சொல்'' என்றேன்.

''யசவந்தன்.'' திடுக்கிட்டேன். பெயரைச் சொன்னவுடன் பையன் ஓடிவிட்டான்.

''யசவந்தா, நில், நில். இன்னொரு விஷயம்.''

பையன் திரும்பி வந்து, ''என்ன வேண்டும், சொல்லுங்கள். நான் அவசரமாகப் பள்ளிக்கூடம் போகவேண்டும்.''

''ஆம், மணி அடிப்பதற்குள் போகவேண்டும்; உண்மையில் என்னால் உனக்கு மிகவும் தொல்லை. ..உன்னுடைய தாத்தா என் நண்பர். அதற்காகவே நிற்கச் சொன்னேன்.''

''யார்? முதல் வீட்டுப் பெரிய ஹெக்கடேயா? அப்படி யானால் நீங்கள் யார்?''

''சிவராம காரந்த் என்பது என் பெயர்.''

''நீங்கள் எங்கள் வீட்டுக்கு வரமாட்டீர்களா? எங்கள் அப்பா வுக்கு நீங்கள் மாதம்தோறும் மணியார்டர் அனுப்புகிறீர்களல் லவா?'' என்று பையன் என் கையைப் பிடித்து நிறுத்தி, ''கேத்தரகி அவர்களுடைய வீட்டுக்கு அப்புறமாகப் போகலாம். எங்கள் அப்பா, அம்மாவுக்கு உங்களைப் பார்த்தால் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கும்'' என்று சொல்லி என்னை இழுக்கத் தொடங் கினான். நான் தேடிச்சென்ற மஞ்சையா முதியவராக இருப்பார் என்பதாக என் மனத்தில் வேரூன்றியிருந்த எண்ணத்தினாலேயே இப்படித் திடுக்கிட வேண்டியதாயிற்று. மஞ்சையா என்பது என் நண்பரின் மருமகனேதான். நான் அவருடைய நடுங்கும் கையெழுத்தைக் கண்டு அவர் முதியவராக இருப்பார் என்று நினைத்துக்கொண்டிருந்ததால், பையன் ''கிழவரா?'' என்று முதலில் கேட்டதும் ''ஆம், அங்கேதான்'' என்றேன். இந்தப் பையனின் தந்தை அவ்வளவு வயதானவராக இருக்கமாட்டார் என்று தோன்றியது. ஆகவே சிறிது யோசித்தபடியே நின்றேன்.

''என்ன சந்தேகம், சொல்லுங்கள்'' என்றான் அந்தப் பையன்.

''உங்கள் தந்தையின் நடுங்கிய கையெழுத்தைக் கண்டு அவர் வயதானவர் என்று நான் நினைத்துக்கொண்டிருந்தேன். உங்கள் வீட்டுக்குப் போவதற்குப் பதிலாக மற்றொரு வீட்டுக்குப்போய் விட்டிருப்பேன்.''

''நான் முதலிலேயே உங்கள் பெயரைக் கேட்டிருந்தால் சரியாக இருந்திருக்கும். வாருங்கள், வாருங்கள். எங்கள் அப்பா படுத்தபடியே . . . அவருக்கு ஒருவிதமான வாதம்; அவர் படுத்து ஏறக்குறைய ஒரு வருடமாயிற்று'' என்று அந்தப் பையன் மெலிந்த குரலில் சொன்னான். அதன் பிறகு அந்தச் சிறிய யசவந்தன் என் கையை விடவேயில்லை. அரை மைல் தூரத்தி லிருந்த தங்கள் வீட்டுக்கு என்னை அழைத்துச் சென்றான். வீட்டை

அடைந்ததும் தன் பள்ளிக்கூடப் பையைத் திண்ணைமேல் எறிந்தான். உள்ளே ஓடி, அப்பாவுக்கும், அம்மாவுக்கும் சங்கதியைத் தெரிவித்து, நான் கால் கழுவுவதற்காக நீர் கொண்டுவந்தான்; கூடத்தில் ஒரு பாயை விரித்தான். அதற்குள் வற்றிய பெண் உருவம் ஒன்று என் கண்ணில் பட்டது. நல்ல சுமங்கலி; வறுமையில் உடம்பெல்லாம் கறுத்திருந்தாலும் உண்மையில் கிருகலட்சுமி என்று கூறும் வகையில் இருந்தாள். கபடமில்லாமல் என் எதிரில் வந்து நின்று வணங்கி, ''எங்கள் அப்பா செய்த புண்ணியத்தால் நீங்கள் எங்கள் வீட்டுக்கு வந்திருக்கிறீர்கள். நீங்கள் சுகமாய் இருக்கிறீர்களா? . . . எங்கள் வீட்டுக்காரர் படுத்த படுக்கையிலேயே . . . '' என்றாள். யசவந்தனை அழைத்து ''யசு, உன் தம்பிகள் பள்ளிக்கூடம் போய்விட்டார்கள். நீ போகாமல் இருந்தால் நல்லது'' என்றாள்.

''அம்மா, இவர் நம் வீட்டுக்கு வந்திருக்கும்போது நான் போவதெப்படி? நீ உள்ளே போ, நான் இவரைக் கவனித்துக் கொள்கிறேன். இவருடைய தாகத்திற்கு ஏதாவது தயார் செய்... நீங்கள் அப்பாவை இப்போதே பார்க்கிறீர்களா? அல்லது தாகம் தீர்ந்த பிறகு பார்க்கிறீர்களா?'' என்று கேட்டான்.

''தாகம் தீர்ந்த பிறகு'' என்று அவனுடைய தாயின் குரல் கேட்டது!

நான் அவனை அருகில் உட்காரவைத்துக்கொண்டு அவனுடைய தம்பிகளைப்பற்றியும், தாயைப்பற்றியும், விவசாயம் ஏதாவது நடக்கிறதா என்பதைப்பற்றியும் விசாரித்தேன். என் மனத்தில் நான் இவ்வளவு நாட்கள் அவர்கள் வீட்டுக்கு வராமல் காலம் தாழ்த்தியதுபற்றி மிகவும் வருத்தம் ஏற்பட்டது.

''எங்கள் தாத்தாவை உங்களுக்கு மிகவும் நன்றாகத் தெரியுமா? அவர் பம்பாயில் இறந்தாராமே? அவர் இறந்தபோது யாராவது அருகில் இருந்தார்களா? சீதாராம ஹெக்கடே போயிருக்கலாம்'' என்று பையன் சொன்னபோது, நான் ''எல்லாவற்றையும் நிதானமாகச் சொல்கிறேன் . . . உங்கள் வீட்டு விவசாயம் வெறும் மூன்று 'மா' நிலத்தில்தானா? அவ்வளவு கொஞ்சம் போதுமானதாக இருக்கிறதா?'' என்று கேட்டேன்.

''போதாவிட்டால்? போதுமானதாகச் செய்துகொள்ள வேண்டும். வேறு வழியில்லை. எங்கள் அம்மா சொல்லுகிறார்: எங்களுக்கு முதலில் நிறைய இருந்ததாம்; பிரிவினை ஆயிற்று; பெரியவர்கள் வைத்த கடனுக்கு எல்லாம் போயிற்றாம். அதன்

பிறகு அவருடைய அப்பாதான் இவ்வளவாவது நிலைக்கச் செய்தாராம்.''

அதே நேரத்திற்குச் சிறிது பாலும், அரிசி நொய்யில் செய்த உப்புமாவும் கொண்டுவந்து, யசவந்தனின் தாய் என் முன்னால் இட்டாள். ''இது, ஏழைகள் வீடு; தேயிலை வாங்கிவரவில்லை; அந்தப் பழக்கமும் இல்லை; இது ரவை உப்புமாவும் அல்ல; நொய் உப்புமா, குசேலரின் விருந்து'' என்று கூறி உபசரித்தாள்.

''அம்மா, அப்படியெல்லாம் நீங்கள் பேசக்கூடாது. உபசாரம் என்பது, ரவை, டீ, காப்பி என்பதில் இல்லை. அது மனத்தில் இருக்கிறது.''

நான் அந்தச் சிற்றுண்டியைத் தின்றுகொண்டிருந்தபோது அந்தப் பையன் சும்மா இருப்பதைக் கண்டேன். ''நீயும் இதிலேயே சிறிது எடுத்துக்கொள்'' என்றேன். ''நான் கஞ்சி குடித்துவிட்டேன்'' என்றான் பையன். நான் அவனைக் கட்டாயப்படுத்தி அதிலிருந்தே சிறிது கொடுத்து அவனைத் தின்னச் செய்தேன்.

அதன் பிறகு தாய், மகன் இருவருமாக என்னை ஓர் அறைக்கு அழைத்துச் சென்றார்கள். எனக்காக அங்கே ஒரு மணையைப் போட்டு, விளக்குத் தண்டின்மீது ஒரு விளக்கேற்றி வைத்து மஞ்சையாவின் பக்கத்திலிருந்த சன்னலைத் திறந்தார்கள். படுத்திருந்த அவர் எழுந்திருக்க முயல்வதைக் கண்டு ''வேண்டாம்'' என்று சொன்னாலும் கேட்கவில்லை; மெதுவாக எழுந்து, தாமாகவே பின்பக்கத்துச் சுவரில் சாய்ந்துகொண்டார். நான் அவர் எதிரில் உட்கார்ந்தேன். அவரே பேச்சைத் தொடங்கினார்:

''நானே ஒரு நாளைக்கு இரண்டு தடவை எழுந்து குளிப்பதற்கும், மற்றவற்றிற்கும் போய்வருகிறேன். பிடித்துக்கொள்வதற்கும், மற்றவற்றிற்கும் ஓர் ஆதாரம் வேண்டியிருக்கிறது. இது ஒரு பெயர் தெரியாத நோய். பெயரளவிற்கு வாதம் என்கிறார்கள். வாதத்திற்குச் செய்யவேண்டிய வைத்தியம் எல்லாம் செய்து பார்த்தாகிவிட்டது. ஒன்றும் பயனில்லை. கிடந்து துடிக்கவேண்டும் என்று தலையில் எழுதியிருக்கும்போது அனுபவிக்கத்தானே வேண்டும். வேறு எந்தக் கவலையும் இல்லை, என் இந்த யசு சிறிது பெரியவனாகிவிட்டால் எனக்குக் கொஞ்சம்கூடக் கவலையில்லை'' என்றார்.

''தாத்தாவின் பெயரையே அவனுக்கு வைத்திருக்கிறீர்கள்!''

''நீங்கள் எங்கள் மாடிவீட்டு விஷயத்தைப்பற்றி எழுதியிருந்தீர்கள் . . . நான் இந்த நிலையில் இருந்ததால் உங்களுக்குப்

பதில் எழுதவில்லை. யாரையாவது விட்டு எழுதச் சொல்லி யிருக்கலாம் . . . எங்கள் மாமா உங்களுக்கு நீண்ட நாளாகத் தெரிந்தவரா?''

அப்போது நான், அவருடைய மாமனுருக்கும் எனக்கும் ஏற்பட் டிருந்த நட்பு முதலிய எல்லாவற்றையும் விளக்கிக் கூறினேன். பிறகு அவருடைய வளர்ப்புத் தாயின் கதையையும் சொன்னேன். அந்த மூவரும் சேர்ந்து, பாகவதத்தைக் கேட்பதுபோல, பக்தி யுடனும் ஆர்வத்துடனும் கேட்டார்கள். பார்வதியம்மாளின் கடைசிக் காலத்துக் காட்சியை நான் வர்ணித்தபோது அவர்கள் எல்லோரும் அழுதேவிட்டார்கள்.

''அந்தப் புண்ணியவதியை நீங்கள் பார்த்துவிட்டு வந்திருக் கிறீர்கள். நாங்கள் பார்த்ததேயில்லை. நீங்கள் மிக நல்ல வேலை ஒன்றைச் செய்தீர்கள். எங்கள் மாமனுரின் பெயர் நிலையாக இருக்குமாறு செய்துவிட்டீர்கள். ஆனல், பாருங்கள், அப்படிப் பட்ட என் மாமனுர் தன் மனைவிக்கும், குழந்தைக்கும், முக்கிய மாக மகனுக்கும், மனைவிக்கும் பகையாளுரல்லவா! இப்பொழுது அவரை எல்லோரும் பழிப்பவர்களே! ஆனல் ஒன்று; அவருக்கு இந்த மகள்மீது சிறிது அதிக அன்பு உண்டு. இவளை நான் மணந்து கொண்டபோது, எங்களுடைய வீட்டில் செல்வம், அதனுடைய பகட்டு இரண்டும் அதிகமாயிருந்தன. ஆனல் பெரிய குடும்பம். அதனல் பாகப் பிரிவினையாகும்போது எல்லாம் போய்விட் டது. முன்னேர்கள் ஏற்படுத்திய கடனல் எங்களுக்கு ஒன்றுமே மிஞ்சவில்லை. அப்போது எங்களுக்குக் கைகொடுத்து உதவ முயன்றவர் எங்கள் மாமனுர்தான். கோர்ட்டுக்கும் பணத்தைச் செலவழித்தார்; அதனல் பயன் ஏதும் மிகுதியாக ஏற்படவில்லை. அவர் செய்யவேண்டியதெல்லாம் செய்தும் பயனில்லாமல் போயிற்று. அதன் பிறகு ஒரு சிறிது நிலத்தை அவரே வாங்கிக் கொடுத்தார் என்று கூறுவதும் தவருகாது. அது என் மைத்து னன் சீதாராமனுக்குப் பிடிக்கவில்லை. மாமனுர் இருந்தபோதே எனக்கும், அந்த மைத்துனருக்கும் அவ்வளவாகப் பிடிக்காது. சில வருடங்களுக்குப் பிறகு மாமனுர் ஊரைவிட்டுப் போனு ரல்லவா? அதன் பிறகு எந்தத் தொடர்பும் மிஞ்சவில்லை. அவர் எங்கிருந்தார் என்பதே எங்களுக்குத் தெரியாமல் போயிற்று. அவருக்கு என்ன கஷ்டம் ஏற்பட்டதோ, ஏன் அப்படிச் செய் தாரோ, ஒன்றுமே தெரியாது.''

மஞ்சையா பேசிக் களைத்ததைக் கண்டு நான் அவருடைய மனைவியைப் பார்த்து, ''மற்ற பெண்கள் உங்களைவிட மூத்தவர்களா? அல்லது இளையவர்களா?'' என்று கேட்டேன்.

''நாங்கள் நான்கு பேர் அவருக்குக் குழந்தைகள். பெரியவனே சீதாராமன். குமட்டியில் கடை வைத்துக்கொண்டிருக்கிறான். எங்கள் தாயும் அவனுடனேயே இருக்கிறார்கள்.''

''நீங்கள் தாய் வீட்டுக்குப் போவதும், அவர்கள் இங்கே வருவதும் உண்டல்லவா? இவ்வளவு அருகிலிருக்கிறீர்கள்!''

''அந்தக் கதையை ஏன் கேட்கிறீர்கள்? எங்கள் வீட்டுக்காரர் நன்றாய் இருந்தவரை, எங்கள் தந்தை ஊரிலிருந்தவரை அவ்வப்போது, போவது வருவது எல்லாம் இருந்தது. நானே பெண்களில் பெரியவள். என் தாயின், அண்ணனின் போக்குகளே வேறு. அவர்களுக்கு—எங்களைவிட என்ன, கடவுளையும்விடக் காசே பெரியது.'' நான் அதைக் கேட்டுச் சிரித்தேன்.

''நான் அப்படிச் சொல்லக்கூடாதல்லவா? எங்கள் கஷ்டத்திற்கு அவர்கள் துணையாக இருக்கவில்லை என்பதனால் அவர்களைப் பழிக்கக்கூடாதல்லவா? சொல்லியாயிற்று; ஒரு தவறு. எங்கள் வீட்டுக்காரர் அப்படித்தான் சொல்லுகிறார் . . . ஏதோ வருத்தம், சொல்லிவிட்டேன்.''

அதற்குள் ''ஜலஜா, நீ உள்ளே போய், சீக்கிரம் சமையலை முடி'' என்றார்.

''வேண்டாம், நான் சாப்பாட்டுக்குக் குமட்டிக்குப் போகிறேன். சபாவந்தர் வீட்டில் பகல் சாப்பாட்டுக்கு வருவதாகச் சொல்லிவிட்டு வந்திருக்கிறேன். 'கொஞ்சம் நேரமானாலும் கவலைப்பட வேண்டாம். நாங்களெல்லாம் தினமும் நேரம் கழித்தே சாப்பிடுகிறோம்' என்று சொல்லியிருக்கிறார்.''

''அவர் புண்ணியவான்! அந்த சீதாராம சபாவந்தனுக்கும் எனக்கும் நல்ல நட்பு. அவனுடைய அண்ணனுடனும் எனக்கு அறிமுகமுண்டு. அவன் இறந்துவிட்டான்; புண்ணியவான். இப்போது உள்ள நிலைமையில் போனவர்களே புண்ணியவான்கள் என்று தோன்றுகிறது.''

''குடும்பக் கஷ்டத்தை நினைத்து நீங்கள் அப்படிச் சொல்லுகிறீர்கள். யாருக்குத்தான் கஷ்டமில்லை? கஷ்டப்படாமல் இன்ப வாழ்க்கையிலேயே மிதக்கிறவர்கள் நூற்றுக்கு ஒருவர் இருக்கலாம். அதனால் நாம் நம் மனத்தை நஞ்சாக்கிக் கொள்வதால் என்ன பயன்?''

''ஆம், உண்மை. அப்படிப்பட்ட சொற்களைக் கூறக்கூடாது. குழந்தைகளுக்கு முன்னால் சொல்லவே கூடாது. வளர்ந்துவரும் அவர்கள் மனத்தில் 'நாம் ஏன் பிறந்தோம்?' என்னும் எண்ணம் தோன்றும்படி செய்யக்கூடாது.''

அப்போது யசவந்தன், ''அப்பா, கடைசிவரையில் இப்படியே கஷ்டம் இருக்கும் என்று நீங்கள் ஏன் நினைக்கிறீர்கள்? அதெல்லாம் ஒரு காலம் என்று நீங்களே சொல்லியிருக்கிறீர்களல்லவா?''

''ஆம், குழந்தாய். இப்போது கடவுள் இவ்வளவாவது கொடுத்திருக்கிறாரல்லவா! இனி நீ உழைக்கிற நிலைமைக்கு வந்துவிட்டால் . . . ''

''எல்லாம் நன்மையாகவே முடியும்! உங்கள் பையனின் அதிர்ஷ்டம் உங்களைவிட நல்லதாக அமையும் . . . என்ன? யசவந்தா, நீ படித்துப் பெரியவனானால் உன் தாய், தந்தையரைக் காப்பாற்றுவதற்குத் தயங்குவாயா?'' என்றேன் நான்.

''இல்லாவிட்டால் பிள்ளைகள் எதற்காகத்தான் இருக்கிறார்கள்?'' என்றான் அந்தப் பையன்.

''சரி, அப்படியானால் நான் புறப்படட்டுமா? இன்னும் இரண்டு நாட்கள் குமட்டியிலிருக்கப்போகிறேன். இன்னொருமுறை வந்து பார்க்கிறேன்'' என்றேன்.

அவர், ''அதெல்லாம் வேண்டாம்'' என்று சொல்லி மகனைப் பார்த்து, ''யசு'' என்றார்.

''ஆகட்டும், அப்பா. நான் ஓடிப்போய் சபாவந்தர் வீட்டில் சொல்லிவிட்டு வந்துவிடுகிறேன்'' என்று எழுந்து நின்றான் அந்தப் பையன்.

''வேண்டாம் தம்பி'' என்று சொல்வதற்குள் அந்தப் பையன் ஓடியேவிட்டான். என் மனத்தில் யசவந்தர்கூடச் சிறுவயதில் இவ்வளவு சுறுசுறுப்பாகவே இருந்திருப்பார் என்று தோன்றியது. நான் அவர்களுடைய செய்தியை அறிந்துகொள்வதற்காக ''உங்கள் மனைவியின் பெயர் 'ஜலஜ' என்றீர்களல்லவா?'' என்று கேட்டேன்.

அவர் சிரித்தார். ''எங்கள் மாமனாருக்குக் கண் பரமசிவனைப் போல. ஆகவே ஜலஜாட்சி, வனஜாட்சி, மீனாட்சி என்று மூன்று பெண்களுக்கு மூன்று பெயரிட்டார்.''

''இன்னும் பெண்கள் இருந்திருந்தால் காமாட்சி, ஹரீணாட்சி என்றெல்லாம் பெயர் வைத்திருப்பாரோ என்னவோ'' என்றேன்

நான். பிறகு சிறிது சிரித்துவிட்டு, ''உங்கள் மைத்துனிமார் இரண்டுபேரும் எங்கேயிருக்கிறார்கள்?'' என்று கேட்டேன்.

''வனஜா என்பவளின் வீடு, கெக்காருக்குச் சமீபத்தில் தெங் கணத்தில் இருக்கிறது. அவள் நல்ல பணக்காரக் குடும்பத்தில் புகுந்தாள். நன்றாகக் குடும்பம் நடத்திக்கொண்டு அங்கே சுகமாக இருக்கிறாள். இன்னொருத்தியை 'யாண' என்னும் பழைய கிராமத்தில் கொடுத்தார்கள். எனக்குத் தெரிந்தவரை யில் அவளும் பரவாயில்லை. அந்த இரண்டு சம்பந்தமும் எங்கள் மாமியாரின் ஏற்பாடு. நான் மட்டும் எங்கள் மாமனாருக்கு மரு மகன். எனது திருமணத்தின் போதே எங்கள் மாமியார் தனது கணவன் ஏற்பாடு செய்த சம்பந்தத்தைக் கேலி செய்து, மற்ற இரண்டையும், அடுத்த இரண்டு மருமகன்மாரையும், தானே தேடிக்கொண்டு வந்தார். மொத்தத்தில் எங்கள் மாமியாரே வெற்றி பெற்றார். நான் மெட்ரிக் முடித்துவிட்டு, தாலுகா ஆபீஸில் குமாஸ்தாவாகச் சேர்ந்திருந்தேன். 'படித்த பையன்; பெரிய குடும்பம்; எப்படியாவது குடும்பத்தை நடத்துவான்' என்பது எங்கள் மாமனார் கருத்து. எங்கள் மாமியாருக்கோ, பெண்கள் போய்ச் சேருமிடம் செல்வச் செழிப்புள்ளதாய் இருக்க வேண்டும் என்னும் எண்ணம் இருந்தது. மிகுதியாகப் பங்கு பிரிக்கவேண்டிய வீடு, பணம் காசு குறைவாக உள்ள வீடு—இவை யெல்லாம் கூடவே கூடாது என்பது அவள் முடிவு. அவளும்கூடச் செல்வக் குடும்பத்திலிருந்து வந்தவள்தான் என்றாலும், தன் தாய் வீட்டிலிருந்து அவளுக்கு ஒன்றும் கிடைக்கவில்லை; இவளாவது தன் வயிற்றில் பிறந்த பெண்களுக்குக் கொடுத்திருப்பாளோ என்னவோ தெரியாது. எங்களுக்கு மட்டும் இல்லை.''

''அப்பா கொடுத்தார்'' என்று சொல்லத் தொடங்கினாள் ஜலஜாட்சி. ''கொடுப்பது என்பது எப்போதும் உள்ளவர்களுக் குத்தான்; இல்லாதவர்களுக்கு யாரும் கொடுப்பதில்லை.''

''தாயாகட்டும், தந்தையாகட்டும், வயது வந்த பிறகு பெரிய வர்களுடைய சொத்தை நாம் விரும்பக்கூடாது. நம் காலின்மீதே நாம் நிற்கவேண்டும். நான் இந்த நோயால் படுக்கையில் விழா திருந்தால் இப்படி முணுமுணுக்கவேண்டியிருக்காது'' என்றார் மஞ்சையா.

அதன் பிறகு அவர் மீண்டும் தம்முடைய மாமனாரைப்பற்றி என்னிடம் கேட்கத் தொடங்கினார். நானும் சொன்னேன். இடையில் அவருடைய மாமனாரின் உயில் வடிவத்தில் அமைந்த

கடிதத்தைப்பற்றியும், பண விஷயத்தைப்பற்றியும் கேட்டார். பிறகு, ''எங்கள் சீதாராமனுக்கு இதெல்லாம் தெரியாதா?''

''தெரியும். அவர் அதன் பிறகு பம்பாய்க்கும் போயிருந்தார். தங்கள் மாமனாரின் பணம் 1,500 பாங்கியிலிருந்தது. அவருக்கே கிடைக்கும்; இதற்குள் கிடைத்தும் இருக்கலாம்.''

''நீங்கள் அவர் வீட்டுக்குப் போகவில்லையா?''

''இன்னும் இல்லை; ஒரு தடவை போகலாம் என்றிருக்கிறேன். ஊரைவிட்டுப் போவதற்குள் போனால் போதும்.''

''எங்கள் மைத்துனனை நீங்கள் நேராகப் பார்த்ததுண்டா?''

''என் வீட்டுக்கே அவர் ஒருதடவை வந்திருந்தார். எனக்கு ஒரு கடிதமும் எழுதியிருந்தார். கடிதம் எழுதாதவர்கள் நீங்கள் மட்டும்தான்.''

''தவறு என்னுடையது. உங்களுக்குக் கோபம் வந்ததோ என்னவோ?''

''அதெல்லாம் ஒன்றுமில்லை. அதுவுமின்றி, உங்கள் கையெழுத்து நோயாளியினுடையது அல்லது கிழவனுடையதைப்போன்றிருந்தது. அதனாலேயே நீங்கள் கடிதம் எழுதவில்லை என்று நினைத்துக் கொண்டேன்.''

நான் அவருக்கு, அவருடைய மாமனார் விட்டுச்சென்ற தொகையைப்பற்றித் தெரிவித்தாலும், இந்த மஞ்சையா அந்த விஷயத்தில் எந்தவிதமான ஆர்வமும் காட்டுவதாகத் தெரியவில்லை.

''எங்கள் மாமனார், முன்பு எல்லாவற்றையும் இழந்துவிட்டதாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள். அதை இழந்தது என்று நான் சொல்லமாட்டேன். எங்கள் மாமியாருக்கு அப்படித்தான் தோன்றியது, மாமனாருக்கு அப்படியல்ல. யார் அழுதாலும் கையில் இருப்பதை எடுத்துக் கொடுத்துவிடுவார். அவருடைய இயல்புக்கு ஏற்றபடியே அவர் தமது பணத்தை நல்ல வேலைகளுக்காகச் செலவிடுங்கள் என்று உங்களுக்குச் சொல்லியிருக்கிறார். எத்தனை பேருக்கு இந்த புத்தி வரும்!''

''நாமெல்லாம், ஏதாவது மிஞ்சினால் நம் குழந்தைகளுக்கு ஆகட்டும் என்று நினைக்கிறோம். அவருக்குத் தம் குழந்தைகளும், பிறரும் ஒரேவிதமாக காணப்பட்டார்களே ஒழிய, அந்தப் பணத்தின்மீது சீதாராமனைப்போல் ஆசைவைக்கவில்லை. அது எனக்கு மிகவும் மகிழ்ச்சி அளித்தது.''

அன்று பகலில், நான் எவ்வளவோ வேண்டாம் என்று சொல்லியும் கேளாமல், அவர் என் பக்கத்திலேயே உட்கார்ந்து சாப்பிட்

டார்; அவர் பக்கத்தில் யசவந்தன் உட்கார்ந்தான். இலைபோடும் போது, அவருடைய மற்ற இரண்டு சிறிய பிள்ளைகளும் பள்ளிக் கூடத்திலிருந்து வந்தார்கள். வந்து கால் கழுவிக்கொண்டு, தங்கள் அண்ணனைப்போலவே தங்கள் தட்டுகளை எடுத்து வரிசை யாக வைத்துக்கொண்டு உட்கார்ந்தார்கள். அந்த மூன்று குழந்தைகளும் தாயைப்போலவே இருந்தார்கள். எல்லோரும் ஏழ்மையின் சின்னமாகவே தோற்றமளித்தார்கள். வயிறு நிறைய உணவு இல்லாதபோது தோற்றம் வேறு எப்படித்தான் இருக்கும்? நாட்டில் நூற்றுக்குத் தொண்ணூறு இப்படிப்பட்ட வீடுகளே யல்லவா? சாப்பிட்டுக்கொண்டே நான், ''யசவந்தா, உன் தம்பிகள் பெயர் என்ன?'' என்று கேட்டேன். அவன், ''இவன் ஜெயந்தன், அவன் பகவந்தன்'' என்றான்.

''ஏ பகு, உன் கொள்ளுத் தாத்தாவின் பெயர் என்ன? உனக் குத் தெரியுமா?'' என்று கேட்டேன் நான். அவனுக்கு நான் புதியவனாக இருந்ததால் அவன் என் முகத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான்.

''யாரைச் சொன்னீர்கள்?'' என்றார் மஞ்சையா.

''உங்கள் மாமனாரின் தந்தை; அவரும் பகவந்தையாதான்.''

''ஓ அப்படியா? ஏ, பகு, உன் கொள்ளுத் தாத்தாவின் பெய ரும் உன் பெயர்தான்'' என்றார்.

''இவர் யார் அப்பா! அவருடன் நீயே வந்து சாப்பிட உட்கார்ந்துவிட்டாய்!''

''இவர் நீண்ட தூரத்திலிருந்து வந்தவர். நாம் செய்த புண்ணி யத்தால் வந்திருக்கிறார். தினமும் வரக்கூடியவரல்ல என்பதால், எழுந்து இதுவரை வந்தேன்.''

''எனக்குத் தெரியாது.''

''எதற்கென்று சொல்லட்டுமா?''

''சொல்லுங்கள்.''

''சொல்லட்டுமா, ஹொன்னகத்தேயில் மஞ்சையா என்று ஒருவர் இருக்கிறார்.''

''அவரைப் பார்க்க.''

''இல்லை. அவருடைய மகன் . . . ''

''யசவந்தனை . . . ''

''இல்லை . . . ''

''பிறகு?''

''அனுமந்தனே! ஆனால் நான் இங்கே வருவதற்குள் அனுமந்தன் போய் பகவந்தன் ஆகிவிட்டிருந்தான்!''

அப்பொழுது எல்லாக் குழந்தைகளும் சிரித்தார்கள், சிறியவன் மட்டும், ''போங்கள், உங்கள் விளையாட்டுப் போதும். நீங்கள் அப்பாவைப் பார்ப்பதற்குத்தான் வந்திருக்கிறீர்கள்'' என்றான்.

''இல்லை, பகவந்தனை எங்கள் ஊருக்கு அழைத்துக்கொண்டு போவதற்காக.''

''நான் வரமாட்டேன்.''

''நான் உன்னை விட்டுப் போகமாட்டேன். நான் உங்கள் அப்பாவிடம் உன்னைக் கேட்டேன். அவரும் 'கொடுக்கிறேன்' என்று சொல்லிவிட்டார். அவருக்கு யசு வேண்டுமாம். உங்கள் அம்மாவுக்கு ஜயந்தன் வேண்டுமாம். சின்ன பகவந்தனையாவது கொடுங்கள் என்றேன். 'கொடுக்கிறேன்' என்றார்.''

பகவந்தனுக்குப் பத்து வயதாயிற்று. என் பேச்சைக் கேட்டு முகம்வாடி, கண்ணீர் வந்துவிடும்போலிருந்தது. பரிமாறுவதற்காக வந்து நின்று இந்தப் பேச்சைக் கேட்ட அவன் தாய், மகனின் வருத்தத்தைக் கண்டு, ''உனக்கு இவ்வளவுகூடத் தெரியாதா, பகு? அவர் விளையாட்டுக்குத்தானே சொல்லுகிறார்? நான் என் பகுவை வேண்டாம் என்று சொல்வேனா?'' என்று சமாதானம் கூறினாள்.

நான் வயிறு வெடிக்கச் சிரித்த பிறகே பகவந்தனுக்கு அமைதி ஏற்பட்டது. சாப்பாட்டுக்குப் பிறகு அந்த மூன்று குழந்தைகளும் பள்ளிக்கூடத்துக்கு மட்டம் போட்டுவிட்டு என்னைச் சூழ்ந்துகொண்டார்கள். ''டே, பையன்களா, அவர் கொஞ்ச நேரம் தூங்கட்டும்'' என்று சொன்னால், ''அம்மா, நீ சும்மா இரு. அண்ணனுக்கு அவரைப்பற்றி எல்லாம் தெரியுமாம். அவர் கதை எழுதுகிறவராம. அவர் எங்களுக்கு, ஒரு கதை சொல்லியே ஆகவேண்டும்'' என்று சொன்னான் பகவந்தன். உடனே நான், ''ஒரு ஊரில் ஓர் அனுமந்தன் இருந்தான்'' என்று தொடங்கினேன்.''

''இருக்கட்டும், அதற்காக நான் ஒன்றும் பயந்துவிடமாட்டேன்'' என்றான் அந்தப் பையன்.

நான் கதைக்குப் பதிலாக அவர்களுக்குக் குரங்குகளின் உண்மை வாழ்க்கையையே கதையாகச் சொன்னேன். குரங்குக் குட்டிபோலவே பகவந்தன் அதை ஆர்வத்தோடு கேட்டு, ''இனி மேல் வேண்டுமானால் நீங்கள் படுத்துக்கொள்ளுங்கள்'' என்று

எனக்குத் தூங்குவதற்கு அனுமதி கொடுத்தான். நானும் அந்த வேலையையே செய்தேன்.

ஒரு நல்ல தூக்கம்போட்ட பிறகு, முகத்தைக் கழுவிக்கொண்டு வருவதற்குள் டீ தயாராகி வந்ததைக் கண்டு, குழந்தைகளின் தாயிடம், ''டீ இல்லை என்று சொன்னீர்கள். எனக்காகவே இதை வரவழைத்தீர்கள் அல்லவா? எனக்கு வேண்டும் என்னும் கட்டாயம் இல்லை. ஒரு வேளைக்கு டீயோ, காப்பியோ இல்லா விட்டால் என்ன?'' என்று சொன்னேன்.

''பழக்கம் ஆகிவிட்டவர்களுக்கு அது இல்லாவிட்டால் தலைவலி வருமாமே!''

''அப்போதே நான் சபாவந்தர் வீட்டில் டீ குடித்துவிட் டேன்.''

''இருக்கட்டும்; போட்டுவிட்டேன்.''

''குடிப்பதற்கு எனக்கொன்றும் தடையில்லை'' என்று சொல்லி அதைக் குடித்தேன். பிறகு படுத்துக்கொண்டிருந்த மஞ்சைய னிடம் பேசப்போனேன். அவர் மீண்டும் ஒருமுறை படுக்கையி லேயே எழுந்து உட்கார்ந்தார்.

''சேர்ந்தாற்போல் அவ்வளவு நேரம் உட்கார்ந்தால் முதுகு வலி வருமே'' என்றேன்.

''வராது!''

''அப்படியே நீங்கள் ஒவ்வொரு நாளும் வலி வராது; இந்த நோய் போய்விடும் என்று நினைத்துக்கொள்ளவேண்டும். மனத் துக்கும் அதையே சொல்லவேண்டும். பெரும்பாலும் மனத்தின் வலியே உடலில் நோயைத் தோற்றுவிக்கிறது என்று சொல்லு கிறார்கள் டாக்டர்கள்!''

''தொடக்கத்தில் எனக்கும் அப்படித்தான் ஆயிற்று. குடும்பத் தில் பிரிவினை ஏற்பட்டு, தாங்கமுடியாத கடன் சுமை வந்ததைக் கண்டு என் கை, கால்கள் விழுந்துவிட்டதைப்போல இருந்தது; அப்படி விழுந்தது விழுந்தேவிட்டது!''

''ஐயோ, பாவம்'' என்றிருந்தது எனக்கு. அவருடைய உறவி னர்களோ, மனைவியோ, தைரியம் கூறியிருந்தால் ஒருவேளை தேறி யிருப்பாரோ என்னவோ. அதற்கு மாறாக, மாமனார் காட்டிய பரிவு, செய்த உதவி ஆகியவை ஒரு வகையில் அவருடைய செய லற்ற தன்மையைச் சுட்டிக்காட்டியதைப் போலவும் இருந் திருக்கலாம்!

ஏதோ சிறிது கேட்டுவிட்டு, உடனே நான் நோய் நீங்கும் வழிகளைச் சொல்லத் தொடங்கலாமா? ஆகவே உபாயமாக, ''நான் ஊருக்குப் போனதும் ஒரு நல்ல மருந்தை அனுப்பிவைக்கிறேன். எப்படிப்பட்ட வாதமானாலும் அதனால் குணமேற்படும் என்கிறார்கள். தினமும் அதை கை, கால்களில் தடவிக் கொண்டு, மெல்லப் பிடித்துவிடச் செய்யுங்கள். உங்களுக்குப் பிடித்த தெய்வத்தை நினைத்துக்கொண்டு, 'இதோ, குணமாகி விட்டது' என்று சொல்லிக்கொண்டே வாருங்கள். நீங்கள் வீமனைப்போல் ஆகாவிட்டாலும், வீட்டிலேயே நடந்து திரியுமளவுக்குப் பலம் வந்தே தீரும்.''

''உண்மையாகவா?''

''பல பேருக்கு அப்படிக் குணமாகியிருக்கிறது என்பதால்தான் உங்களுக்குச் சொன்னேன். நான் பண்டிதனுமல்ல, வைத்தியனுமல்ல.''

''எனக்கு உங்கள் பேச்சே போதும்.''

''ஆகட்டும்.''

அதன் பிறகு நான் வேறு ஏதேதோ ஊர்க் கதைகளைப் பேசி முடித்தேன். மனைவியும், குழந்தைகளும் அங்கே இல்லாததைக் கண்டு மெதுவாக, ''கோடகணி எங்கே இருக்கிறது? உங்களுக்கு மாதந்தோறும் 25 ரூபாய் அனுப்புவதைப்போல அங்கேயும் ஒருவனுக்கு ரூபாய் அனுப்புமாறு உங்கள் மாமனார் தெரிவித்திருந்தார்'' என்றேன்.

''கோடகணி . . . இரண்டு, மூன்று இருக்கின்றன. கோடகணியில் யார்?''

''தாரேஸ்வரத்துச் சீனன்.''

அதைக் கேட்டதும் அவர் மெல்ல நகைத்தார் . . . பிறகு இந்தப் புறமும் அந்தப் புறமும் திரும்பிப் பார்த்தார். ''குழந்தைகளும், அவளும் இல்லை அல்லவா?'' என்று கேட்டார்.

''இல்லை'' என்றேன்.

''எங்கள் மாமனார் மனம் விசித்திரமானது . . . தவறு ஒன்றுமில்லை; சீனன் என்பது அவருடைய மகன்.''

''மகன் என்றால் . . . ?''

''எனக்கு அதிகமாகத் தெரியாது; என் மாமனார் வைப்பாகக் கொண்டிருந்தவளின் மகன்; அதாவது, என் மாமனாரின் கைபிடித்த மனைவி என்று ஒருத்தி இருந்தது உண்மையென்றாலும், அவர் அவளால் எந்தச் சுகத்தையும் பெறவில்லை. அதனால் அவர்

தாரேஸ்வரத்துச் சரசி என்னும் கலைவல்லியை வைப்பாக ஏற்றுக் கொண்டாராம். அவளுக்கு ஒன்று அல்லது இரண்டு குழந்தைகள் இருந்ததாகக் கேள்வி. இந்தச் சீனன் என்பவன் தபலா—கிபலா நன்றாக வாசிப்பானும். எனக்குத் திருமணம் ஆகும்போதே ஊரில் இதைப்பற்றிப் பேசிக்கொண்டார்கள். இதனால் எங்கள் மாமா—மாமியாரின் வாழ்க்கை முறிந்ததோ அல்லது அந்த வாழ்க்கை முறிந்ததால் இது ஏற்பட்டதோ, யாருக்குத் தெரியும்? மேலும் அது ஒரு கௌரவம் என்னும் எண்ணம் பழங்காலத்தவர்களிடம் இருந்ததே தவிர . . .''

''அப்படியென்றால் . . . ?''

''நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ தெரியவில்லை. முன்காலத்தில் அப்படித்தான் செய்து வந்தார்கள்; விடலைகளைப்போல் ஒரு நாளுக்கொரு வீடாக நுழைந்து வரவில்லை. அதிலேயும் ஒரு முறை, ஓர் ஒழுங்கு இருந்தது. அதுமட்டுமல்ல; அவர்களைச் சிலர் தமது மனைவிமார்களுக்குச் சரியாகவே நடத்திவந்தது முண்டு. அவர்களும்கூட, கைபிடித்த மனைவியைவிட அதிகமாக அன்பு செலுத்திவந்தார்கள். நான் கேள்விப்பட்டவற்றிலிருந்து, இந்தத் தாரேஸ்வரத்துச் சரசியும் அப்படி நடந்துகொண்டவள் தான் என்று தெரிகிறது. இந்தத் தொடர்பால்தான் என் மாமனார் தமது புத்திகெட்டு நடந்துகொண்டதாகவும் நான் கேள்விப்பட்டேன்! புத்திகெட்டு என்றால், பித்துப் பிடித்து என்று பொருளல்ல; மகன் எதிரிலும், குழந்தைகள் எதிரிலும், வந்த உறவினர்களின் முன்னிலையிலும் எங்கள் மாமியார், அவள் விஷயத்தை வைத்தே மாமனாரைக் கேலி செய்வாராம். அப்போது சீதாராமன் வயதுக்கு வந்து, வியாபார நுணுக்கங்களைக் கற்கத் தொடங்கியிருந்தான். தனது மகன் இருந்த துணிச்சலில் மாமியார் நேராகப் போராடத் தொடங்கியிருந்தாள். மாமனார் இந்த மாமியாருக்குப் பொன்னும் நகையும் குறைவாகக் கொடுத்திருக்கிறார் என்கிறீர்களா?''

''யாருக்கு? தாரேஸ்வரத்து . . . ''

''இல்லை, இல்லை. அவளுக்கு என்ன கொடுத்தாரோ தெரியாது; கொடுத்திருந்தாலும் தாம் உழைத்துச் சேர்த்த பணத்தைத்தான் கொடுத்திருப்பார். நான் குறிப்பிட்டது என் மாமியாரைப்பற்றி. என் மாமியாருக்கு அவர் எந்த வகையிலும் குறை வைக்கவில்லை. அவர் கொடுத்ததைப்போல இரண்டு மடங்கு இவளே எடுத்துக்கொண்டதுமுண்டு. கோபம் பொங்கி

யிருந்தால், என் மாமனார் இவர்கள் யாருக்குமே ஒன்றுமில்லாமல் செய்திருக்கலாம்; எல்லாமே அவர் தேடிய சொத்துதானே! இவளுடைய பிறந்த வீட்டார், தொடக்கத்தில், அதாவது, முதல் வீட்டிலிருந்து வந்தபோது மாமனாருக்குக் கடன் ஏதாவது கொடுத்திருந்தால், வட்டியோடு சேர்த்துக் கொடுத்துத் தீர்த்துவிட்டார். முதலில் அவருக்கு எப்படித் தோல்வியும் நஷ்டமும் ஏற்பட்டனவோ அதன் பிறகு அப்படியே பாக்கு வியாபாரத்தில் இலாபமும் கிடைத்தது. அந்த வியாபாரம் மிகவும் நுணுக்கமானது; வெற்றியும் அப்படித்தான்; தோல்வியும் அப்படித்தான். ஆனால், அவர் விலையிலும், கொடுப்பதிலும், கொள்வதிலும் ஒரு நிர்ணயம் வைத்திருந்தவர். அந்த ஒரு வியாபாரத்தில் இலட்சக் கணக்கில் அல்லவா பணம் சேர்த்தார்!''

''அவர் ஊரைவிட்டுப் போகும்போது இவர்களுக்கு எதைக் குறைவாக வைத்துவிட்டுப் போனார்? அதாவது, அவர் தமது சொந்தச் செலவுக்காக அதிகமாகக் கொண்டுபோகவில்லை என்று சொல்லிக்கொள்கிறார்கள்.''

அதற்குள் அவருடைய கடைசி மகன் யசவந்தன் அங்கே வந்ததால், எங்கள் பேச்சு தடைபட்டது. கோடகனரி எங்கே இருக்கிறது என்பதைக் குமட்டியிலேயே கேட்டுத் தெரிந்துகொள்ளலாம் என்றெண்ணிச் சும்மாயிருந்தேன். அவரிடமிருந்து விடை பெற்று, வெளியே வந்தேன். வீட்டின் தலைவியுடன் இரண்டொரு பேச்சு பேசிவிட்டுப் புறப்பட்டேன். அவர்களுக்கு அனுப்புவதாகச் சொன்ன மருந்தைப்பற்றிக் குறிப்பிட்டேன். பிறகு, ''அம்மா! இந்தக் குழந்தைகளின் படிப்பு கெடாதபடி பார்த்துக் கொள்ளுங்கள்; அவர்களால் உங்களுக்கு உண்மையிலேயே நல்ல எதிர்காலம் இருக்கிறது. அவர்களுடைய படிப்புக்காக என்ன செலவாகிறதோ, அதை உங்கள் அப்பா விட்டுச் சென்ற பணத்திலிருந்து கொடுக்கிறேன் . . . அவர்களுக்கு ஆரோக்கியமும் போதாது. தினமும் சிறிது பாலும், மோரும் கொடுக்கவேண்டும். எதைப்பற்றியும் கவலைப்படவேண்டாம். உங்கள் யசவந்தனைக் கொண்டு அவ்வப்போது எனக்குக் கடிதம் எழுதச் செய்யுங்கள். நான் உங்களுடைய அண்ணன் என்று கருதுங்கள்'' என்று சொல்லிப் புறப்பட்டேன். சிறிது தூரம் வரை அந்தத் தாயும் குழந்தைகளும் என்னை வழியனுப்ப வந்தார்கள். யசவந்தன், என்னை நகரம் வரை கொண்டுவந்து விட்டுவிட்டுப் போனான்.

பிறகு, நான் குமாட்டியிலிருந்து புறப்படுவதற்கு முன்பு, யசவந்தன் நானிருந்த இடத்திற்கே வந்து, என்னைத் தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய்த் தன் தந்தையை மீண்டும் சந்திக்கச் செய்தான்.

## பத்தாம் அத்தியாயம்

"ஓகோ, நீங்கள் வந்தது அதற்காகத்தானு? நல்ல வேலை செய்தீர்கள். ஹொன்னகத்தே மஞ்சையா எல்லாவற்றையும் இழந்து நிற்கிறவன்; மாமனுரின் பணத்தில் கொஞ்சம் யாருக்காவது கிடைக்கவேண்டுமானுல் அது அவனுக்குத்தான் கிடைக்க வேண்டும். ஆனுல், அவன் பணத்தாசையே இல்லாதவன். அவனுடைய போதாத காலம், பாருங்கள், மூன்று ஆண் குழந்தைகள் இருக்கிருர்கள், அவன் படுத்த படுக்கையாகக் கிடக்கிருன்."

"அவருடைய மற்ற இரண்டு பெண்கள்—ஒருத்தி யாணத்தில் வாழ்க்கைப்பட்டவள்; மற்ருெருத்தி கெக்காரு வீட்டில் நுழைந்தவள்—அவர்களுடைய நிலைமை எப்படி இருக்கிறது?"

"அவர்களா? அவர்கள் இந்தப் பக்கத்துக் குடும்பங்களிலேயே நன்ருகத் தேர்ந்தவர்கள். அவர்களை நீங்கள் பார்க்கவேண்டியதேயில்லை... இன்னும் நீங்கள் சீதாராமனைப் பார்க்கவில்லை அல்லவா? அவன் வீடு இங்கே பக்கத்தில்தான் இருக்கிறது; நூறு கஜ தூரம் கூட இல்லை."

"உங்களுக்கும் அவருக்கும் எப்படி?"

"மேலாகப் பார்த்தால் நட்புத்தான்; ஆனுல் போக்குவரவோ, பழகுவதோ குறைவு. அவனுடைய பகட்டும், போக்கும் எனக்குப் பிடிக்கவில்லை. மேலும் அவன் நடவடிக்கைகளும் சரியாக இல்லை. உலகத்தில் நல்லவர்கள் இருக்கிருர்கள் என்ற நினைப்பே எனக்கு இல்லை."

இதைக் கேட்டு நான் சிரித்தேன்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டார் சபாவந்தர்.

''உலகத்தில் யாரும் நல்லவர்களில்லை என்று சொன்னீர் களல்லவா, அதற்காக. அத்தகைய அனுபவம் ஒன்று எனக்கேற் பட்டது.''

''அப்படியானால் அவனை நீங்கள் ஏற்கெனவே பார்த்து விட்டீர்கள்?''

''அவரே எங்கள் வீட்டைத் தேடி வந்தார்'' என்று அந்தக் கதையைச் சுருக்கமாகக் கூறி, ''இந்த ஊருக்கு வந்திருப்பதால் அவரைக் காணவேண்டும். பார்க்கிறேன் என்று சொன்ன பிறகு பார்க்கவே வேண்டுமல்லவா? ஆனால் அவர் என்னைப் பார்த்த பிறகே வக்கீல் நோட்டீஸ் கொடுத்தார்.''

''அதற்குள் அவ்வளவு நடந்துவிட்டதா? அப்படியானால் ஏன் அங்கே போகவேண்டும்? வேறு வேலை இல்லாமலா?''

''எனக்கென்ன, போனால்! என்ன இருந்தாலும், என் நண்ப ருடைய குடும்பம் அல்லவா? அவருடைய தாயைப் பார்த்துவிட்டு வரலாம்.''

''உங்களுக்கு வேறு வேலையில்லை. அவளுக்கு யசவந்த ஹெக்கடே போனதில் வருத்தமா என்ன? அவரை ஒட்டியவர் களே, அவளும், இந்தச் சீதாராமனுந்தான்.''

''என்ன மனவருத்தமோ, என்னவோ? குடும்பம் என்றால் ஏதாவது கசப்பு இருக்கத்தான் செய்யும்.''

''யாருக்குள்ளே? கணவன்—மனைவி, தந்தை—மக்களுக்குள் ளேயா?''

''ஏன் இருக்கக்கூடாது? குழந்தைகள் வயதுவந்த பிறகு, நூற்றுக்கணக்கான வீடுகளில் அப்படியாவதுண்டு.''

''இங்கே அப்படி ஆவதற்கு முன்னோர்கள் சொத்து ஒன்று மில்லை. எல்லாவற்றையும் அவர் குமட்டிக்கு வந்த பிறகு, கடன்களையெல்லாம் கைகழுவி விட்டு வந்த பிறகு, உழைத்துச் சம்பாதித்தார்.''

''அவரும் கெட்டிக்காரர்தான். என்னைவிட அவர் பத்தாண்டு கள் மூத்தவர். அவர் இங்கே வரும்பொழுது வெறுங்கையுடன் மனைவியின் வீட்டுக்கு வந்தார். ஒரு முதலாளியிடம் பணியாள ராகச் சேர்ந்தார். நான்காண்டுகள் கண்ணை மூடிக்கொண்டு உழைத்தார். வியாபாரத்தின் நுணுக்கங்களையெல்லாம் தெரிந்து கொண்ட பிறகு மாமனாரிடமிருந்து 4,5 ஆயிரம் கடன் வாங்கி யிருக்கவேண்டும்; சொந்த வியாபாரம் தொடங்கினார்; அந்தக் கடனை மூன்றே ஆண்டுகளில் தீர்த்துவிட்டார் என்று கேள்விப்

பட்டேன். முக்கியமாக, அவருடைய அதிருஷ்டம் நல்லதாக இருந்ததால், தொடங்கிய நாளிலிருந்தே வியாபாரம் நன்ருக நடந்தது. எந்தவிதமான வம்புக்கும் போகாமல், தானுண்டு, தன் வியாபாரமுண்டு என்று இருந்தார். செல்வம் கூடிவந்தது. வந்தாலும் ஒரு காசையாவது பாழாக்கியவரல்ல. முதலில் அவர் எப்படியாவது இருந்திருக்கட்டும்; குமட்டிக்கு வந்து ஒரு வழிக்கு வந்த பிறகு தனது மனைவி, மக்களுக்கு எந்தவிதக் குறை வும் வைக்கவில்லை. சீதாராமனைப் படிக்கவைத்தார்; மூன்று பெண்களுக்கும் திருமணம் செய்து கொடுத்தார்...

''பணத்தை அவர் வீணுக்கியதேயில்லை. கிராமத்தில் இருந்த போது மிகவும் செலவழித்தாராம். இங்கே அப்படிச் செய்ததாக எனக்குத் தோன்றவில்லை. அவர் கையில் நாலு காசு சேர்ந்ததும், கடன் கேட்பதற்காகப் பலர் அவரை அணுகினர்கள்; ஆனால் அவர் யாரையுமே சேர்த்துக்கொள்ளவில்லை. ஒரு தடவை கை சுட்டுக்கொண்டவால்லவா?''

''அவருக்கு வேறு வகையான சிநேகம் இருந்தது என்று கேள்விப்பட்டேன்!''

சபாவந்தர் சிரித்தார். ''அது என்ன பெரிய சமாசாரம்! நம்மில் பல பெரிய மனிதர்களுக்கு அந்தப் பழக்கம் இருந்தது. அவருக்கு ஒருத்தி இருந்தது உண்மை. அவர், அவர்களுக்கு வீடு கட்டிக்கொடுத்து, நகை பூட்டி அழகு செய்தவரல்ல. அதிலும் ஓர் அளவு இருந்தது. கெட்ட குணம் என்று சொல்வதானல் அது ஒன்று அவரிடம் இருந்தது; உண்மை. இல்லையென்று நான் சொல்லவில்லை.''

''அதனுலேயே வீட்டில் தொல்லை ஏற்பட்டது என்கிறுர் களோ?''

''அப்படியிருக்கவே முடியாது; உண்மை அதற்கு நேர் மாருன தாக இருக்கலாம்.''

''அப்படியென்ருல்?''

''அதை நான் பேசக்கூடாது...நீங்கள் அங்கே போகிறீர் களல்லவா? அதைப் புண்ணியவதி எப்படிப்பட்டவள் என்பது உங்களுக்கு அவளைக் கண்டதுமே தெரியவரும்...''

''தனியாகப் போவதற்கு எனக்கு...''

''அதற்கென்ன? அதுவரை நான் உடன்வருகிறேன்.''

இந்தத் துணிவைச் சபாவந்தர் எனக்குக் கொடுத்ததால், மறு நாள் பகலுணவை முடித்து, தூங்கி எழுந்த பிறகு, நானும்

அவரும் சேர்ந்தே சீதாராம ஹெக்கடேயின் கடைக்குள் போனேம். சபாவந்தரும் நானும் வரும் செய்தி முன்னதாகவே தெரிந்ததாலோ என்னவோ, சீதாராம ஹெக்கடே முன் வாயிலில் வந்து நின்று, மல்லிகைப் பூவைப்போன்ற சிரிப்புடன் எங்களை வரவேற்று, கடைக்கு அழைத்துச் சென்ருர். இரண்டு சாய்வு நாற்காலிகளில் நாங்கள் உட்கார்ந்தோம். வெற்றிலைப் பாக்கு வந்தது.

''டீ போடச் சொல்லட்டுமா?'' என்று கேட்டார்.

நான், ''இப்போதுதான் ஆயிற்று'' என்றேன். ''வெளியூர்க் காரர் அல்லவா, போடச்சொல்'' என்ருர் சபாவந்தர். அதை உள்ளே போய்த் தெரிவித்துவிட்டு வந்தார் அவர். பிறகு அவர் சபாவந்தருடன் பாக்கின் விலை, அதன் வியாபாரம், விளைச்சல் முதலியவைபற்றி நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தார். எனக்குப் பாக்கைத் தின்னத் தெரியுமே தவிர அதன் விலையைப்பற்றி என்ன தெரியும்? நான் மிகவும் சலிப்புடன் உட்கார்ந்திருந்தேன். அன்ெருரு நாள், எங்கள் வீட்டுக்குச் சீதாராம ஹெக்கடே வந்தபோது, ஆசிரியர் ஒருவருடன் அரட்டையடிப்பதில் நான் மூழ்கியிருந்ததைப்போலவே, அவர் இப்போது கடைக்கு வந்தவர்களுடனும் சபாவந்தருடனும் பேச்சிலேயே பொழுதைப் போக்கிஞர். எனக்கும் அதுவே தேவையாயிருந்தது. பேச்சில் ஏற்படும் விரசத்தைவிட, மௌனத்துடன் ஆடும் சரசம் மேலானதல்லவா?

உள்ளேயிருந்து சிறிய பையன் ஒருவன் வந்து, ''சிற்றுண்டி தயார்; உள்ளே வரவேண்டுமாம்'' என்று தெரிவித்தான். அப்போதுதான் எனக்கு வெட்கம் தோன்றியது. அந்த அதிருஷ்டம் கெட்ட பெண்மணியை முதலில் [illegible] எனக்கு. அது நல்லதொரு சந்திப்பு என்னும் எண்ணம் தோன்றவில்லை.

உள்ளே போனேம். அங்கே மூன்று இலைகள் போட்டிருந்தன! இரண்டு எங்களுக்கு; ஒன்று வீட்டு எஜமானிக்கு. நாங்கள் உட்கார்ந்தோம்; தட்டு நிறையச் சிற்றுண்டி; இனிப்பு, காரம், பூரி, காப்பி!

''இவ்வளவு ஏன் செய்யச் சொன்னீர்கள்?'' என்று கேட்டேன்.

''நாங்கள் இப்பொழுதுதான் வீட்டில் சிற்றுண்டி முடித்துக் கொண்டு வந்தோம்'' என்ருர் சபாவந்தர்.

''அப்படியானல் சொல்லியனுப்பியது ஏன்?'' என்று அவர் கேட்டார்.

''நீ அந்த நேரத்துக்கு இல்லாமல் போகக்கூடாதே என்பதற்காகத்தான்.''

''நான் இந்தச் சீசனில் கடையைவிட்டு எங்கே போவேனும்!... எடுத்துக்கொள்ளுங்கள்...பூரியும் இனிப்பும் உடம்புக்கு நல்லது ...'' என்று சீதாராம ஹெக்கடே எனக்குச் சொல்லிக்கொண்டிருந்தபோது, கமலம்மாள் அங்கே வந்தாள்.

''இவரே என் தாயார்'' என்று சீதாராம ஹெக்கடே சொன்னார். நான் உட்கார்ந்தபடியே வணக்கம் செய்தேன்.

நன்றாக வளர்ந்த உடம்பு; சிவந்த, தளதளப்பான உடல்; மகனைப்போலவே மிடுக்கான நடை; குங்குமம் இல்லை என்ற குறை இராவிட்டால், பழங்காலத்துச் சிறு கிராமத்தின் இராணி என்றே சொல்லலாம்! காதில் இன்னும் வைரக் கம்மல் ஒளி வீசியது; இடையில் பட்டுப் புடவை. மிகுந்த தன்னம்பிக்கையுள்ள பெண்மணியாகத் தோற்றமளித்தாள்.

நான் சிற்றுண்டியை முடிப்பதற்குள், சீதாராம ஹெக்கடே சபாவந்தரை அழைத்துக்கொண்டு, ''நீங்கள் சிறிது ஓய்வாகவே பேசிக்கொண்டிருங்கள். நாங்கள் வெளியே இருக்கிறோம்,'' என்று சொல்லிப் போய்விட்டார்.

''பலகாரம் மெதுவாகவே ஆகட்டும்'' என்றாள் அந்தத் தாய். நான் ஒன்றும் பேசவில்லை.

''எங்கள் பையன் எல்லாம் சொன்னான்; நீங்கள் எங்கள் வீட்டுக்காரருக்கு மிகவும் வேண்டியவராமே!''

''மிகவும் என்ன? அவரை அறிந்தவன், ஆறு ஆண்டுகளாக.''

''என்றாலும் அப்படியெல்லாம் ஒருவரிடம் நம்பிக்கை வேண்டுமானால் தன் மனைவியையும், வயிற்றில் பிறந்த பிள்ளையையும் நம்பாத புண்ணியவான்...''

''அது, ஓர் இயல்பு; வேளை. அவர் என்னிடம் நம்பிக்கை வைத்திருந்தது உண்மை. எனக்கே அது ஏன் என்பது தெரியாது!''

''வேண்டுமல்லவா, அவருடைய சொத்துக்கு ஒரு வாரிசு! தன்னுடையவர்களுக்கு அது கிடைக்கக்கூடாது என்னும் பிடிவாதம் இருக்கும்போது—கடைசிவரை அந்த வெறுப்பைச் சாதிக்கவேண்டாமா?''

''அம்மா, அவருடைய வாரிசாக நான் எப்படி ஆகமுடியும்? அவர் பம்பாயிலிருந்தபோது யாருடனும் மிகுதியாகத் தொடர்பு வைத்துக்கொண்டவரல்ல. பிறகு என்னுடைய அறிமுகம் ஏற்

பட்டது, அதுவும் ரயிலில்; நானும் அவரும் பூனுவிலிருந்து பம்பாய் போய்க்கொண்டிருந்தபோது—நான் கன்னடம் பேசு பவன் என்று அவருக்கு தெரிந்தது. அதனால், கடைசியில் அவருக்கு நோய் மிகுந்தபோது, என் பெயரை ஒரு சீட்டில் எழுதி அடுத்த வீட்டுக்காரரிடம், 'இந்த முகவரிக்குத் தந்தி கொடுங் கள்' என்று சொன்னாராம். அடுத்த வீட்டுக்காரர் அப்படியே எனக்குத் தந்தியைக் கொடுத்தார். அப்பொழுது நான் போக வேண்டி வந்தது; போனேன்.''

''அதெல்லாம் சீதாராமன் சொன்னான். எப்படியும் கை பிடித்தவள் மீதிருந்த கோபத்தை அவர் சாதித்தே விட்டார்... உண்மையில் அவர் உங்களிடம் பணத்தை அனுப்பியது சரி என்று சொல்லுவீர்களா?''

''எனக்கும் அப்படியொரு சந்தேகம் உண்டு. அதனால் நான் இரண்டு தொல்லைகளுக்கு உள்ளாகிறேன். அதனாலேயே உங்கள் மகனுக்கு என்மீது சந்தேகம் வந்தது. நான் அவருடைய கடிதத் தைக் காட்டிய பிறகும், உங்கள் மகன் எனக்கு ரிஜிஸ்டர் நோட்டீஸ் அனுப்பிவைத்தார்...''

''அவர் இப்படியெல்லாம் செய்வதற்குப் பதிலாக அந்தத் தாரேஸ்வரத்துச் சரசியின்மீது உயில் எழுதி வைத்திருக்கலாம். அல்லது அவருடைய பட்டத்து இளவரசன் இருக்கிறானல்லவா, சீனன், அவனுடைய பெயருக்காவது அதையெல்லாம் அனுப்பி, தொடங்கிய தொடர்பை முடித்து வைத்திருக்கலாம்.''

''அதெல்லாம் எனக்கேன், அம்மா! என்னிடம் சொல்ல வேண்டியது ஏதாவது இருக்கிறதா?''

''உங்களுக்கு வேண்டாவிட்டாலும் எங்களுக்குச் சொல்ல வேண்டும் என்றிருக்கிறது! நாங்கள் அதனால் பட்ட கஷ்டம், அவமானம் எல்லாமே இருக்கின்றன அல்லவா?''

''இறந்தவரைப்பற்றி ஏன் அவ்வளவு நினைத்து வருந்துகிறீர் கள்? என்ன கசப்பு இருந்தாலும் நாம் அதை மரணத்துடன் மறந்துவிடுவதுதான் நியாயம்.''

''இப்போது நீங்கள் எங்களுக்கு நியாயத்தைச் சொல்வதற்கு வந்ததைப் போலிருக்கிறது. அவருக்கு, அவர் இருந்த காலத் தில், அவருடைய நண்பர்கள் என்பவர்கள் சொல்லவேண்டி யிருந்தது, அந்த நியாயத்தை.''

''அவர் இருந்த காலத்தில்...அவர் தம்முடைய குடும்பத்தைச் சேர்ந்த யாரைப்பற்றியும் ஒரு கசப்பான வார்த்தையும் சொன்ன

வரல்ல, கெட்டதைச் சொன்னவருமல்ல, நல்லதைச் சொன்ன வருமல்ல.''

''சொல்வதற்காவது வாய் வரவேண்டாமா?''

நான் ஒன்றும் சொல்லவில்லை. அவளும் இனிப் பேசமாட்டாள் என்று நினைத்தேன். ஆனால், ''நீங்கள் முதல் வீட்டு ஒரு முண்டைக்காகக் கோவில் ஒன்றைக் கட்டுவித்தீர்களாமே!'' என்று நஞ்சாக இறைந்தாள்.

''அம்மா, உங்கள் மனம் அமைதியாக இல்லை என்பதை நான் அறிவேன். ஆனால் வேறு யார் விஷயத்திலும் அப்படிச் சொல்லக் கூடாது.''

''சொல்லக்கூடாது? நான் கல்யாணம் செய்துகொண்டவள் இருக்கும்பொழுதே, என் கணவர் மீது அந்த முண்டை அதிகாரம் செலுத்தினாள். நீங்கள் அவளைத் தேடிப்பிடித்து ஒரு கோவிலைக் கட்டுவித்தீர்கள் அல்லவா?''

''நான் எள்ளளவுகூட அதைக் கட்டவில்லை. அதெல்லாம் அவருடைய குணமும், அவருடைய கடவுளின் எண்ணமும் சேர்ந்து தற்செயலாக என் மூலமாக அதை நிறைவேற்றிக் கொண்டன.''

''ஆகட்டும்.''

எனக்கு அந்த அம்மாளுடன் பேசவேண்டும் என்று இருந்த ஆர்வம் அணைந்தே போய்விட்டது. அதுமட்டுமல்ல; அந்த நேரத்தில், பிள்ளையார் கோவிலைக் கட்டுவிப்பதற்கு எனக்கு என்ன அதிகாரமிருந்தது என்று தோன்றுமலும் இல்லை. மெதுவாக எழுந்தேன். அதைக் கண்டு, ''பொழுதாகிவிட்டது என்று தெரிகிறது. ஆகட்டும் போய்வாருங்கள். இந்த ஊருக்கு வந்தால் இங்கே வாருங்கள்'' என்றாள் அந்த வீட்டு எஜமானி.

''ஆகட்டுமம்மா'' என்று சொல்லி, புலிக்கு முன்னால் சிக்கிய பசு தப்பித்துக்கொண்டதைப்போல, வெளியே ஓடிவந்தேன். அங்கிருந்து, அவசரமாக, சீதாராம ஹெக்கடேயிடம், ''போய் வருகிறேன்'' என்று சொல்லிப் புறப்பட்டேன்.

''நான்கு நாட்கள் இருப்பீர்களா?'' என்று கேட்டார் அவர்.

''ஓரிரண்டு நாட்கள் இருக்கலாம்.''

''ஆகட்டும், போய் வாருங்கள். நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம். நாங்கள் இந்த அற்பப் பணத்திற்காகக் கோர்ட்டுக் குப் போகவேண்டாம் என்ற முடிவு செய்துவிட்டோம்.''

''நல்லது. அவ்வளவாவது பெரியவர்மீது மரியாதை வைத்திருக்கிறீர்களல்லவா!''

''அவர்மீதுள்ள மரியாதையால் அல்ல; உங்களைப்பற்றி ஓரிரு நண்பர்கள் நல்ல அபிப்பிராயத்தைச் சொல்லி, சமாதானப்படுத்தியதால்தான். நீங்கள்தான் என்ன செய்வீர்கள்?''

''எப்படியானாலும் சரிதான். என் நண்பருடைய பிள்ளைக்கும், எனக்கும் எந்தவிதமான கருத்து வேறுபாடும் வரக்கூடாது.''

''நியாயம்தான்'' என்றார் அவர்.

நான் நண்பர் சபாவந்தருடன் அந்த ''தாட்சண்யக் கூண்டி''லிருந்து தப்பி வெளியே வந்தேன்.

''கைபிடித்த மனைவி'' என்றாள் கமலம்மா. அந்தக் கையிலிருந்து தப்பி ஓடுவதற்கு என் நண்பர் தற்கொலை செய்துகொண்டிருந்தாலும் வியப்பாயிராது. பார்வதியம்மாளைப்பற்றி அவள் கூறிய சொற்களோ! முண்டை—முண்டை என்று இரண்டிரண்டு தடவை சொன்னபோதும், தனக்கு ஏற்பட்டுள்ள விதவைக் கோலத்தின் நினைவு அவளுக்கு உண்டாகவில்லைபோலும்! சொல்லப்போனால், அவள் விதவைக் கோலத்துக்கென மொட்டை அடித்துக்கொள்ளவில்லை. அதுவே அவளுடைய பேச்சுக்குத் துணிவூட்டியதுபோலத் தோன்றியது.

வழியில் நடந்தபடியே என் நண்பர் கேட்டார்: ''என்னென்ன பேச்சு நடந்தது, வீட்டு எஜமானியிடம்?''

நானும் பதிலுக்காக, ''அகல்யா, திரௌபதி, சீதா, தாரா, மண்டோதரி ததா'' என்றேன். இந்த வடமொழிச் சுலோகத்துக்கு, இவ்வைந்து பெண்களும் தினந்தோறும் நினைப்பதற்கு உரிய பெண்கள் என்பது பொருள். ஆனால், எங்கள் கிராமப்புறத்துப் பேச்சில் அவர்களில் இராவணனின் மனைவியான மண்டோதரியைச் சேர்ப்பதில்லை. கணவனுடைய தீக்குணங்களையெல்லாம் அவள்மீது ஏற்றியிருக்கிறார்கள். எங்கள் பக்கத்து மக்கள் யாராவது ஒரு சண்டைக்காரி அல்லது அடங்காப்பிடாரியைப்பற்றி, ''அவள் எப்படிப்பட்டவள்?'' என்று கேட்டால், ''அவளா, மண்டோதரியாயிற்றே!'' என்பார்கள்! அந்த நினைவில் நான் இந்தச் சுலோகத்தைச் சொன்னேன். சபாவந்தர் அதைக் கேட்டுச் சிரித்தார்.

''ஐந்தே ஐந்து விநாடிகளில் உங்களுக்கும் தெரிந்துவிட்டதல்லவா?'' என்று கேட்டார்.

''அவளுடைய பேச்சிலிருந்து அவளுடைய இயல்பு நன்றாகத் தெரிந்தது. அவளுடைய நடை, பேச்சு, ஜம்பம்—எல்லாவற்றையும் பார்த்தால் பத்து ஊர்களை வென்ற பழங்காலத்து இராணியைப் போலிருக்கிறாள். இப்பொழுது எனக்கு வேறொரு யோசனை—இப்படிப்பட்டவளுடன் வாழ்க்கை நடத்திய யசவந்த ராயர் எப்படித் தன் காலத்தைக் கழித்தாரோ!''

''வாழ்க்கை என்பது இரண்டு குதிரைகளைப் பூட்டிய தேர் என்று சொல்வார்கள். இந்த வாழ்க்கையில் கட்டும் மிருகங்கள் குதிரைகளல்ல. மிருகங்களோடு ஒப்பிடுவதானால், இது யானையும், புலியும் கட்டிய தேர். புலி—பசு என்று சொல்லமாட்டேன். யசவந்தர் என்றுமே பசுவல்ல; பசுவாயிருந்தால் இவள் எப்போதோ அவரை விழுங்கி ஏப்பம் விட்டிருப்பாள்! அவர் யானையாக இருந்ததனால்தான், புலி தேரை இழுக்காவிட்டாலும் தாமே அதை இழுத்தார். தமது பெருந்தன்மையை இழக்காமலேயே, ஒருநாள் நுகத்தடியைவிட்டு வெளியே வந்தார்.

''தாயுடன் வாழ்ந்ததால், சீதாராமனிடம் தாயின் செல்வாக்கு மிகுந்திருக்கிறது. ஆனால், பாருங்கள், அந்தப் பெண்ணைப் பார்த்தேனல்லவா, நேற்று ஹொன்னகத்தேயில்? யார்? ஜலஜாட்சி என்பவள். அவளுடைய நடத்தை, அடக்கம், பொறுமை—என்ன சொல்வது. அவளுடைய கணவன் மஞ்சையனும் அப்படித்தான். முதலில் எனக்கு வழியில் தென்பட்ட மகன் யசவந்தனும் அப்படித்தான்! நான் யாரென்பது தெரிவதற்கு முன்பே கேத்தரகி மஞ்சையன் வீட்டைக் காட்டுகிறேன் என்று புறப்பட்டான்'' என்றெல்லாம் கூறினேன்.

''ஐயா, நல்ல குழந்தைகளைப் பெறுவதற்கும், புண்ணியம் செய்திருக்கவேண்டும். பணம் வரும்; அதிர்ஷ்டம் இருந்தால் எப்படிப்பட்டவனுக்கும் வரும்! ஒழுக்கமும் குணமும் அதிருஷ்டத்தால் வருவதில்லை. அவை முன் செய்த புண்ணியத்தால் வரவேண்டும்'' என்றார் சபாவந்தர்.

நானும் தலையாட்டினேன். நமக்குக் காரணம் தெரியாதவற்றுக்கு, ''அதிருஷ்டம், தலையெழுத்து'' என்றோ, ''முன் செய்த புண்ணியம், பிராப்தம், கர்மம்'' என்றோ சொல்லித் தப்பித்துக் கொள்கிறோம். இப்படிப்பட்டவை எதிர்காலத்தில் நமக்கு எப்படி இருக்கும்? உலகம் நம்மால்தான் நடக்கிறது என்று யாரும் நினைத்துக்கொள்ள வேண்டியதில்லை; என்றாலும் தமது ஒழுக்கத்துக்குத் தாமே பொறுப்பு என்பதை அறியாவிட்டால், அவர்கள்

உயிரின் வலிமையற்ற சடப்பொருள்களாகிவிடுகிருர்கள்! இது கட்டவேண்டிய, வளர்த்துக்கொள்ளவேண்டிய, காப்பாற்ற வேண்டிய ஒரு சக்தியல்லவா? என் நண்பர் எளிதில் பெற்ற அமைதியை நாம் அனைவரும் அடையமுடியுமா?

நான் சபாவந்தரை அவர் வீட்டில் விட்டுவிட்டு சும்மா கடற்கரைவரை போய் வருகிறேன் என்று சொல்லிப் புறப்பட்டேன். போவதற்கே ஒரு மணி நேரமாயிற்று. என் மனம் அன்று மாலை நடந்த பேட்டியினுல் மிகவும் நொந்திருந்தது. போய் கடற்கரையில் அமர்ந்து உருண்டு வரும் அலைகளைப் பார்த்தபடியே காலம் கழித்தேன். வானில் மறையும் கதிரவன் செம்மை பூத்து, உருவம் பெரிது பெரிதாகி, அடிவானத்தை எட்டிக்கொண்டிருந்தான். அணையும் விளக்குக்கு ஒளி மிகுதி என்பார்கள். அவ்வாறே மறையும் கதிரவனுக்கும் அழகு மிகுதி. இவ்வாறு என் நண்பரைப் பற்றிய வாதங்கள்—நிந்தை, பழி, புகழ் முதலிய எல்லாவற்றையும் கேட்டேன். ஆனுல், எனக்கு அவருடன் தொடர்பு ஏற்பட்டது வாழ்வின் மாலைப் பொழுதில். மாலை நேரத்துக் கதிரவனைப்போல அவரும் உயிர்த்துடிப்பு மிகுந்தவராகக் காணப்பட்டார். அவருடைய முகம், உருவம், நடத்தை எல்லாமே அழகு நிரம்பியனவாகத் தோற்றமளித்தன. அவர் இறந்த பிறகும் அப்படியே. என்னெதிரில் இருந்த உண்மைக் கதிரவன் மறைந்தான். இனியும் நெடுநேரம் வரை அவனுடைய பொன் வண்ணம் வானத்தில் காட்சி தரும்; மாலையின் அமைதியையும், அழகையும் எடுத்துக்காட்டும். யசவந்தர் எனக்கு இட்ட வேலையும், விட்டுச் சென்ற நாட்குறிப்பும் எனக்குக் கிடைத்த அந்தப் பொன் வண்ணம் என்று நினைத்தேன்.

கதிரவன் மறைந்து, அடுத்த நாள் வருவான் என்பது நாம் அனுபவத்தில் கண்ட உண்மை! அதனுலேயே மனிதன் ஒருநாள் இறந்தாலும், அடுத்த நாள் இன்னொரு உடலைத் தாங்கிக்கொண்டு வருவான் என்னும் எண்ணம் தோன்றியிருக்கவேண்டும் மனித மனத்தில். இறக்கத் துணிவில்லாத மனம் இத்தகைய கற்பனைகளைத்தானே புனையவேண்டும்? இந்தக் கதிரவனே தனக்குள்ள உடலோடு நாளையும் வருவான், நாளனன்றைக்கும் வருவான்; ஒவ்வொரு நாளும் வந்துகொண்டேயிருப்பான். நாம்? உடலைக் கழித்துவிட்டுப் போகும் மனிதர்களாகிய நாமோ? மறுபிறவியில் மற்ருேர் உடலைத் தரித்துக்கொண்டு வருகிருேமாம்! இந்தக் ''கதிரவன்'' திரும்பி வந்தால், ''நேற்று வந்துபோன கதிரவன்

இவனே'' என்பதைத் தெரிந்துகொள்கிறோம். மனிதன் வேறோர் உடலில் வந்தால் அவனைத் தெரிந்துகொள்ள முடியுமோ? என்றுமே முடியாது. அப்படித் தெரிந்துகொண்டவர்களும் இல்லை. என்றாலும் அப்படி ஓர் ஆசை நம்பிக்கையாக நம்மில் வேரூன்றியிருக்கிறது! நாம் முன்பு எந்த உருவில் வந்தோம், நாளை என்ன பிறப்பில் வருவோம் என்பது தெரியாதவர்களானாலும், நம் கடவுளர்களின் அவதாரங்களையெல்லாம் நாம் கண்டுபிடித்திருக்கிறோம். கற்பனையுலகில், கடவுளாகிய அவதாரங்களையெல்லாம் கண்டுபிடித்து வருகிறான் இந்த மனிதன்!

நிலையாக வாழவேண்டும் என்னும் ஆசையிலேயே அவன் இப்படிச் செய்துகொண்டிருக்கவேண்டும்.

இவ்வாறாக, என் மனத்தில் கடல் அலைகளைப்போல பல்வேறு எண்ணங்கள் பொங்கிப் புரண்டுகொண்டிருந்தன. ஓர் அலை மற்றொன்றினை அழித்து, தானே புகழ்பெற நினைக்கிறது. சில விநாடிகளிலேயே அதுவும் அழிகிறது. நாம் பார்க்கும் ஒவ்வொரு அலையும் உருள்கிறது, பொங்குகிறது, முறிகிறது, அழிகிறது. ஆனால், கடலின்மீது அலைகளே இல்லை என்று ஆவதில்லை; ஒன்றில்லாவிட்டால் மற்றோர் அலை இருந்தே இருக்கிறது; ஒன்றின் பின்னால் இன்னொன்று வந்துகொண்டேயிருக்கிறது. நம் வாழ்க்கையும் அப்படித்தானே? உடல் அழிந்தாலும், தனி மனிதன் என்னும் அலையின் வடிவம் அழிந்தாலும், அலைகள் என்பவை தவறுவதில்லை. அதே கடல், அதே நீர், அதே காற்று—அவைகளால் வாழ்வுப் பரம்பரை என்பது எப்போதும் உருண்டுகொண்டேயிருக்கிறது. மறுபிறப்பு என்பதும் இப்படியே இருக்கலாமோ?

இப்படியொரு கனவைப் புனைந்துகொண்டே கடற்கரையில் எழுந்து நின்றேன். வானம் தன் அழகை இழந்துவிட்டிருந்தது. அதில் எண்ணற்ற விண்மீன்கள் மின்னத் தொடங்கியிருந்தன! வானத்து மீன்களெல்லாம் புண்ணியம் செய்த மனிதர்களாம்! சொர்க்கத்திற்குச் சென்று மின்னும் நட்சத்திரங்களாம்!

அங்கேயும் மனிதனின் ஆவல், கற்பனைக் குதிரையை ஓட்டியிருக்கிறது! செத்தாலும் வானத்தில் நிலையாக வாழவேண்டும் என்னும் வேட்கை அவனுக்கு. துருவ நட்சத்திரம் நிரந்தரமானது என்கிறார்கள். மனிதனின் ஆயுள் அளவை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, மலை, பாறைசளெல்லாம் நிலையானவையே. விண்மீன்களைப்பற்றிச் சொல்வானேன்! என் நண்பர் யசவந்தரும்

விண்மீன் கூட்டத்தைச் சேர்ந்தவரே—என்றெல்லாம் எண்ணி னேன். அவருக்கு மட்டும் அப்படி ஒரு ஆவல் இருந்ததில்லை. நம்பிக்கையோ கொஞ்சம்கூட இருந்ததில்லை.

கடற்கரையிலிருந்து இரண்டு மைல் தூரம் நடந்து, மீண்டும் குமட்டி நகரை அடைந்தேன். அப்போது மணி எட்டு. என் நண்பர் அப்போதுதான் தம் தோழர்களுடன் உலாவப் புறப்பட் டிருந்தார். அவர் வீட்டுத் திண்ணை காலியாயிருந்தது. அவர் வீட்டில் இரவுச் சாப்பாடு ஒன்பது அல்லது பத்து மணிக்குத்தான். அப்படியிருக்க, "இங்கே ஏன் தூணில் சாய்ந்துகொண்டு உட்கார்ந்திருப்பது? என் வக்கீல் நண்பரை ஓய்வாகப் பார்த்துப் பேசவில்லை அல்லவா? அங்கே போகலாம்" என்று நினைத்து, அவர் வீட்டுக்குப் போனேன்.

என் நல்ல காலம், முர்டேஸ்சுவர வக்கீல் வீட்டிலேயே இருந் தார்.

"என்ன ஐயா, நேற்றும் நீங்கள் வரவில்லை; இன்றும் காண வில்லை" என்றார்.

"இப்போது வந்துவிட்டேனல்லவா? என்ன சொல்லுங்கள், உங்கள் ஊர் சமாசாரம்? 'பிராக்டிஸ்' நன்றாக நடக்கிறதா?" என்று கேட்டேன்.

"உம். எனக்கு வேண்டிய அளவு கிடைக்கிறது. நான் எல்லா வழக்கையும் இழுத்துப் போட்டுக்கொள்வதில்லை. சில பழைய கட்சிக்காரர்களை மட்டும் வைத்துக்கொண்டிருக்கிறேன். ஒருவ னுடைய வாழ்நாள் முழுவதும் உழைப்பேயாகிவிட்டால், enjoy பண்ணுவது எப்போது? சொல்லுங்கள்."

"ஓ! இப்போது உங்களுக்கு அந்த வேகம் வந்திருக்கிறதா?" என்று கேட்டு நையாண்டி செய்தேன்.

இப்படியே எங்கள் அரட்டைப் பேச்சு எங்கெங்கோ தாவிக் கொண்டிருந்தபோது, அவர் 'டக்'கென்று, "சீதாராம ஹெக்கடேயின் வீட்டுக்குப் போயிருந்தீர்களாமே?" என்று கேட்டார்.

"யார் சொன்னது உங்களுக்கு? உங்கள் ஊரில சுவர்களுக்குக் கூடக் காது இருக்கிறதா?"

"அப்படியில்லை; அந்தச் சீதாராமனே இங்கே வந்திருந்தான், எனக்கு அவன் மிக நன்றாகப் பழக்கம்."

"நீண்ட நாட்களாகவா?"

''அவனுடைய அப்பா காலத்திலிருந்தே. இவன், அப்பாவைப் போலல்ல; இவன் ஒரு perfect gentleman.''

''இருக்கவேண்டியதுதான், யாராவது ஒருவர்.''

''உங்களுக்கும் சீதாராமனுக்கும் ஏதோ விவகாரம் இருந்த தாமே? முந்தா நாள் உங்களைப் பார்த்தபோது—நீங்கள் அதற் காகவே வந்திருக்கவேண்டும் என்று தோன்றியது. வந்ததும் நல்லதாய்ப் போயிற்று என்று சொல்லுங்கள். இப்படிப்பட்ட விஷயங்களில் என்ன தான் இருந்தாலும், உங்களுக்குள்ளே சமா தானமாய்ப் போவதுதான் நல்லதே தவிர . . . ''

''எங்களுக்குள் விவகாரம் ஏதுமில்லையே.''

''அவன் உங்களுக்கு ஒரு ரிஜிஸ்டர் நோட்டீஸ் அனுப்பியிருந்தா னல்லவா?''

''நோட்டீஸ்? ஆமாம், கொடுத்திருந்தான்; உங்கள் வக்கீல் கூட்டம் இருக்கும் வரையில் நோட்டீஸ்கள் உலவிக்கொண் டிருக்க வேண்டாமா?''

''நான் அதன் நகலைப் பார்த்தேன்.''

''எதன்?''

''நோட்டீஸின்; யசவந்த ஹெக்கடே எழுதிய கடிதத்தின் நகலையும்தான். உங்களுக்கு வந்த கடிதம் உயிலல்ல; நான் வரும் வரையில் உங்கள் பாதுகாப்பில் பணம் இருக்கட்டும் என்று எழுதிய கடிதமல்லவா அது? அதை ஒரு வழியாகச் சமாதானம் செய்துகொள்வதுதான் நல்லது.''

''எப்படி, சமாதானமென்றால்?''

''நீங்கள் செலவு செய்த கொஞ்ச நஞ்சப் பணத்தைக் கழித்துக் கொண்டு, மிச்சத்தை இந்தச் சீதாராமனுக்குக் கொடுத்து விடுங்கள். அப்படியே இந்த விவகாரத்தைக் கைகழுவி விடுங்கள்.''

''அப்படியே.''

''சரிதானே, நான் சொல்வது?''

''வக்கீல்களின் நோக்கிலிருந்து பார்த்தால் சரியே.''

''வேறு எந்த நோக்கு இருக்கிறது?''

''யசவந்தராயருடையது என்று ஒரு நோக்கு இருக்கிறது என் பதை நான் மறக்கமுடியுமா?''

''அந்த ஆள் ஒரு மூடன்; சுத்த Fool; இந்த ஊரில் இருந்த போது என்னோடு நெருங்கிய தொடர்பில்லை. அவன் முதலி லிருந்தே தவறான வழியைக் கடைப்பிடித்தான். அதாவது, தன்

மனைவி, மக்களைப்பற்றிக் கவலையோ, கருணையோ இல்லாத வகையில் நடந்துகொண்டான்.''

''இருக்கலாம்; அப்படியே செத்தும் விட்டார், யாரும் அவரைத் திருத்துபவர் இல்லாமலேயே. இனி நீங்கள் அவரைத் திருத்தமுடியுமா?''

''இனிமேல் முடியாது என்பது உண்மை. ஆனால் உங்களைப் போன்ற வல்லவர்கள்—உலக அனுபவம் உடையவர்—நீதி நியாயம் எப்படியிருக்கவேண்டும் என்று வாதிக்க வல்லவர்கள்—அதைத் திருத்தவேண்டாமா?''

''எதை?''

''அவருடைய பண விஷயத்தைப்பற்றிச் சொல்கிறேன் நான்.''

அவருடைய பேச்சு எனக்குச் சலிப்பை யூட்டியது. இந்த வக்காலத்து எனக்குப் பிடிக்கவில்லை. முர்டேசுவரர் எனது பழைய நண்பரானாலும், அவர் ஒரு கட்சியின் சார்பில் பேசுகிறார் என்பது தெளிவாகத் தெரிந்தது. ஆகவே, ''முர்டேசுவரரே! வேறேதாவது விஷயத்தைப்பற்றிப் பேசுவோம்! நானும் நீங்களும் கட்சியாட வேண்டாம்'' என்றேன் நான்.

அதன்பிறகு அவர் பணத்தைப்பற்றிப் பேசவில்லையானாலும், என் நண்பர் யசவந்தரைப்பற்றிச் சொல்லக்கூடாத சொற்களையெல்லாம் பேசினார். அவருடைய நோக்கில், குமட்டி ஊரிலேயே ''மிகத் தாழ்ந்த மனிதன்'' என்னும் பட்டத்துக்குத் தகுதியுடைய ஒரு மனிதன் உண்டு என்றால், அது யசவந்தர் ஒருவர் தான்!

மகா கஞ்சன், மிகப் பெரிய முட்டாள், கல்நெஞ்சன் . . . இன்னும் என்னென்னவோ. அதற்கு மாறாக அவருடைய வீட்டார் மனைவி, மகன்—எல்லாரும் தெய்வங்களே.

அவர் இந்த விஷயத்தில் ஓர் அளவோடு பேசியிருந்தால் எனக்கு வருத்தம் ஏற்பட்டிராது. ஆனால் அவர் அந்த அளவை மீறி விட்டார். நானும் சிறது ஆவேசமாகப் பேசவேண்டியதாயிற்று!

''ஐயா! யசவந்தராயரைப்பற்றி எனக்கு, அதிகமாயில்லாவிட்டாலும், ஓரளவுக்குத் தெரிந்திருக்கிறது; ஐந்தாறு ஆண்டுகளாகவே அவரை நான் நன்றாக அறிவேன். அவர் தெய்வமல்ல, நீங்கள் வருணிப்பதுபோல அரக்கனுமல்ல, ஒரு தகுதியுள்ள மனிதர்; இவ்வளவாவது எனக்குத் தெரியும்.''

''அவரா!''

''அவர் என்னையும் உங்களையும்விட யோக்கியமானவர். எனக்கு அதுவே போதும் . . . போய் வருகிறேன்'' என்று சொல்லி, மனவருத்தத்துடன் அவர் வீட்டுப் படியை விட்டு இறங்கினேன். அவருக்கும், தமது வக்காலத்து அளவுமீறிப் போய்விட்டது என்று தோன்றியதோ என்னவோ.

''இல்லை ஐயா! ஏன் கோபித்துக்கொள்கிறீர்கள்? இதில் எல்லாம் 'sportiveness' வேண்டும்'' என்றார்.

''செத்தவரைப்பற்றி அநியாயமாகப் பேசினீர்களே, அவரிடம் மன்னிப்பைக் கேளுங்கள்'' என்று சொல்லி, வந்து விட்டேன்.

அன்று நாள் முழுவதும் ஒன்றன்பின் ஒன்றாகக் கசப்பான நிகழ்ச்சிகள் என்னை வருத்துவதற்காகவே வந்தனபோலத் தோன்றியது. ஒருமணி நேரம் கடற்கரையில் அமர்ந்து பெற்ற அமைதியும் இப்போது என்னிடமிருந்து மறைந்துவிட்டது! வக்கீல் முர்டேசுவரர் வேறொரு இனத்தார், கட்சிப் பற்றின்றி இதைப் பார்க்கக்கூடியவர், என் நண்பரைப்பற்றி ஓரளவாவது உண்மை அவரிடமிருந்து கிடைக்கும்—என்று நான் நம்பி எதிர்பார்த்துப் போனால், நடந்ததோ நேர்மாறு!

சபாவந்தர் வீட்டுக்கு நான் திரும்பியபோது மணி பத்தடித்து விட்டது. அவர் எனக்காகக் காத்துக்கொண்டிருந்தார். ''என்ன, எங்கே போயிருந்தீர்கள்?'' என்று கேட்டார். எனக்குச் சொல்லும் எண்ணமேயில்லை.

''நேரமாயிற்று, இலை போட்டாயிற்று; வாருங்கள் சாப்பிடலாம். பிறகு சொல்லுங்கள்'' என்று என்னை எழுப்பி அழைத்துச்சென்றார். இலையின் முன்னால் உட்கார்ந்தேன். எனக்கு எதுவுமே வேண்டியிருக்கவில்லை. என் நண்பரை நினைத்து நான் மிகவும் வருந்தினேன். அப்படியானால் நான் யசவந்தராயர் கட்சியைச் சேர்ந்தவனோ என்னும் ஐயமும் எழுந்தது.

நம்மவர்கள், நமக்கு வேண்டியவர்கள் என்னும் பற்று வந்தாலும், நமது அறிவு, நடுவு நிலைமை எல்லாமே மறைந்து விடுகின்றன. இல்லாவிட்டால் என் மனம் ஏன் அவ்வாறு கொதித்தெழ வேண்டும்? சீதாராம ஹெக்கடேயின் வீட்டிலும், முர்டேசுவரர் வீட்டிலும் நான் ஏன் அப்படிப் பொறுமை இழந்து நடந்து கொள்ளவேண்டும்? அதற்கு மாறாக ஹொன்னகத்தேக்குப் போயிருந்தபோது அன்பு பரிவு எல்லாம் காட்டியது ஏன்? நான் மனிதன்; பல்வேறு உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டவன். விருப்ப

மில்லாத பேச்சுக்கள் என்னைக் கோபிக்கச் செய்கின்றன. இனிய பேச்சுக்கள் இன்பத்தை யளிக்கின்றன. வேண்டுதல், வேண்டாமை இல்லாதவனல்லவே நான்!

அன்றிரவு பாயசம் செய்திருந்தார்கள். ''இது பாயசம்; இன்னும் இரண்டு கரண்டி போட்டுக்கொள்ளுங்கள்'' என்று உபசாரமும் செய்தார்கள். கையலம்பச் சென்றபோது, ''என்ன பாயசம் செய்திருந்தார்கள்?'' என்று கேட்டால், உண்மையில் எனக்குத் தெரியாது! சாப்பிடும்போது நான் என்னை மறந்திருந்தேன்; உணவின் சுவையை மறந்திருந்தேன். வாழ்க்கை விஷயத்திலும் அப்படி மறந்திருந்தால்? எப்படி முடியும்? என் நண்பரின் விஷயத்திலும் அப்படி இருந்திருந்தால்? பாயசம் போலவே அதுவும் ஆகியிருந்திருக்கும்! சமைத்து, அன்போடு பரிமாறியவர்களைப்பற்றிக் கவலைப்படாமல் கல்லாயிருந்தேன்; அப்படியே என்னை நட்பால் பிணைத்திருந்த யசவந்தர் விஷயத்திலும் கல்லாகியிருந்தால்! வேண்டாம், வேண்டாம். அத்தகைய நிலை வேண்டவே வேண்டாம். மனிதன் மனிதனுகவே இருப்பது நல்லது. ..கல்லாக இருப்பது ஒரு சிறப்பல்ல என்று தோன்றியது, வெளியே வந்து உட்கார்ந்தபோது.

தாமரைத் தண்ணீர்!

தாமரை இலைமீது நின்ற நீர்த்துளிபோல மனிதன் எதிலும் ஒட்டாமல் இருக்கவேண்டுமாம்! நமக்கு உதவி செய்பவர்களையும் ஒட்டியிருக்கக்கூடாது, நமது மனம்!

நீர்த்துளி அப்படி இருக்கும்! நீருக்கு உயிரில்லை; உயிருள்ள தாமரை இலை அந்த நீரின் உறவை எப்படி ஏற்றுக்கொள்கிறதோ, நானறியேன். அதற்கு நீர் வேண்டாமா? உயிருள்ள மனிதன் அப்படியிருந்தால், ''உயிர்'' இருக்கும் அடையாளமே நமக்குத் தெரியாது போகும்! விசித்திரமான உவமை! உவமைப் பொருட்களில் ஒற்றுமை இருப்பது நூற்றில் ஓரிரண்டு விஷயங்களில் தான். உவமைகளை அப்படியே விழுங்க நினைத்தால் அவ்வளவு தான்!

உண்டு முடித்து, பிறகு வெளியே வந்து உட்கார்ந்தேன். என் எதிரில் வெற்றிலைத் தட்டு; அதன் எதிரில் சபாவந்தர். என் மனம் எங்கெங்கோ அலை பாய்ந்துகொண்டிருந்தது. உணர்ச்சி நிரம்பிய வாழ்க்கை எனக்குத் தவறுகத் தோன்றவில்லை, தோன்றுது. அதற்கு அறிவு என்னும் அங்குசம் வேண்டும். அளவுக்கு மீறிய வேகம் தவறு, அவ்வளவுதான். அதனுலேயே நான் சபா

வந்தரிடம், ''நான் இன்று ஒரு தவறு செய்துவிட்டேன் என்று நினைக்கிறேன். நீங்கள் வீட்டில் இல்லாததால் வக்கீல் வீட்டுக்குப் போயிருந்தேன்'' என்று சொன்னேன்.

''வக்கில் முர்டேசுவரர் வீட்டுக்கா?''

''ஆமாம், உங்களைப்போலவே அவரும் பல நாட்களாக எனக்குப் பழக்கமானவர். அவர்மீது எனக்கொரு தனிப்பட்ட அன்பும் உண்டு. இன்று அதெல்லாம் நொறுங்கித் தூள் தூளாகி விட்டது.''

''என்ன சொல்கிறீர்கள்?''

நடந்தவற்றையெல்லாம் சுருக்கமாக அவருக்குக் கூறினேன். ''மாலையில் ஹெக்கடெயின் வீட்டிலேயே எனக்கு மனம் கலங்கி யது. இவர் வீட்டுக்குப்போனால் அமைதி ஏற்படும் என்று அங்கே போனால் அது புண்ணில் தீப்பட்டது போலாயிற்று.''

''அவர்களும் இவரும் நெருங்கிய நண்பர்கள் . . . எங்கள் சீதாராமன் வீட்டாரும், வக்கீலும் . . .''

''அது எனக்குத் தெரியாது போயிற்று.''

''என்ன நடந்தது அங்கே?''

அங்கே நடந்தவற்றை மேலும் சிறிது விவரித்தேன். அவர் எனது நண்பரைப்பற்றிப் பொருந்தாத பேச்சுக்களைக் கூறியதற்காக நான் கோபித்து வேகமாகப் பேசியதைச் சொன்னேன். ''நண்ப ரிடம் அப்படிப்பட்ட கடும் சொற்களைச் சொல்லியிருக்கக்கூடாது'' என்றேன்.

''அவர் செத்தவரைப்பற்றி, உங்களுக்கு வேண்டியவரைப் பற்றிப் பேசினார் என்று நீங்களே சொன்னீர்கள்.''

''அவரும் அம் மாதிரியாக ஒரு கட்சியின் சார்பில் பேசுவார் என்று நான் நினைக்கவில்லை.''

''அப்படியானால் நான் உங்களுக்கு ஒரு சங்கதியைச் சொல் லட்டுமா?''

''என்ன?''

''நம்முடைய வக்கீல் முர்டேசுவரரின் தோற்றம் வேறு; நடத்தை வேறு. அவருடைய கதை எங்களுக்குத் தெரியாத தல்ல. அந்த பெண் பிள்ளைக்கும், அவருக்கும் இடையே நட்பு முதலிலிருந்தே தொடர்ந்து வந்தது.

''உண்மையாகவா!''

''சும்மா வாய்க்கு வந்தபடி நான் அவரை நிந்திக்கிறேன் என்று நினைக்காதீர்கள்.''

பத்து நிமிட நேரம் நான் திகைத்துப்போய் உட்கார்ந்திருந் தேன். அதன் பிறகு, ''சபாவந்தரே, இன்று நிலா ஒளி வீசு கிறது; எனக்குப் படுத்தாலும் தூக்கம் வராது. ஆகவே எங்காவது போய் உலாவி விட்டு வரலாமா?'' என்று கேட்டேன்.

''நான் இரவில் உலாவப் போனதே இல்லை, . . நீங்கள் வர வேண்டும் என்று சொன்னால் . . .''

''ஒருவனே போனால் சலிப்பாக இருக்கும்; வேறு பயம் ஒன்றும் இல்லை.''

'எங்கே போகலாம்?''

''வேறெங்கே? பள்ளிக்கூடம் இருக்கும் மேட்டுப் பக்கம் தான் . . .''

## பதினொன்றும் அத்தியாயம்

குமட்டியில் என் வேலை அப்போதைக்கு முடிந்ததுபோல்தான். மற்றொரு முறை ஹொன்னகத்தே மஞ்சய்யாவின் வீட்டுக்குப் போய் அவருடைய இன்ப துன்பங்களை விசாரித்து, என் மனத்தில் ஏற்பட்ட வலியைப் போக்கிக்கொண்டு திரும்பி வந்தேன். தாரேஸ்வரத்துச் சீனனே. அவனது தாயோ எங்கேயிருக்கிறார் கள் என்னும் சங்கதி அவருக்குத் தெரியவில்லை. அந்தச் சீனனுக்கு ஒரு தங்கை இருக்கிறாள்; அவள் எங்கோ ஆசிரியையாக வேலை செய்கிறாள் என்னும் தகவல் மட்டும் அவரிடமிருந்து கிடைத்தது. இந்தத் தடவை அவர் வீட்டிலிருந்து புறப்பட்டு வரும்போது யசவந்தனும், ஜயந்தனும் மட்டுமின்றி, சிறுவன் பகவந்தனும் என்னைத் தழுவி, ''இன்னொரு தடவை வரவேண்டும், கண்டிப் பாக வரவேண்டும்'' என்று கட்டாயப்படுத்தினான். அவர்க ளுடைய தாய், ''எங்கள் தாய் வீட்டுக்குப் போய்வந்தீர்க ளல்லவா? எல்லோரும் நன்றாய் இருக்கிறார்களா?'' என்னும் சொற்களிலேயே தன்னுடைய ஆர்வத்தைக் காட்டிக்கொண் டார்.

அங்கிருந்து, இனி என்ன செய்வது என்பதைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டே சபாவந்தரின் வீட்டுக்குத் திரும்பிவந்தேன். வழியில் என் அறியாமை எனக்கே புலப்படத் தொடங்கியது. என் நண்பர் என்னிடம் ஒப்படைத்த பணத்திலிருந்து ஒவ்வொரு மாதமும் உதவித் தொகையாக எவ்வளவு செலவழிக்கவேண்டும்? அது வட்டியிலிருந்தே போகவேண்டுமல்லவா? அசலிலிருந்து பிள்ளையார் கோவிலுக்குக் கொடுக்கவேண்டிய அளவு கொடுத்தாயிற்று. இப்போது மஞ்சய்யனின் குழந்தைகளுடைய கல்விக்காகச் சிறிது அதிக உதவி செய்வதற்கு ஒப்புக்கொண்டேன் அல்லவா? இதெல்லாம் இப்படியே நடந்தால், என் நண்பர் கொடுத்துவைத்த பணம் எத்தனை நாளைக்கு வரும்? அசலிலிருந்தே செலவு செய்துகொண்டு வந்தால் எத்தனை நாட்களுக்கு நான் இவர்களுக்கெல்லாம் பண உதவி செய்யமுடியும் என்னும் கவலைகள் என்னைச் சூழ்ந்துகொண்டன. அதே சிந்தனையில்தான் சபாவந்தரின் வீட்டை அடைந்தேன்.

அந்த வீட்டாரிடம் சரசியைப்பற்றியும், அவளுடைய குழந்தைகளைப் பற்றியும் விசாரிக்கலாமா? அவர்களுக்கு ஏதாவது தெரிந்திருக்குமா? குமட்டிவரை வந்த பிறகு அந்த ஒரு சங்கதியைத் தெரிந்துகொண்டால் என் பொறுப்பு எவ்வளவு என்பது தெளிவாகிவிடும். மேலும், தாரேஸ்வரத்துச் சீனன் எழுதியபடி, அவளுடைய தாய் நோய்வாய்ப்பட்டிருக்கலாம் என்னும் எண்ணமும் தோன்றியது. யசவந்தருடைய கணக்குப் புத்தகத்தையும், இரசீதுகளையும் நினைவுபடுத்திக்கொண்டு பார்த்தால், அவளுக்குப் பணம் அனுப்பியதாகத் தெரியவில்லை. அவளுக்கும் யசவந்தருக்கும் இருந்த பழைய தொடர்பை நினைத்துப் பார்த்தால் அது விரசத்தில் முடிந்ததாகத் தெரியவில்லை. அவர்கள் இருவருக்கும் இருந்த தொடர்பு துண்டிக்கப்பட்டது ஒரு கட்டாயத்தினால்தான் என்று தோன்றியது. அப்படியானால் என் நண்பர் பம்பாயில் கழித்த பன்னிரண்டு ஆண்டுகளில் அவர்கள் இருவருக்கும் ஏதேனும் கடிதத் தொடர்பு இருந்ததா? இல்லாதுபோனால் கடைசி காலத்தில் அவர், அவளுடன் தமக்கிருந்த நட்பை நினைத்து, அதன் கடன் என்பதைப்போல இந்த மாத உதவி செய்யுமாறு எனக்கு எழுதினாரா? அப்படியானால் அவளுடைய முகவரியை ஏன் தரவில்லை? அவளுடைய மகனின் பெயரைக் குறிப்பிட்டாரே என்ற ஐயம் எழுந்தது. ஒருவேளை எனக்குத் தன்னுடைய பழைய தொடர்புகளைப் பற்றிக் கூறுவதற்கு அவர்

விரும்பவில்லையோ என்னவோ? இது இயல்பானதுதான். அதனாலேயே சரசியின் மகனுடைய பெயரைக் கொடுத்தார் என்று நினைத்தேன்.

மற்ற விஷயங்களைப்பற்றி நான் சபாவந்தரையே கேட்கவேண்டியதாயிற்று. அவர் தலையைச் சாய்த்து மேல் விட்டத்தைப் பார்த்தவாறு யோசித்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு, ''பாருங்கள், அவளுடைய மகன் சீனன் உயிரோடிருக்கிறான். அவளுக்கு ஒரு மகளும் இருக்கவேண்டும்; அவளும் இங்கே எங்கோதான் இருக்கவேண்டும். ஏதோ ஆசிரியை வேலை செய்துகொண்டு, மணம் செய்துகொண்டு நிம்மதியாக இருக்கவேண்டும்—சித்தாபுரத்து ஏதோ ஒரு மூலையில். இந்தச் சரசியின் உறவினர் யாரோ இந்தக் குமட்டியிலேயே இருக்கிறார்கள். பார்க்கலாம், இன்று இருக்கிறீர்களல்லவா? சாயங்காலத்துக்குள் விசாரித்துச் சொல்கிறேன்'' என்றார்.

அன்று பிற்பகல் உணவுக்குப் பிறகு வேண்டுமளவு பொழுது இருந்தது. பொழுது என்று தனியாக வேண்டுமா? வேலையே இல்லை. நெடுநேரம் தலையணைமீது சாய்ந்து, வீட்டுக்குடையவரைப்போலவே, நானும் தூங்கினேன். அந்தத் தூக்கத்தில் என்னென்னவோ கனவுகள்! யசவந்தர்—சரசியின் தொடர்பு பற்றிய காட்சிகள் என் கற்பனை வானில் நடனமாடின. கமலம்மாளுக்கு ஒப்பான வடிவம் அவளுடையது. அவ்வளவு அழகி என்று சொல்ல முடியாது; ஆனால் இசையை நன்றாகக் கற்றுத் தேர்ந்திருந்தாள். தன் இயல்புக்கு மாறான ஒழுக்கங்களே அவளிடம் காணப்பட்டன. கனவுதானே? என் நண்பர்மீது நான் கொண்டிருந்த அன்பெல்லாம் கனவில் இப்படி ஒரு காட்சியைக் கற்பனை செய்து காட்டியிருக்கவேண்டும். அந்தக் காட்சியில் வருத்த மூட்டும் நிகழ்ச்சியும் இருந்தது. அதாவது—நான் முன்னாள் சண்டையிட்டுவந்த வக்கீல் முர்டேசுவரர் ஒரு நாள் என் நண்பர் இல்லாத நேரத்தில் சரசியின் வீட்டுக்குப் போனதாகவும்; அவள், ''உங்களுக்கு இங்கே என்ன வேலை?'' என்று கேட்டதாகவும்; இவர், ''யசவந்த ஹெக்கடே இங்கே இருக்கிறாரா என்று பார்ப்பதற்காக வந்தேன்'' என்றதாகவும்; அவள், ''அவரை அவருடைய வீட்டிலேயே பார்க்கலாமல்லவா?'' என்றதாகவும்; அவர் அங்கிருந்து போகாது நின்றதைக் கண்டு, ''போங்கள், அவர் இல்லை'' என்று கோபித்துக்கொண்டு கூறியதாகவும் தோன்றியது. அந்தக் கதை மேலும் வளர்ந்திருக்குமோ

என்னவோ, அதற்குள் என் அருகில் படுத்திருந்த சபாவந்தர், ''ராயரே, காப்பிக்கு நேரமாகிவிட்டதாம்'' என்றார். கண்ணைத் தேய்த்துக்கொண்டே எழுந்தேன். முகத்தைக் கழுவிச் சிற்றுண்டியை முடித்த பிறகு, அவர் தம் வேலைக்குச் சென்றார்; நான் உலாவச் சென்றேன்.

நெடுநேரம் நடக்கும் விருப்பம் என் கால்களுக்கில்லை. மனமும் களைத்திருந்தது. இங்கேயே அருகிலுள்ள படகுத் துறைவரை போய் உட்கார்ந்துவிட்டு வரலாம் என்றெண்ணி, மெல்ல நடந்தேன். அங்கே சென்றேன். உப்பு நீர் நிறைந்த கழிமுகப் பகுதியில் தண்ணீர் இறங்கியிருந்தது. பத்துப் பன்னிரண்டு தோணிகள் ஆற்றின் சேற்றில் நின்றிருந்தன. தோணிகளின் போக்குவரத்துக்கும், கடலுக்குப் போய் வருவதற்கும் போதிய அளவு நீர் கழிமுகத்தில் இல்லை. அதிலேயே சில செம்படவப் பையன்கள், சிறிய வலைகளைக் கையில் பிடித்துக்கொண்டு, முழங்கால் அளவு நீரில் ஓடியாடி மீன் பிடித்துக்கொண்டிருந்தனர். வலையில் விழுந்த சிறிய மீன்கள் கையைப் போட்டபோதெல்லாம் துள்ளி, குதித்து, தாவி, தப்பித்துக்கொள்ள முயன்றன. அன்றே அவைகளுடைய வாழ்க்கையின் இறுதி நாள். துள்ளிக் குதித்தது ஒன்றே அவை கண்டது! அவை மீண்டும் அவர்கள் கைகளிலேயே விழுந்தன. அவர்கள் அந்த மீன்களைப் பிடித்து. தென்னை நாரை அவற்றின் செவிள்களில் நுழைத்து, வாய் வழியே இழுத்துச் சரங்களாகக் கோத்தார்கள். சிலவற்றுக்கு முழு உயிரும் போய் இராது. அவை அந்தச் சரத்திலேயே துள்ளித் துடித்து, படபடத்துக்கொள்வதும் கண்ணில் பட்டது. அதையே ஆர்வத்தோடு பார்க்கத்தொடங்கிய நான், இரக்கத்தால் முகத்தைத் திருப்பிக் கொள்ள வேண்டியதாயிற்று. செத்த பிறகாவது அவற்றின் போராட்டம் தப்புமல்லவா? என்று நினைத்துக்கொண்டேன்.

எனக்கு வேறு என்ன வேலை? கழிமுகத்தைப் பார்ப்பது; சாலையில் போகும் மக்களையும் வண்டிகளையும் பார்ப்பது. ஒரு மனத்தோடு சிந்திப்பது. அங்கே மற்றொரு செம்படவப் பையன் வந்து ஆற்றின் கரையில் உட்கார்ந்தான். கையிலிருந்த பையில் கையைப்போட்டு இரைப் புழுக்களை எடுத்து, சிறிய கம்பியின் முனையில் சொருகி நீரில் எறிந்தான். நான் செய்ததும் தவமே; அவன் செய்ததும் தவமே. அவனது தவத்தின் பயனாக பத்துப் பன்னிரண்டு சிறிய மீன்களாவது சிக்கின. அதில் ஒன்று ஆறு அங்குல நீளமிருந்தது. என் தவத்தின் பயனோ—மனத்தில்

தோன்றிய ஒவ்வொரு யோசனையும் ஓரிரண்டு கணங்கள் நின்று விளையாடி தன் அடையாளத்தையே அழித்துவிட்டு மறைந்து போயிற்று. அந்த யோசனைகளெல்லாமே என் நண்பரின் பழைய கதையிலிருந்து எனக்குத் தெரியாத, ஆனால் நானாகக் கற்பனை செய்துகொண்ட நிகழ்ச்சிகளாகும். அவை உண்மையின் அடிப் படையில் தோன்றாததாலோ என்னவோ, என் சிந்தனையென்னும் தூண்டிலில் எந்த மீனும் சிக்கவில்லை. எவ்வளவு நேரம் நான் அப்படியே உட்கார்ந்திருந்தேனோ, தெரியாது! மாலை வந்ததும் இருள் கவிந்ததுமட்டும் எனக்குப் புலனாயிற்று. அப் படியே பைத்தியக்காரனைப்போல அங்கிருந்து எழுந்து சபாவந்த ரின் வீட்டுக்குப் போகப் புறப்பட்டேன். வழியில் சீதாராம ஹெக்கடே யாரோ ஒரு நண்பரை அணைத்துக்கொண்டு எதிரி லேயே கடந்து சென்றதைக் கண்டேன் நான். அவராக என் னிடம் பேச்சுக் கொடுக்கவில்லை; நானும் அவர் பேச்சுக்குப் போகும் நிலையில் இல்லை. நண்பரின் வீட்டை அடைந்து, அங்கே ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்தேன். நான் தூங்கியும் விட்டேன். எழுந்தபோது மணி எட்டாயிருந்தது. என் அருகி லேயே சபாவந்தர் வெற்றிலையை மென்றுகொண்டே உட்கார்ந் திருந்தாலும் அவர் என்னை எழுப்பவில்லை. நானாக எழுந்த பிறகு, ''என்ன, இன்று தூக்கத்திற்குமேல் தூக்கம் உங்களுக்கு? பகலிலும் நன்றாகத் தூங்கினீர்கள். மிகவும் களைப்பாக இருக் கிறதா?'' என்று கேட்டார்.

அவர் கேட்ட கேள்வி என் தலை மண்டைக்குள் நுழைந்து உள்ளே போவதற்கு ஓரிரண்டு நிமிடங்கள் பிடித்தன.

''ஆமாம், நல்ல தூக்கம். அதாவது, நேற்று இரவெல்லாம் தூக்கம் வந்ததுபோன்றுமில்லை, வராததுபோன்றுமில்லை. ஒரு மாதிரியாக இருந்தது.''

''நீங்கள் வேறே! அந்த முர்டேசுவர வக்கீலும், இந்தச் சீதாராமனின் தாயும் உங்கள் நண்பரைப்பற்றி நான்கு சொற்கள் ஏறக்குறையப் பேசிவிட்டார்கள் என்பதற்காக இப்படியெல்லாம் வருந்தலாமா? கூடவே கூடாது. நாய் குரைத்தால் மலைக்கு என்ன கேடு? இவர்கள் யார், என்ன வேண்டுமானாலும் சொல்லட் டும்; நான் சொல்கிறேனல்லவா—யசவந்த ஹெக்கடே தங்கமான மனிதர்; எனக்கும் அதிகத் தொடர்பில்லாவிட்டாலும் அவரைக் கண்டவன், அவரைப்பற்றி அறிந்தவன் நான்'' என்று கூறி என் மன வேதனையை நீக்க முயன்றார்.

''ஆம், விசாரித்து விட்டேன். நீங்கள் இனி நேராக உங்கள் ஊருக்குப் போகலாம். சித்தாபுரம், கித்தாபுரம் என்று எந்தத் தொல்லையையும் வளர்த்துக்கொள்ளவேண்டாம். அந்தச் சரசி செத்து இரண்டு மூன்று வருடங்கள் ஆகிவிட்டனவாம். அவளுடைய மகன் சீனன், சித்தாபுரத்துக்குப் பக்கத்தில் கோடகணி என்னும் ஊரில் இருக்கிறான். இங்கே இரண்டு மூன்று கோடகணிகள் இருக்கின்றன. அவன் இருப்பது சித்தாபுரத்துக் கோடகணியில்.''

''அப்படியா!'' என்று வியப்போடு கூறினேன். இவ்வளவெல்லாம் கேட்டுத் தெரிந்துகொண்ட பின்பு, அவளைப்பற்றியும் தெரிந்துகொள்ளவேண்டும் என்னும் அடங்காத ஆவல் என்னுள் தோன்றியது.

''இப்போது அவள் இல்லை. ஆனால் அவருடைய மகன் இருக்கிறான்; மகளும் இருக்கிறாள். இப்போது சாணைகட்டிக்கு மாற்றியிருக்கிறார்களாம். கணவன்—மனைவி இருவரும் ஒரே ஊரில் ஆசிரியர்களாக இருக்கிறார்கள். உங்களுக்கு அவ்வளவு ஆர்வம் இருந்தால் சாணைகட்டி வரை போய் வாருங்கள். அது கோகர்ணத்திலிருந்து இரண்டு மைல் இந்தப் பக்கத்திலிருக்கிறது. பஸ்ஸும் போகும். வேண்டுமானால் மிர்ஜான் துறையில் தோணியில் உட்கார்ந்தால், சாணைகட்டிக்குப் போய்ச் சேரலாம். அவருடைய மகளையும் மருமகனையும் விசாரித்துக்கொண்டு வாருங்கள்.''

''அப்படிச் செய்யலாமா?''

''உண்மையிலேயே போகப்போகிறீர்களா? உங்களுக்குப் பைத்தியம்தான்.''

''என் நண்பருடைய மகள் அல்லவா சரசியின் மகள்? நான் சொன்னது உங்களுக்குப் புரிந்ததா? 'சரசம்' என்னும் சொல்லுக்கு மாறான சொல்லே விரசம். இல்லறத்தில் நன்றாகப் பொருந்தும் இல்லறம்தான் சரசம்; மாறான இல்லறம் விரசமேயாகும். இல்லறம் என்பது சாஸ்திரப்படி அமைந்த இல்லறம் எப்படி அமைந்தது என்பதைக் கண்டீர்கள். அப்படியான பிறகு, என் நண்பரின் கந்தர்வ முறை இல்லறம் எப்படியிருந்தது என்பதைத் தெரிந்துகொள்ளும் ஆர்வம் ஏற்பட்டிருக்கிறது.''

''நல்லது, கெட்டது இரண்டிலும் உண்டு. தாலி கட்டியது, கட்டாதது, என்பதிலேயே கணவன்—மனைவி ஒற்றுமை உறுதியாவதில்லை. மேலும் குழந்தைகளைப்பற்றி நினைக்கும்பொழுது,

நல்லவர்களுக்கு நல்ல குழந்தைகளே பிறக்கிறார்கள், கெட்டவர்கள் பிறப்பதேயில்லை என்று சொல்வதற்கும் இல்லை.''

''அது என்றைக்குமே யில்லை.''

''அப்படியானால் என்ன செய்யப்போகிறீர்கள்?''

''சாணைகட்டிக்குப் போய் வருகிறேன்.''

''அங்கே போனால் சாப்பாட்டுக்கு? இரவுக்குள் திரும்பிவிடலாம். நாளைக் காலையில் புறப்பட்டால் பகலில் பட்டினி.''

''ஒருவேளை சாப்பிடாவிட்டால்தானென்ன?''

''தாரேஸ்வரத்துச் சீனனைப் பார்ப்பதற்காகப் போகவேண்டியதில்லை; அவன் இருக்கும் இடம் மிகுந்த தொலைவிலிருக்கிறது.''

''அதைப்பற்றி நான் இன்னும் சிந்திக்கவில்லை. அவன் என்னைக் கொஞ்சம் ஏமாற்றிவிட்டானோ என்னும் சந்தேகமும் இருக்கிறது'' என்று அந்தச் சங்கதியை அவருக்கு விரித்துக் கூறினேன். 'அம்மா, மிகவும் உபகாரமாய் இருக்கும் என்று சொல்கிறார்; இரண்டு நாள் சாப்பிடவில்லை' என்று எழுதினான். ஒன்று, அவன் தாய் இறந்ததே பொய் அல்லது இவன் அந்த உண்மையை மறைத்துவிட்டான். இன்னொரு இடத்திலும் எனக்கு இப்படியே மோசம் ஏற்பட்டது. அதை எப்படியோ சரிப்படுத்திவிட்டேன். ஆகையினால் சீனன் இருக்கும் இடத்திற்குப் போகவேண்டும் என்று தோன்றவில்லை. இவள் இருக்கும் இடத்திற்குப் போய் வருகிறேன். சாணைகட்டியிலேயே இருக்கிறார்கள் என்கிறீர்களா?''

''ஆம், அங்கே பள்ளிக்கூடத்தில் இருக்கிறாளாம். சாலைக்குப் பக்கத்திலேயே பள்ளிக்கூடம் இருக்கிறது. சிறிய பள்ளிக்கூடம்; அவ்வளவு பெரியதல்ல.''

''பள்ளிக்கூடத்தை வைத்துக்கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்?''

மறுநாள் காலையில் எழுந்து, முகம் கழுவி, குமட்டியிலிருந்து கோகர்ணத்திற்குப் போகும் முதல் பஸ்ஸைப் பிடித்தேன். நீண்ட தூரப் பயணம் அல்ல. காலை வேளையானதால் வெயிலின் கொடுமையும் இல்லை. சாலையில் இரு பக்கங்களிலும் செடிகளும், மரங்களும், சிறு பாறைகளும் இருந்தன; குறுக்கே ஓடிய ஆறு, அதன் பிறகு தொடர்ந்த சாலை எல்லாமே என் மனத்தில் மகிழ்ச்சியை உண்டாக்கின. என் மனத்தில் இரண்டு நாட்களாக இருந்துவந்த வேதனை தானாகவே மறைந்தது. தோணியில் ஏறிச் செல்வதில் தடை ஏற்படாமல் இருந்தால், நான் ஒன்பது மணிக்

குள்ளேயே சாணைகட்டியை அடைந்திருக்க முடியும். எப்படியோ ஒன்பதரை மணிக்குச் சாலையின் ஓரத்தில் காணப் பட்ட பள்ளிக்கூடத்தின் எதிரில் பஸ்ஸை நிறுத்தச் செய்து கீழே இறங்கினேன். பள்ளிக்கூடத்தின் கதவு மூடியிருந்ததைக் கண்டு, ''இது என்ன? இவ்வளவு நேரமாகியும் பள்ளிக்கூடத்துக்கு யாரும் வரவில்லை? குழந்தைகளும்கூடக் கண்ணில் பட வில்லையே?'' என்று சிந்தித்துக்கொண்டே பள்ளிக்கூடத்தின் திண்ணைமீது சென்று அமர்ந்தேன். மேலும் அரை மணி நேரம் கழிந்தது. நான் சந்திப்பதற்காக வந்திருந்த சந்திரமதியோ அல்லது மாணவர்களோ யாருமே வருவதாகத் தெரியவில்லை. இது என்ன? இன்று பள்ளிக்கூடத்துக்கு விடுமுறையா? என்று கணக்கிட்டேன்; உண்மையில் ஞாயிற்றுக் கிழமை விடுமுறை அன்று. யாராவது அருகிலுள்ள வீட்டாரைக் கேட்டு, அந்தத் தம்பதிகளின் வீடு எங்கேயிருக்கிறது என்று தெரிந்துகொள்வ தற்குப் பதிலாக, இங்கேயே பொழுதைக் கழித்தேனல்லவா என்று தோன்றியது. அங்கிருந்து வெளியே வந்தேன். நூறு கெஜத்திற்குள்ளேயே ஓரிரு வீடுகள் கண்ணில் பட்டன. சந்திர மதி வாத்தியாரம்மாவின் வீடு எது என்று அருகிலிருந்த வீட்டா ரைக் கேட்கப் புறப்பட்டேன். உடனே ஓர் ஐயம். சபாவந்தர் சொல்லிய பெயர் சந்திரமதியா அல்லது இந்துமதியா? இந்தக் குழப்பம் என்னைத் திகைக்கவைத்தது. அந்தக் குழப்பத் தோடேயே நடந்து, முதலில் இருந்த வீட்டின் முன்னால் போய் நின்று, யாராவது வீட்டிலிருந்து வெளியே வருவார்களா என்று காத்திருந்தேன். யாரும் வரவில்லை. ''இந்தப் பள்ளிக்கூடத்து வாத்தியார் எங்கே இருக்கிறார்?'' என்று வலுத்த குரலில் கத்தி னேன். ஒரு பெண்மணி வெளியே வந்து, ''வாத்தியார் கோகர்ணத்திற்குப் போயிருக்கிறார். காலையிலேயே போனார்'' என்றாள். எனக்கு மேலும் ஓர் அடி. அவள் இன்னும் அங்கேயே நின்றிருந்தாள். அவள் அவ்வாறு சொல்லவேண்டுமானால், அது ஆசிரியர் வீடு என்பது உறுதி. அவளையே கேட்டுவிட்டால் இது தெளிவாகும் என்று நினைத்தேன். ''எனக்கு வாத்தியார் என்றால், வாத்தியாரே வேண்டும் என்பதில்லை. இந்தப் பள்ளிக் கூடத்தில் ஒரு வாத்தியாரம்மா வேலை பார்க்கிறாரா?'' என்று கேட்டேன். அவள் சந்தேகப்பட்டோ என்னவோ பேசவில்லை. நான் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு நின்றிருந்தேன். அவளும் என்னையே பார்த்தாள். ''உங்களுக்கு எந்த ஊர்?

யாரைப் பார்க்கவேண்டும்?'' என்று ஆர்வத்தோடு கேட்டாள். அவள் முகத்தைப் பார்த்தேன். கேள்விக்குப் பதிலைச் சொல்லத் தொடங்கி, ''அம்மா, நான் அந்த அம்மாளின் பெயரையே மறந்துவிட்டேன். சந்திரமதியோ, இந்துமதியோ—இரண்டில் ஒன்று அவருடைய பெயர். நான் வெளியூர்க்காரன். ஒரு வேலையாகத் தேடிக்கொண்டு வந்திருக்கிறேன். இந்தப் பள்ளிக்கூடத்தில் வாத்தியாரம்மா ஒருவரா இரண்டு பேரா?'' என்று கேட்டேன். அவள் சிரித்தாள். அந்தச் சிரிப்பு மின்னலில், ஹொன்னகத்தே ஜலஜாட்சி முகத்தின் சாயல் இருப்பதாக எனக்குத் தோன்றியது.

''உங்களுக்கு எந்த ஊர்? உங்கள் பெயர் என்ன?'' அவள் மற்றொரு முறை கேட்டாள்.

நான் இரண்டையும் சொன்னேன். அவற்றை அறிந்தவள் போல, ''வாருங்கள், இதுதான் அந்த வீடு'' என்று சொன்ன போது எனக்கு வியப்பாக இருந்தது. இரண்டடி எடுத்துவைத்து மீண்டும் நின்றேன். ''வரலாம், வாருங்கள். உங்கள் பெயரை நான் கேட்டிருக்கிறேன். உங்கள் புத்தகங்களையும் படித்திருக் கிறேன்'' என்று சொன்னதும் எனக்கு வேண்டிய அளவு துணிவு ஏற்பட்டது. நான் முதலில் ஒருமுறை தவறினாலும், விவரங் களைக் கேட்டுத் தெரிந்துகொள்வதில் நான் வெட்கப்படவில்லை. வீட்டின் உள்ளே நுழைந்தேன். ஒரு பெஞ்சைக் காட்டி, ''உட்காருங்கள்'' என்றாள். ''நான் சந்திரமதி அல்ல, என் பெயர் இந்துமதி; நானே இங்கே ஆசிரியையாக இருக்கிறேன். என் கணவருக்கும் இங்கேயே ஆசிரியர் வேலை. நீங்கள் அவரைப் பார்ப்பதற்காக வந்திருக்கிறீர்களா?'' என்று கேட்டாள்.

''அல்ல, உங்களையே.''

''என்னையா!''

''ஆம், அம்மா. என் நண்பரின் மகள் நீங்கள் என்பதனால் நான் வந்தேன். வேறு வேலை ஏதுமில்லை. அது ஒன்றே காரண மாகும். உங்கள் அண்ணன் சீனன் எனக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருந்தான். நான் குமட்டிக்கு வந்தேன். நீங்கள் இங்கே இருக்கிறீர்கள் என்று சபாவந்தர் வீட்டார் வேறு யாரையோ கேட்டு விசாரித்துச் சொன்னார்கள். பார்த்துக் கொண்டு போகலாம் என்று வந்தேன்.''

''சீன அண்ணா உங்களுக்குத் தெரியுமா?''

''நேராக அறிமுகம் இல்லை; கடிதத்தின்மூலமே தொடர்பு உண்டு. உங்கள் தந்தையுடன் எனக்கு மிகவும் நெருங்கிய நட்பு.''

அவள் தன் முகத்தைக் கவிழ்த்தாள், ஓரிரண்டு விநாடிகள் ஒன்றும் பேசவில்லை.

''எதற்கும் வெட்கப்படவேண்டாம்; யசவந்தராயருக்கு வேண்டியவன் நான்.''

''நான் இவ்வளவு இருந்தேன்'' என்று தரையிலிருந்து இரண்டடி உயரத்திற்குத் தன் கையைக் காட்டி, ''எங்கள் அப்பா என்னை விட்டுப் போகும்போது'' என்றாள்.

''அதைப்பற்றி ஏதோ கொஞ்சம் கேட்டிருக்கிறேன்.''

''பம்பாயில் எங்கோ இருக்கிறாராமே—எங்கள் அப்பா!''

''இப்பொழுது இல்லை அம்மா, அவர் போய்விட்டார்—ஒரு வருடத்திற்கு முன்பு.''

''என்ன! இறந்தும்விட்டாரா? எங்கள் அம்மா அவரையே நினைத்துக்கொண்டு இரண்டு வருடங்களுக்கு முன்புதான் செத்தாள். இப்போது அவரும் போய்விட்டாரா?''

அவள் நெடுநேரம் வரை பேசவில்லை; நானும் பேசவில்லை.

''அண்ணன் சித்தாபுரத்துக்கு அருகில் கோடகணியில் இருக்கிறார்; முன்பு நானும் அங்கே இருந்தேன். எங்கள் அம்மாவும் அங்கே இருந்தார். அவருக்குக் குமட்டியின் நினைவே கசந்து போய் எங்களை அழைத்துக்கொண்டு அங்கே போனார். எங்களுக்கு மிகவும் கஷ்டம் ஏற்பட்டது. தாங்கமுடியாத நிலைமை ஏற்பட்டபோது யார் யாரிடமோ கேட்டு முகவரியைத் தெரிந்துகொண்டு அண்ணன்மூலம் எங்கள் அம்மா பம்பாய்க்கு ஒரு கடிதம் எழுதுவித்தாராம். உடனே அவர் நூறு ரூபாய் அனுப்பி வைத்தார். அது வந்தது எங்கள் அம்மாவின் கடைசி நேரத்திற்கு ஆயிற்று. 'எப்படியோ நம்மை அவர் மறக்கவில்லை அல்லவா' என்னும் திருப்தியுடன் அம்மா செத்தாள். அதன் பிறகு நானே அவருக்கு இந்தச் சங்கதியைத் தெரிவித்து ஒரு கடிதம் போடவேண்டுமென்று நினைத்துக்கொண்டிருந்தேன். அந்த நினைவிலேயே காலம் கழிந்தது; அதன் பிறகு எல்லாவற்றையும் மறந்துவிட்டேன். மறக்கக்கூடாதுதான்; நான் மறந்துவிட்டேன். பாருங்கள், கடவுள் எங்களை ஏதோ ஒரு வழியாக நடத்திக்கொண்டு போகிறான். நானும், என் கணவரும் இங்கே ஆசிரியர்களாக இருந்துகொண்டு வாழ்க்கையைச் சுகமாக நடத்

திக்கொண்டு வருகிறோம். அண்ணனும் போதிய அளவு சுக மாகவே இருக்கிறார். ஊரில், வீட்டிலேயே சங்கீதம், தபலா பாடங்களைச் சொல்லிக் கொடுத்துக்கொண்டு காலம் கழித்து வருகிறார்.''

இவ்வளவும் சொன்ன பிறகு அவள் உள்ளே போனாள். சிறிது நேரத்திற்குப் பிறகு, சிறிது அவல் உப்புமாவும், பானகமும் கொண்டுவந்து என் முன் வைத்தாள். பிறகு நான் உட்கார்ந் திருந்த பெஞ்சின் மற்றொரு கோடியில் உட்கார்ந்தாள். தன் தந்தையைப்பற்றிப் பல்வேறு கேள்விகளைக் கேட்டாள்; இயல் பான இல்வாழ்க்கையில் தோன்றிய குழந்தைகள் கேட்பதைப் போன்றே அன்புடனும் ஆர்வத்துடனும் பல கேள்விகளைக் கேட்டதால், நானும் ஒவ்வொன்றாக எனக்குத் தெரிந்தவற்றைச் சொல்லிக்கொண்டே வந்தேன்.

''நீங்களாக இருந்ததால்தான் இவ்வளவு கௌரவத்துடன் என்னிடம் பேசினீர்கள். எங்கள் குலம் அப்படிப்பட்டது. நீங்கள், 'உங்கள் அப்பா', 'உங்கள் அப்பா' என்று சொன்னபோ தெல்லாம், 'யார் இவர்? இப்படி என்னைக் குத்திப் பேசுகிறார்' என்று நினைத்துக்கொண்டேன். எங்கள் தாய் அவரைக் கைப் பிடித்தவளைவிட அதிக நம்பிக்கையுடன் நடந்துகொண்டாள். உலகத்தில் அதற்கு மதிப்பு கிடைக்குமா? 'தாசி, தாசியே' என் கிறார்கள். நான் அப்பொழுது சிறியவள்; இப்போதும் மிகவும் தெரிந்தவளைப்போலச் சொல்லவில்லை; எங்களுக்கு அவர் என்றால் உயிர். எங்கள் அம்மா அவரைப் பூசை செய்து வந்தாள். வேறொருவரானால் அவருடைய சொத்தையெல்லாம் பறித்துக் கொண்டு, பின்னால் அவர் விட்டுப் போய்விட்டாலும், தம் வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகளைச் செய்துகொண்டிருப்பார் கள். எங்கள் அம்மா அப்படிச் செய்யவில்லை. மரியாதையுடன் இருந்தார். அவர் ஊரை விட்டுப்போய் எத்தனையோ வருடங்கள் ஆன பிறகு, எனக்குச் சிறிது புத்தி வந்த பிறகு, அவள் ஒரு பேச்சைச் சொன்னதுண்டு, அவள் பொய் சொல்லமாட்டாள். அப்பா தம் குடும்பத்தில் வெறுப்புகொண்டு, குமட்டி ஊரை விட்டுப் போகவேண்டும் என்ற நிலையில் எங்கள் வீட்டுக்கு வந்து கண்ணீர் விட்டாராம். 'சரசி, உனக்கு இதுவரையில் நான் பெரி தாக எதையும் கொடுக்கவில்லை, செய்யவும் இல்லை. ஆனாலும் நீ அக்கினி சாட்சியாக ஏழடி நடந்து வந்தவளைவிட அதிகமாக என்னை அன்போடு நடத்தி வந்திருக்கிறாய். இப்போது எனக்கு

வனவாசம் செய்யவேண்டிய வேளை வந்திருக்கிறது. நான் எங்கே போகிறேன் என்பது எனக்கே தெரியாது. உனக்கு என்ன வேண்டும் சொல்—பணம் வேண்டுமானால் பணம் கொடுக்கிறேன்; வீடு வேண்டுமானால் வீடு வாங்கிக் கொடுக்கிறேன். நான் உனக்குக் கடன் படக்கூடாது அல்லவா' என்றாராம். பெரிய மனிதத் தன்மையோடு கூடிய அப்படிப்பட்ட பேச்சு எத்தனை பேர் வாயில் வரும்? என் தாய்க்கும் அவர் பட்ட கஷ்டங்கள் நன்றாகத் தெரியும். பணத்தைக் கணக்கிடுவதில் அவள் வாழ்க்கையைக் கழித்தவள் அல்ல. அதனால், 'உங்கள் அன்பிருந்தால் அதுவே போதும்' என்று கூறினாராம். அவளே சொன்ன பேச்சு இது. நான் அதை உண்மை என்று நம்பியிருக்கிறேன். 'அவர் தம் கையில் இருப்பதையெல்லாம் நமக்குக் கொடுத்துவிட்டுத் தனியாகப்போய் எங்கேயிருந்து எவ்வளவு கஷ்டப்படுவாரோ?' என்று தோன்றியதாம் அம்மாவுக்கு, எல்லாவற்றையும்விட வாழ்க்கையே வெறுத்து, தற்கொலை செய்துகொள்ளும் நிலையில் இருந்தாராம் அவர். இதையும் அம்மாவே சொன்னாள்.''

பின்பு இந்துமதி, தன் தாய், தந்தையாரின் நினைவால் அழத் தொடங்கியதால் நானும் பேசாமலிருந்தேன். உலக வழக்கப்படி நானும் சமாதானமாக நான்கு சொற்களைச் சொன்னாலும், அப்படிப்பட்ட வேதனை தரும் நினைவுகளை வெறும் சொற்கள் அழிக்கமுடியுமா?

அவளிடம் நான், ''உன் அண்ணன், உன் தாய் இன்னும் உயிருடன் இருப்பதாகக் கடிதம் எழுதியிருக்கிறான்'' என்று சொல்லி அவளைப் புண்படுத்த விரும்பவில்லை. அதற்குப் பதிலாக அவளுடைய வேலையைப்பற்றியும், கணவனைப்பற்றியும், குடும்ப நலத்தைப்பற்றியும் விசாரித்தேன். இருந்தாற்போல் இருந்து அவள், ''ஆமாம், எங்கள் அப்பா உங்கள் நண்பர்; ஐந்தாறு வருடத்து நட்பு உங்களுடையது என்று சொன்னீர்களல்லவா? அவருடைய போட்டோ ஏதேனும் உங்களிடமிருந்தால் கொடுக்கிறீர்களா?'' என்று கேட்டாள்.

''ஒன்று இருக்கிறது; அதற்கு நகல் எடுத்து அனுப்பி வைக்கிறேன்.''

''கண்டிப்பாக.''

''ஆம். உங்கள் அம்மாவின் படம் இருக்கிறதா?'' என்று கேட்டேன் நான்.

''இருக்கிற ஒன்றும் கோடகணியில் இருக்கிறது. மிக மிகப் பழைய படம்; அழுக்கேறியிருக்கும். என்றைக்காவது ஊருக்குப் போனால் கொண்டுவருகிறேன்.''

''கொண்டுவந்தால், எனக்கு அனுப்பினால், அதைப் பார்த்து பெரிதாக ஒரு படம், சிறந்தவர்களைக்கொண்டு எழுதச் செய்ய லாம். அந்தப் போட்டோவை பார்க்காமல் இப்போதே ஒன்றும் சொல்வதற்கில்லை.''

''ஆம், அது அழுக்குப் படிந்த படம்.''

''இனி, நான் வந்த வேலை முடிந்தது; எத்தனை மணிக்கு பஸ் வரும்?''

''பஸ்ஸுக்கு என்ன குறைவு? அடிக்கடி வரும், போகும். நீங்கள் இப்போதே போகமுடியாது. எங்கள் வீட்டுக்காரர் இப் போது வருவார். அவர் பார்க்கவேண்டும் உங்களை. அவரும் உங்கள் புத்தகங்களைப் படித்திருக்கிறார்.''

''நான் புத்தகம் எழுதுவதனாலேயே இப்போது தொல்லையில் மாட்டிக்கொண்டேன்.''

''நீங்கள் தார்வாடா பக்கத்துப் பாஷையைப் பேசுகிறீர்கள்.''

''எனக்குத் தார்வாடா, குமட்டி, மங்களூர் எல்லாம் ஒன்று தான்'' என்று சொல்லிக்கொண்டிருந்தபோதே ஒரு பஸ் தெருவில் வந்து நின்றது. பஸ் நின்ற ஒலியைக் கேட்டே இந்துமதி, ''வந் தார் என்று தெரிகிறது'' என்று பெருமை பொங்கக் கூறினாள். ஐந்து நிமிடங்களுக்குள் ஆசிரியரும் வந்தார். இந்துமதி வெளியே ஓடிக் கணவன் தோள்மீது இரண்டு கைகளையும் இட்டு, தலையைத் திருப்பி, என்னைக் காட்டி, சங்கதியைக் கூறினாள். அவரும் ஆர்வத்தோடு வீட்டுப்படியை ஏறிக்கொண்டே என்னை வணங் கினார். அறிமுகம், முன்னுரை முதலிய எல்லாவற்றையும் இந்துமதி அங்கேயே முடித்துவிட்டாள். நான் வேற்று ஆள் அல்ல என்று கூறும் வகையில் அவர் என்னுடனே பேசத் தொடங் கினார்.

அன்று பகல் உணவு அவர்கள் வீட்டிலேயே முடிந்தது. அதன் பிறகும் அந்தத் தம்பதி என்னை அங்கிருந்து எழுந்திருக்க விடவில்லை. என் ஊரைப்பற்றிக் கேட்டார்கள்; என்னைப்பற்றியும் கேட்டார்கள். மாலையில் என்னை இருவரும் சாணைகட்டியின் உப்பளங்களுக்கு அழைத்துச் சென்றார்கள். மிகப் பரந்த வயல் களில் உப்பு நீரைத் தேக்கி, உலர வைத்து, சீராக்கி, உப்பை எடுப்பது அந்த இடத்தின் ஒரு சிறப்பு. மிக விரிந்த நிலப்பரப்பில்,

மேகத்தின் வெண்மையை மிஞ்சும் வகையில் உப்புக் குவியல்கள் அழகாகக் காணப்பட்டன. மாலை மங்கும்வரையில் நாங்கள் பல்வேறு உலக விஷயங்களைப்பற்றி அரட்டை அடித்துக் கொண்டே பொழுதைப்போக்கினோம். சூரியன் மறைந்த பிறகே வீட்டுக்குத் திரும்பினோம்.

இந்துமதிக்கும், என் நண்பரின் மகளான ஜலஜாட்சிக்கும் இடையே இயல்பிலும், குணத்திலும் மிகுந்த ஒற்றுமை இருப்பதைக் கண்டேன். உருவத்திலும் ஒற்றுமை இருந்தது. இந்துவின் நிறம் ஜலஜாட்சியைவிடச் சிறிது குறைவு. ஆனால் நடை, பேச்சு எல்லாம் அதே மாதிரி அழகாயிருந்தன. இருவருக்கும் இடையிலிருந்த முக்கியமான வேற்றுமை என்னவென்றால்—ஜலஜாட்சி மூன்று குழந்தைகளைப் பெற்றவள்; வாழ்க்கையில் போதுமான அளவு அனுபவம் அடைந்தவள். இந்த இந்துமதி வாழ்க்கையின் நுழைவாயிலில் நின்றிருக்கிறாள். இளமையின் இருண்ட பகுதி கழிந்து வாலிபத்தின் உதயம் ஆகியிருக்கிறது. அவளைக் கைப்பிடித்த கணவன் சதானந்தன் அவளுடன் ஒத்துழைக்கும் வாழ்க்கைத் துணைவனாகக் காணப்பட்டான். குறையில்லாத எளிமை இருவரிடத்திலும் இருந்தது.

அடுத்த நாள் காலையில் நான் சாணைகட்டியிலிருந்து பஸ்ஸில் புறப்பட்டபோது, அவர்கள் இருவரும் இணைந்து வந்து என்னை வழி அனுப்பி வைத்தார்கள். புறப்படும்போது இந்துமதி, "போட்டோ நினைவிருக்கிறதல்லவா?" என்று நினைவுபடுத்தினாள். குமட்டிக்கு நான் வந்த அந்த மூன்று நான்கு நாட்களில் பட்ட பெருமைகளையும், சிறுமைகளையும் மனத்தில் எடைபோட்டுக் கொண்டே சென்றேன். அந்தக் கணக்கில் நான் இலாபமடைந்தேன் என்றே எனக்குத் தோன்றியது. உலகில் பத்து நாட்கள் கஷ்டப்பட்டால், மாறாக இன்ப நாள் ஒன்று இருக்கிறதல்லவா? நூறு கண்ணீர்த் துளிகளுக்குப் பலன் ஒரு சிரிப்பல்லவா? அமைதியைக் குறைக்கும் ஆயிரம் நிகழ்ச்சிகளுக்கு இடையே அமைதி தரும் நிகழ்ச்சிகளும் சில உண்டல்லவா? அப்படியிருக்க என்னுடைய இந்தப் பயணத்தினால் எனக்கு இலாபமே உண்டாயிற்று. அதனாலோ என்னவோ, குமட்டிக்குத் திரும்பி வந்து நண்பர் சபாவந்தரிடம் விடைபெற்று, மறுநாள் காலையில் பஸ் ஏறி என் ஊருக்குத் திரும்புகையில் வழியில் தொல்லை ஏதும் ஏற்படவில்லை. போகும்போது ஏற்பட்ட பஸ் அனுபவமும், வெயிலின் கொடுமையும் திரும்பி வரும்பொழுது இல்லை. குமட்டியிலிருந்து

குந்தாபுரம் சென்றேன். அங்கிருந்து பயணத்தை ஆங்காங்கே நிறுத்தி, எல்லாக் கவலைகளையும் மறந்தவனாக என் ஊரை அடைந்தேன்.

வீட்டுக்கு வந்த பிறகும், ஒரு திக்விஜயத்தை முடித்துத் திரும்பியவனைப்போல, மனம் களிப்பில் மூழ்கியது. இப்போது நான் நண்பர் யசவந்தரின் முழு உருவத்தைக் கற்பனை செய்து கொள்ள இயலும். கற்பனையினால் ஏற்படக்கூடிய குறைகளெல்லாம் அதில் இருக்கலாம். ஆனால் அது அடிப்படையில்லாத கற்பனை அல்ல. ஒரே பக்கத்துச் சித்திரமும் அல்ல. நாணயத்தின் இரண்டு பக்கங்களையும் நான் பார்த்துவிட்டேன். அது செலாவணி அற்றுப்போன நாணயம். அதிலும் ஆயிரம் கைகளில் இருந்து அடிபட்டுத் தேய்ந்து, எழுத்தும் அச்சும் இழந்துவிட்ட, நசுங்கிய நாணயம். கழிந்துபோன வாழ்க்கையெல்லாம் அப்படிப்பட்டது தான். ஆனால், இது நாணயம், எப்படிப்பட்ட நாணயம் என்று கண்டுபிடிக்கக்கூடிய அளவுக்குத் தகவல்கள் எனக்குக் கிடைத்துள்ளன. அது எந்த உலோகத்தால் ஆனது? எந்தக் காலத்தைச் சேர்ந்தது? அச்சிட்டவர் யார்? அதன் மதிப்பு எவ்வளவு? செலாவணி நின்ற பிறகும் அதற்குக் கிடைக்கக்கூடிய விலை எவ்வளவு என்பதையும் சொல்லலாமல்லவா?

எனது இந்த நாணயம் செல்லாக்காசு அல்ல. மற்ற நாணயங்களைப்போல அது வெறும் அடையாளம் மட்டும் அல்ல. காகிதப் பணம் இருக்கிறதல்லவா . . . ஒரு ரூபாய், பத்து ரூபாய் முதலிய நோட்டுகள். அவை அவ்வப்போது ஒப்புக்கொள்ளப்பட்ட மதிப்பை உடையவை. ஒப்புக்கொண்டவர்களைத் தவிர மற்றவர்களுக்கு அவற்றில் காகிதத்தின் விலையும் இல்லை. அப்படிப்பட்டது, அல்லவே அல்ல; என்னுடைய உலோக நாணயம். நிக்கலோடு எதை எதையோ சேர்த்து, எந்த உலோகமும் கரைந்த பிறகு கைக்கு கிடைக்காமல் செய்த நாணயம் அல்ல. அது பழங்காலத்து முரட்டுச் செப்புக்காசும் அல்ல. நல்ல பித்தளையும் அல்ல. சிறிது செம்பு கலந்த பொன் நாணயமாகவே இருக்கவேண்டும். இது என் கற்பனை. இந்த அளவு பொன் இதில் இருக்கிறது. அதனால் இவ்வளவு இதிலிருந்து கிடைக்கும் என்று நாணயச்சாலையைப்போல நான் உறுதியாகச் சொல்லமாட்டேன். இதை இன்னும் வேறொரு உரைகல்லில் உரைத்துப் பார்க்கவேண்டும். அந்தக் கல் உரைகல்லாகவும் இருக்கவேண்டும்.

என்னுடைய ஒரே உரைகல்—யசவந்தர் எழுதிவைத்த நினைவுக் குறிப்பு. மறைக்காமல் அதில் எழுதியிருப்பதால் அது உரைகல் லாகப்பட்டது. மற்றொரு உரைகல் என்பது பூனாவிலிருந்த விஷ்ணு பந்த் காட்டி. அவர் அதற்குத் தகுந்தவர்தான் என்பதை அவரைப் பார்ப்பதற்கு முன்னமே சொல்லமாட்டேன் அல்லது இன்னும் நான்கே நாட்களில் பூனாவுக்குப்போய் அதை உறுதிப் படுத்திக்கொண்டு வருவேன் என்பதற்கான வாய்ப்பும் எனக்கு இல்லை. அதுவரை நான் அவருடைய நாட்குறிப்பை மட்டுமே கரைத்துக் குடிக்கவேண்டும்.

சரசியைப்பற்றி நேராகவோ, மறைமுகமாகவோ என் நண்பர் அதில் நான்கு வார்த்தைகளை எழுதியிருக்கமாட்டாரா? விருப்ப மான—இனிய நினைவுகளை மறக்கமுடியுமா? என்று நினைத்துத் தொடங்கினேன். ஆனால் அப்படி எழுதவில்லை என்பது மேலும் மேலும் அதைப் படித்துக்கொண்டேபோன எனக்குப் புலப் பட்டது. என்றாலும் மற்றொரு முறை ஆர்வத்தோடு அதைத் திறந்து, தொடக்கத்திலிருந்து கடைசிப் பக்கம் வரை படித்தேன். கடைசியாக இருந்த பக்கங்களில் 'சிரசியில் என் வீட்டில்' என்னும் சொற்களைப் பார்த்தபோது அச்சம் ஏற்பட்டது. சிரசி என்பது ஊர் அல்லவா? சுவாதிக்கு அருகில் இருந்த ஊர்—என்னும் எண்ணத்தில் முன்பு அதே பக்கங்களைத் திருப்பி விட்டிருந்த எனக்கு அந்த உண்மை தோன்றவில்லை. 'சிரசி என்பது சரசியே' என்னும் எண்ணத்தோடு அதை மீண்டும் ஒரு முறை படித்தபோது வியப்பாய் இருந்தது.

கடைசிப் பக்கத்தை நாட்குறிப்பின் அட்டையோடு ஒட்டியிருந் தார். அதைக் கிழித்துத் திறந்து பார்த்தால் அதே விஷயம் தொடர்ந்து காணப்பட்டது. வேண்டுமென்றே அவர் தாம் எழுதி யதை மறைத்து வைத்தார்—தம் வாழ்க்கையில் அவளுடைய நிலையை மறைத்து வைத்ததைப்போல; மறைவற்ற ஒரு 'ஸ்டாம்ப்' அளவுள்ள வரைகோட்டுப் படம் ஒன்று அதில் இருந் தது. அது சரசியின் அமைதி நிரம்பிய, கலைபொருந்திய அழகிய முகம். தமக்கு விருப்பமானால்—யசவந்தர் விரும்பினால்—அவ ரால் நல்ல ஓவியம் வரையமுடியும் என்னும் உண்மையை அந்தச் சிறு சித்திரம் எனக்கு எடுத்துக்கூறியது.

# பன்னிரண்டாம் அத்தியாயம்

"வாழ்க்கையில் நான் இன்பத்தைக் கண்டிருந்தால் அது சிரசி யில் உள்ள வீட்டில்; என்னை வளர்த்த பார்வதி அம்மாளின் கையில்.

''மல்லிகையைப்பற்றி நினைக்கும்போதெல்லாம்—அது தனக் காகவே வாழ்கிறது—மாமரத்திற்காக அல்ல என்னும் எண்ணம் என்னிடமிருந்து மறைந்து போகாது. மனத்துக்குப் பயிற்சி கொடுத்து—மாமரத்தைப்போலவே நாம்—அது என்னதான் சொன்னாலும் என்னையே சுற்றி வளர்ந்தது; அது பூக்கும் மலர்க ளெல்லாம் என்னுடையவையே என்று நினைத்துக்கொண்டாலும் அந்தக் கொடி என்னுடையதாகவில்லை. கொடியில் மலர்ந்த பூக்களும் என்னுடையவையாகவில்லை. அதை விட்டுக் கழன்ற பூக்களும் உண்மையில் என்னுடையனவல்ல; அந்தக் கொடியி னுடையனவுமல்ல. முடித்துக்கொண்டவர்களுடைய பூக்க ளல்லவா அவை? ஆனாலும், அந்தப் பூக்களுக்காவது என் நினைவு இருக்கலாம்; கொடிக்குக் கடைசிவரை இல்லை.

''சிரசி அப்படியல்ல—உலகத்தின் பழிக்கு ஆளான குல மானாலும், குலம் மட்டுமே சீலத்தை உறுதிப்படுத்துவதில்லை. சுரைக் கொடியின் ஒவ்வொரு காயும் ஒவ்வொரு வகை. அதன் ஒரு காய், கள் குடிக்கிறது; மற்றொன்று தம்பூரின் இனிய நாதத் துக்குக் காரணமாகின்றது. சிரசி அப்படிப்பட்ட சுரைக்காய். தம்பூராவின் ஒப்புமை என் மனத்தில் எப்படி வந்தது? அவள் எனக்காக அதை நாள்தோறும் பிடித்து, அதன் தந்திகளை மீட்டிப் பாடியதனாலேயா? பணத்தைக் கொடுத்துப் பாட்டைக் கேட்க லாம். பணத்தைக் கொடுத்து உடல் சுகத்தை அனுபவிக்கலாம். மனம் சுகமடைய வேண்டுமானால், இதயம் அமைதிபெற வேண்டு மானால், மனத்தைக் கவர வல்லவர்கள் தேவை. நம்மோடு கருத்திலும் ஒன்றுபடுகிறவர்கள் தேவை.

''சிரசி அப்படிப்பட்டவள் அல்லவா? ஆனாலும், விட்டுவிட்டு வந்தேன். யாத்திரைக்குப் புறப்பட்ட என்னை அவளும் வழி யனுப்பி வைத்தாள். அவள் தடுத்திருந்தால் என் நிலைமை என்ன வாகியிருக்குமோ? எந்த வகையிலாவது என்னை, வீட்டுப் பசுவைப் போல, கட்டிக் கறந்து இருக்க முடியும். 'உனக்கு என்ன வேண்டும்'—என்று கேட்டால், 'நீங்கள் வைத்துள்ள அன்பே போதும்' என்றாள். இத்தனை நாட்கள் ஆனபிறகும், என் நினைவி

லிருந்து அவளுடைய குணமும் தாராள மனமும் என்றும் மறையாது. அவளுடைய தியாகம் பெரிது. 'நாலு குழந்தைகளுக்குச் சங்கீதம் சொல்லிக் கொடுத்து என்றால் வாழ முடியுமல்லவா? நீங்கள் எவ்வளவு கஷ்டத்தைத்தான் தாங்குவீர்கள்?' என்று சொல்வதானால் சிரசி உண்மையிலேயே அசாதாரணமானவள்தான். அவள் வைத்த அன்புக்குத் தகுந்த குணம் என்னிடமிருந்தது என்றே நான் எண்ணியதில்லை.''

இந்தச் சொற்களிலிருந்தும், என் நண்பரின் கருத்திலிருந்தும், இந்துமதியின் தாய் எப்படிப்பட்டவள் என்பது என் கண்ணுக்குப் புலப்பட்டது. இந்துவின் முகம் மிகுதியாகத் தந்தையைப் போலிருந்தது. அதன் நிறமும் அப்படியே. குணத்தை நினைத்த போது அதுவும் அப்படியே இருக்கலாம் என்று தோன்றுகிறது. அவளுடைய அண்ணனைப்பற்றி இப்படியொரு நல்லெண்ணம் எனக்கு ஏற்படுமாறில்லை. அற்பப் பணத்தாசையால் செத்துப் போன தாயைப் பிழைக்க வைத்துக் காட்டியவனுடைய நடத்தை என் மனத்தில் வெறுப்பை உண்டாக்கியது. சம்பு ஹெக்கடே ஒரு வகையில் என்னை ஏமாற்றினான் என்றால், இவன் மற்றொரு வகையில் என்னை ஏமாற்றினான்.

நான் ஊருக்குத் திரும்பி வந்து ஒரு மாதமாயிற்று. கோடையின் கொடுமையை யெல்லாம் கார்காலம் தணித்துவிட்டது; சூழ்நிலையில் மற்றொரு வகையான அழகு தோன்றியிருக்கிறது. என் முகவரியினைக் கேட்டு வாங்கி வைத்துக்கொண்டிருந்த இந்துமதி, ''எங்கள் அப்பாவின் போட்டோவை அனுப்புவதற்கு மறந்துவிட்டீர்களல்லவா?'' என்று எனக்கு நினைவூட்டியது மட்டுமின்றி, தன் தாயின் படத்தை, அண்ணனுக்கு எழுதி வரவழைத்து அனுப்பியிருந்தாள். இந்த இரண்டையும் இணைத்து ஒரு படம் வரையக் கூடுமானால், எவ்வளவு நன்றாக இருக்கும் என்று ஆசைப்பட்டேன். அதற்குத் தகுந்த ஓர் ஓவியன் எனக்குக் கிடைக்க வேண்டுமல்லவா? அந்த ஓவியருக்கு நானே படத்தில் காண்பவர்களுடைய இயல்பை எடுத்துக் கூறவேண்டும். அப்படிச் செய்தால்தான் வெறும் உருவம் மட்டுமல்ல, நிறமட்டுமல்ல, எல்லா வகையான இலக்கணங்களும் கூடிய ஒரு சிறந்த ஓவியம் உருவாகும். அந்த நேரத்தில் என்னுடைய ஓவிய நண்பர் ஒருவரை நான் நினைவுபடுத்திக்கொண்டேன். இந்துவுக்கு என் நண்பரின் நினைவோடுகூடவே மஞ்சைய்யன் மனைவி ஜலஜாட்சியின் நினைவும் எனக்கு வருவது இயல்பாகிவிட்டது. அவர்கள்

வீட்டுக்கும் போட்டோவின் பிரதி ஒன்றை அனுப்பி வைத்தேன். ஜூன் மாதம் நெருங்கியதால், ''யசவந்தன் தேர்வில் வெற்றி பெற்ருனு? ஜயந்தன் ஹைஸ்கூல் போய்ச் சேர்ந்தானு?'' என்று கேட்டு, மாதம்தோறும் அனுப்பும் இருபத்தைந்து ரூபாயுடன், மேலும் ஓர் இருபத்தைந்து ரூபாயை அனுப்பி வைத்தேன். ஜலஜாட்சி, யசவந்தனைக்கொண்டே என் கடிதத்திற்குத் தகுந்த பதிலை எழுதுவித்திருந்தாள். பையன் தேறியிருந்தான். சிறிய தம்பிகளும் தேர்வில் வெற்றிபெற்றிருந்தனர் என்னும் சங்கதிகளோடு, ''தாத்தாவின் போட்டோவைக் கண்டு நாங்கள் எல்லோரும் மகிழ்ந்தோம். அம்மாவின் கண்ணில் நீர் வந்தது. அப்பா அதை இப்பொழுது தாம் படுக்கும் அறையிலேயே மாட்டி வைத்து, அதைக் கடவுளாக நினைத்து நாள்தோறும் ஒரு பூவை அதற்குச் சூட்டுகிருர்'' என்றும் தெரிவித்திருந்தான். தத்தம் பெரியவர்களிடம் இருக்கவேண்டிய மரியாதை அதுதான். இப்போதைய கடனைத் தீர்க்கமுடியாதவர்கள், பழைய கடனையா தீர்க்கப்போகிருர்கள்? கண்ணுக்குக் காணுத கடவுளைக் கற்பித்துக் கொள்ள இயலுமா? பக்திக்கும் அன்புக்கும்கூட ஓர் அடிப்படை வேண்டும்.

இந்துவினிடமிருந்தோ ஆனந்தக் கண்ணீருடன் கூடிய நீண்ட கடிதம் ஒன்று வந்தது: ''நான் அவரைப் பார்த்தது மிகவும் சிறியவளாக இருந்தபோது. அவருடைய தொடைமேல் ஏறிக் குதித்து விளையாடியிருந்தாலும் அவருடைய முகத்தின் நினைவு இந்தப் படத்தைப் பார்த்த பிறகு தானுகவே திரும்பிவந்தது. உங்கள் போட்டோ வந்த அன்று எனக்கு விருந்து உண்டதைப் போல இருந்தது. உண்மையில் அன்று நான் உணவு உண்டதே நினைவில்லை. நான் அவருடைய மகள் என்னும் பெருமையிலேயே மிதந்தேன். எங்கள் அம்மா இருந்திருந்தால் அந்தப் படத்தை மார்பில் அணைத்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டிருப்பாள். உலகம் எதை வேண்டுமானுலும் சொல்லட்டும். எங்களுடையவர் எங்களுடையவரே யல்லவா?'' என்று எழுதியிருந்தாள்.

தொடர்ந்து என் தலையைச் சுற்றவைத்துக்கொண்டிருந்த விஷயம் ஒன்றே ஒன்று. அது விஷ்ணுபந்த் காட்டியை சென்று சந்திப்பது. அவர் இருக்கும் இடத்திற்கே போய். அவரைச் சந்தித்து அவருடன் பேசிப் பார்த்து என் மனத்தின் பசியைத் தீர்த்துக்கொள்வதற்கு என்றைக்கு வாய்ப்பு நேருமோ? பூனு எனக்கு அருகிலுள்ள ஊர் அல்ல, ஆகவே பின்வருமாறு எழுதி

னேன்: ''காட்டி அவர்களே, உங்கள் புத்தகத்து வேலை, ஆராய்ச்சி, எழுத்து முதலியவை எதுவரை வந்திருக்கின்றன? நான் உங்களிடம் வந்து அதைப்பற்றிப் பேசுவதற்கு உரிய நேரம் இன்னும் எவ்வளவு தொலைவில் இருக்கிறது என்பது எனக்கே தெரியாது. அதுவரை என்னுடைய ஆவலைக் கட்டுப்படுத்தி வைத்திருப்பது என்பது இயலாததாயிருக்கிறது. உங்கள் உடல் நலம் சரியாக இருந்தால் சுருக்கமாகவாவது—யசவந்தருக்கும் உங்களுக்கும் நட்பு எப்படி உண்டாயிற்று? எந்தெந்த விஷயங் களில் அவருக்கு விருப்பம் இருந்தது? மதம், அறம், நம்பிக்கை, பக்தி முதலியவற்றைப்பற்றி அவர் உங்களிடம் விவாதித்தது உண்டா? நீங்கள் தர்ம சாஸ்திரம்பற்றி எழுதத் தொடங்கியிருக் கிறீர்கள். நான் அறிந்தவரை அவருக்குப் பழைய நம்பிக்கைகள் பலவற்றின்மீது நம்பிக்கையில்லை. நீங்கள் பழமையில் நம்பிக்கை உள்ளவர்களாகத் தோன்றுகிறீர்கள். உங்கள் மனமும், அவ ருடைய மனமும் எப்படி இணைந்தன? இவற்றையெல்லாம் கடிதத் தில் எழுத முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. என்றாலும், நீங்கள் படித்தவர்கள், பத்தே வரிகளில் எழுதி அனுப்பினாலும் எனக்கு மகிழ்ச்சியாக இருக்கும். இந்த மாதப் பணத்தை இந்தக் கடிதத்துடன் போஸ்டல் ஆர்டர் மூலம் அனுப்பி இருக்கிறேன். இந்தப் பணத்திற்கும் நான் கேட்ட கேள்விகளுக்கும் தொடர்பு உண்டென்று, தயவுசெய்து நினைத்துக்கொள்ளாதீர்கள்.'' ஒவ் வொருநாளும் அவரிடமிருந்து பதிலை எதிர்பார்த்துக் காத் திருந்தேன்.

பத்தே நாட்களில் அவரிடமிருந்து எனக்கு ஒரு நீண்ட கடிதம் வந்தது. என் மனத்துக்கு மிகவும் திருப்தியாயிருந்தது. ஆனால், அதனால் என் வேட்கைத் தணிவதற்குப் பதிலாக அதிகமாயிற்று என்று சொன்னாலும் தவறாகாது. இதுவரை விஷ்ணு காட்டி அவர்கள் எழுதிய கடிதங்களெல்லாம் வெறும் கார்டுகள். 'நலமா யிருக்கிறேன்' அல்லது 'உடல் நலமில்லை,' 'எழுத்து வேலையே அதிகமாயிருக்கிறது; உங்கள் உதவிக்கு நான் மிகவும் கடன்பட் டிருக்கிறேன்' என்பது முதலான சிறு சொற்களில் முடிந்துகொண் டிருந்தன. சென்ற மர்தத்தில் ஒரு கார்டில் அவர் தம் மனத்தில் எழுந்த ஒரு சந்தேகத்தைக் குறிப்பிட்டிருந்தார். ''யசவந்தர் என்மீது கருணைகூர்ந்து, 'உங்களுடைய இந்த வேலை முடியும் வரையில் மாதத்துக்கு இருபத்தைந்து ரூபாய் தருகிறேன்' என்று கூறியிருந்தார். அவருக்கு இது அதிகமாகத் தோன்றுவிட்டாலும்

பெற்றுக்கொள்ளும் எனக்குச் சிறிது கஷ்டமாக இருக்கிறது. இப்பொழுது எனது மருமகனும் சிறிது பணம் கொடுத்து வருகிறுன். என் மகன் வளர்ந்து பெரியவனுகி ஒரு வேலையைத் தேடிக் கொண்டு இருக்கிறுன். என் எழுத்து வேலையும் முடியும் நிலையில் இருக்கிறது. அதை வெளியிடும் சுமை மட்டும் மிகவும் பெரியது. இதனுல் என் மனம் கலங்கியிருக்கிறது'' என்று எழுதியிருந்தார். அந்தச் சங்கதியைப்பற்றி முன்பின் தெரியாமல் அவருக்கு எந்த விதமான பதிலும் நான் எழுதவில்லை. அவர் என்னிடமிருந்து தமது புத்தக வெளியீட்டுக்காகப் பணம் கேட்கிருரோ என்னும் ஐயமும் எழுந்தது. ஆனுல், கடிதத்தின் தொடக்கத்தில் எழுதியவற்றிலிருந்து, தாமாகவே போய் கைநீட்டும் பழக்கம் அவருக்கு இல்லை என்ற எண்ணமும் தோன்றியது. அவருடைய இயல்பு, ஒழுக்கம் முதலியவற்றைப்பற்றி நாஞகவே எதையும் கற்பனை செய்துகொள்வதற்கில்லை. ஆகவே, அதை அங்கேயே விட்டுவிட்டிருந்தேன். அவருடைய இந்தக் கடிதத்தில் மேலும் விவரங்கள் இருந்தன. முழுக் கடிதத்தையும் நான் இங்கே தரப்போவதில்லை. அதன் சுருக்கத்தை மட்டும் தருகிறேன். 'பெருமகனே' என்னும் அலங்காரமான சொல்லுடன் அவருடைய கடிதம் தொடங்குகிறது. வடமொழிப் பண்டிதர்கள் சொற்களை வாரி வழங்குவதில் வள்ளல்கள் என்று எண்ணிச் சிரித்து அதைப் படித்தேன்: ''நீங்கள் யசவந்த ராயரைப்பற்றி அறிவதில் காட்டும் ஆர்வம் மிகவும் இயல்பானது தான். நானும் எனக்குத் தெரிந்ததைச் சொல்லவேண்டுவது பொருத்தம்தான்! ஆனுல்? அவரை நான் தெரிந்துகொண்டேன் என்னும் ஆணவம் எனக்கு இல்லை. கருத்துப்போக்கில் அவர் வடதுருவம் என்ருல், நான் தென்துருவம். நான் நம்பிக்கை மிகுந்த வைதீகன். பழைய பரம்பரையில் வந்தவன், ஆழ்ந்த நம்பிக்கைகொண்டவன். உங்கள் நண்பரை நீங்கள் அறிவீர்கள். அவர் தம்முடைய நம்பிக்கையையே தோண்டியெடுத்து, தட்டிப் பார்த்து எடைபோட வல்லவர். வாதத்தில்—என்னைச் சீண்டி, கோபமூட்டி, 'நீங்கள் பண்டிதர்; தந்தை நட்டு வளர்த்த ஆல மரத்தை அணைத்துக்கொள்கிறவர்களைப்போல ஆயிரம், இரண்டாயிரம் வருடங்களாக வேரும், கிளையும், கொம்பும் நிறைந்த மரத்தை விடுவதில்லை என்று கெட்டியாகப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறவர். சிந்திக்கத் தொடங்கினுல் அல்லவா உங்களுக்குக் கவலை?' என்று என்னைக் கண்டு கேலி செய்பவர்.

''மகாபலேசுவரத்துக்கு அவர் முதல் தடவை வந்தபோது . . . தனியாகவே வந்திருந்தார். தங்குவதற்கு இடம் தேடிக்கொண்டிருந்தார். என் குடிசையில் ஒரு பாதியை வேண்டுமானால் கொடுக்கிறேன், வாடகைக்கு என்று சொன்னேன். எங்கள் வீட்டு நெருக்கடியைப் பார்த்து, 'எனக்கொன்றும் பெரிய பங்களா தேவையில்லை. மன அமைதிக்காக நான் இங்கே வந்திருக்கிறேன். இந்தப் பாறைகள், குன்றுகளைக் கண்டால் மகிழ்ச்சி ஏற்படுகிறது. விருப்பமிருந்தால் இங்கே உட்கார்ந்து படம் எழுதுவேன். இல்லாவிட்டால் இல்லை' என்று அவர் உறுதி செய்து, இரண்டு மாத காலம் எங்கள் வீட்டில் இருந்தார். அப்போது அவரே சமைத்துச் சாப்பிட்டார்.

''என்ன இருந்தாலும் மனித வாழ்க்கைதானே! வயதாகி விட்டது, அவ்வளவு உறுதியான உடம்பும் அல்ல. என்னைப் போன்று நோயாளியுமல்ல. என்றாலும் தானே சமைத்துச் சாப்பிடுவது கஷ்டமல்லவா? நாட்களைக் கழிக்கவேண்டுமானால், மனிதன் என்பவனுக்கு மனிதத் துணை வேண்டும். இவ்வாறு தனிமை கொடுமையாகத் தோன்றும்போது என் அறைக்கு வந்து, 'பண்டித்ஜி, என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்பார். நானும் சொல்வேன். இருமல், இரைப்புக்காளான நான் உடல் வருந்தி வேலைசெய்யக் கற்றவனல்ல. பெரியவர்களிடமிருந்து கற்ற வடமொழிப் பயிற்சியால் தர்ம சாஸ்திரங்களில் அக்கறையும் மதிப்பும் உடையவன். அவற்றையே நான் அவ்வப்போது படித்துவந்தேன். நூற்றுக்கணக்கான நூல்களைக் கற்றிருக்கிறேன். நான் கற்றதெல்லாம் காற்றில் போகக்கூடாது; எனக்குத் தெரிந்தவற்றைத் தெரியாதவர்களுக்காக, அதுவும் வடமொழி தெரியாத எங்கள் மராட்டி மக்களுக்கு எடுத்துச் சொல்லலாம் என்று ஒருநாள் என் மனத்தில் தோன்றியது. அப்படியாக, 'நமது தர்ம சாஸ்திரங்கள்' என்னும் ஒரு நூலை எழுதத் தொடங்கினேன். யசவந்தர் கேட்ட கேள்விக்கு, 'இப்படி ஒரு வேலையை மேற்கொண்டிருக்கிறேன்' என்று தெரிவித்தேன்.

''அன்று முதல் அவர் ஒரு நாளைக்கு ஒரு முறை என் அறைக்கு வந்து ஒரு மணி நேரம் இருப்பார். 'இது என்ன நூல்? இது என்ன ஓலை? அதில் என்ன எழுதியிருக்கிறது? இது எந்தக் காலத்தைச் சேர்ந்தது?' என்று கேள்விகள் கேட்பார். நான் எனக்குத்

தெரிந்தவற்றைக் கூறுவேன். ஒருநாள் பகவத் கீதையைப்பற்றிய கேள்வி எழுந்தது.

'ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா இப்படிச் சொல்லியிருக்கிறார்' என்றேன் நான்.

'நீங்கள் அதைக் கேட்கவில்லை அல்லவா?' என்றார் அவர். 'பகவத் கீதையின் காலம் எது?' என்றும் கேட்டார்.

'மகா பாரதத்தின் காலம்; ஐந்தாயிரம் ஆண்டுகளாவது ஆகியிருக்கலாம்.'

'பாரதத்தின் ஒரு பகுதிதானே கீதை?'

'ஆம்.'

'வியாசனின் காலம் என்ன?'

'பாரதத்தின் காலம்.'

'அந்தப் பேச்சை விடுங்கள். வரலாற்று நோக்கில் வியாசன் என்னும் கவி மகா பாரதத்தை எழுதிய காலம் எது என்பதாக உங்களில் படித்தவர்கள் சொல்லுகிறார்கள்?' என்று கேட்டார்.

நான் வைத்தியா அவர்களுடைய கருத்தைச் சொன்னேன்.

'அப்படியானால், கீதை அதே காலத்தைச் சேர்ந்ததாகும். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கண்ணன் வாய்மூலமாக வியாசன் சொல்லுவித்த கீதை இது!'

'ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா' என்று நான் சொல்வதற்குள்ளேயே அவர், 'நான்கைந்தாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால் வியாசன் வாய்வழியே சொல்லுவித்தானா?' என்று வாக்கியத்தை முடித்துவிட்டார்.

'நான் அந்த நோக்கில் பார்க்கவில்லை' என்றேன்.

'நீங்கள் வேதங்களை பிரம்மனே தானாக வந்து சொன்னான்—என்று சொல்கிறவர்கள்.'

'இல்லையா, பின்பு?'

'அப்படியானால், எனக்கும் உங்களுக்கும் அப்படிப்பட்ட விஷயங்களைப்பற்றி விவாதமே தேவையில்லை.'

''இப்படிப்பட்ட எவ்வளவோ விவாதங்கள் எங்களிடையே ஒவ்வொருநாளும் நடந்துவந்தன. அதனாலேயே அவர் வட துருவம், நான் தென் துருவம் என்று சொன்னேன். எனக்கு வியப்பை அளித்த மற்றொன்று என்னவென்றால், நான் இந்த ஏழ்மையிலும் தர்ம சாஸ்திரத்தைப்பற்றி ஒரு மராட்டி நூல் எழுதுவதைக் கண்ட அவர், 'எழுதுங்கள்; அப்படித்தான் எழுதவேண்டும்' என்று ஊக்கம் ஊட்டினார் என்பதுதான். 'யசவந்தரே, உங்கள்

போக்கு எனக்குப் புரியவில்லை. என் வழியை நீங்கள் ஒப்புக் கொள்வதில்லை. தர்ம சாஸ்திரங்கள் ஆயிரமாயிரம் மக்களின், பல்வேறு நூற்றாண்டுகளின் நம்பிக்கை என்கிறீர்கள். அதையே எழுதுங்கள் என்றும் சொல்கிறீர்கள்!' என்று என் வியப்பைத் தெரிவித்தேன். அவர் என்னைக் கேலி செய்வார் என்றே நினைத் தேன். ஆனால் அவர் கேட்டார்: 'காட்டி அவர்களே, நீங்கள் நானல்ல அல்லவா?'

'அதெப்படி முடியும்?'

'அதற்காகவே நீங்கள் எழுதவேண்டும். என் நம்பிக்கை எனக்கு; உங்களுடையது உங்களுக்கு. நீங்கள் சொல்வதே உண்மையாக இருக்கலாம். நான் சொல்வதே உண்மையாகவும் இருக்கலாம் அல்லது இருவருமே தவறாகவும் இருக்கலாம் அல்லது நம்முடைய எண்ணப்போக்கில் உண்மையும் பொய்யும் கலந்தும் இருக்கலாம்.'

'இருக்கலாம்.'

'ஒப்புக்கொள்கிறீர்களா?'

'ஆம், ஒப்புக்கொண்டேன்.'

'அப்படியிருந்தாலும், உங்கள் வாழ்க்கை, உங்கள் சிந்தனை நமது மக்களுக்கு கிடைக்கவேண்டும். நாம் எவ்வளவுதான் அறிஞர்களாக இருந்தாலும், நம் கருத்து எவ்வளவு தான் சரியாக இருந்தாலும், ஒவ்வொரு உயிரும் தான் கண்ட ஒளியில் நடந்து செல்வதே நியாயம். நம் அனைவரின் ஒருங்கிணைந்த வாழ்விற்கு நாம் செலுத்தவேண்டிய கடன் அது. இதுவே உறுதி, அதுவே உறுதி என்று மற்றொருவரின் கழுத்தை நெரித்து, பேச்சைக் கட்டுப்படுத்துவது சமுதாயத்தையே அழிப்பதாகும்' என்றார்.

''எனக்கு அவருடைய பேச்சைக் கேட்டு மிகவும் வியப்பு ஏற்பட் டது. படித்தவர்கள் கூட்டத்தைச் சேர்ந்த எங்களிடையேயும், நமது ஆசிரியர்கள் என்று பெயர் பெற்றவர்களிடையேயும், தொடக்கத்திலிருந்து வந்த குறைபாடு என்னவென்றால்—தான் கூறும் வாதமே சரியானது, தான் கூறிய பொருளே உண்மை என்பதுதான். மற்றதெல்லாம் மூடர்கள் நிரம்பிய உலகம், அறி வற்றவர்களுடைய கூட்டம்—என்னும் எண்ணம் பரம்பரையாக வளர்ந்து வந்திருக்கிறது. ஆயிரம் கோடி கருத்துக் குழப்பங்களில், உண்மை தனது ஆற்றலினாலேயே நிலைத்து நிற்கவேண்டுமே தவிர, நம் அதிகாரத்தினாலோ, எதிரியின் வாயை அழுத்தி மூடிவிடுவத னாலேயோ, குதர்க்கத்தினாலேயோ நிலைத்து நிற்காது என்று எனக்

குத் தோன்றியது. அந்த விஷயத்தில் என் கண்ணைத் திறந்தவரே யசவந்தர்தான். இன்னும் என்ன எழுதுவது அவரைப்பற்றி? அவர் மிகவும் பெரிய மனிதர். கண்ணில் தெரிவதுமட்டுமல்ல, அவருடைய உருவம். நான் காணமுடியாத அளவு உயர்ந்து நின்ற உருவம் அவருடையது.

''அதன் பிறகு 'இதே வேலையை ஊக்கத்துடன் தொடருங்கள்; நீங்கள் செய்யவேண்டிய வேலையை நீங்களேதான் செய்யவேண்டும். அதிகமான உதவி என்னால் செய்யமுடியாவிட்டாலும், காகிதம், மை, அடிப்படைத் தேவையான நூல்கள் முதலியவற்றிற்கு ஆகும் பணத்தை நான் கொடுக்கிறேன்' என்று சொன்னார். அவருடைய உதவியின் பயனே நீங்கள் மாதந்தோறும் கொடுத்து வரும் உதவித் தொகை. அவரும் அப்படியே கொடுத்து வந்தார்.

''இப்போது எனக்கு ஒரு பெரிய அச்சம் தோன்றியிருக்கிறது. இந்த மாதத்தின் தொடக்கத்தில்தான் ஐந்நூறு பக்கங்களையுடைய நூலைக் கஷ்டப்பட்டு எழுதி முடித்தேன். பழமைவாதி நான் என்று முன்பே சொன்னேன். யசவந்தர் என் கருத்துக்களையெல்லாம் அசைத்து, 'இந்தக் காலம் எது? முதலில் சொன்ன சொற்கள் யாருடையவை? அவை யாவை? பிறகு சொன்னவர்கள் யார்? இந்தச் சுலோகத்துக்கு இதேதான் பொருள் என்று எப்படி முடிவுகட்டுகிறீர்கள்?' என்று துளைத்ததை நினைக்கும் போது, நான் மேற்கொண்ட வேலையில் இருந்த கஷ்டம் எனக்குத் தெரிந்தது. நான் செய்யும் வேலையிலும், பல விஷயங்களில் எனக்கே ஐயம் ஏற்படத் தொடங்கியது என்றாலும், எனக்குத் தெரிந்தது தவறோ, சரியோ, மக்களுக்கு முன்னால் இடுகிறேன். படித்தவர்களுக்கு முன்னால் வைக்கிறேன்.

''உங்கள் வரவை நான் என்றைக்கு எதிர்பார்க்கலாம்?'' என்பதாக அவர் தம் கடிதத்தை முடித்திருந்தார்.

மழைக்காலம் கழிந்தது. அங்கொரு மேகம், இங்கொரு மேகமாக வானில் சிதறி மிதந்துகொண்டிருந்தாலும், எங்கள் நாடு பச்சைப் பசேலென்று ஒளிவீசி, மழைநீரால் அழுக்கு நீங்கி, குளிர்ச்சி தந்தது. குளிர், காற்று, மழை ஆகியவற்றிற்கு அஞ்சி அடங்கி ஒடுங்கி வாழ்ந்துகொண்டிருந்த பறவைகளும், விலங்குகளும் இப்போது சுயேச்சையாக மரம் விட்டு மரம் தாவி விளையாடத் தொடங்கின. மிகுதியாகக் கிடைத்த உணவு அவைகளின் கஷ்டத்தையெல்லாம் போக்கிவிட்டது. பெயர் தெரியாத என்ன

ணற்ற பறவைகள், இசைக் கலைக்குப் பிடிபடாத பல்வேறு கீதங்களை இசைக்கின்றன. இயற்கை அவைகளின் குரல் வழியே உற்சாகத்தின் கானத்தை எழுப்புகிறது. இதுவரை மேகங்களின் மறைவில் கண்ணாமூச்சி விளையாடிக்கொண்டிருந்த கதிரவன், இப்போது இயற்கைத் தேவி பூண்டிருந்த அழகைக் கண்டு மகிழ்ந்து நீல வானில் மிதந்து வருகிறான். சுற்றுப்புறமெல்லாம் இவ்வளவு பொங்கிப் பூரித்திருக்கும்போது, மனிதன்மட்டும் அலுப்புடன் படுக்கையில் கிடந்து தூங்க இயலுமா?

எனக்குப் பம்பாயின் நினைவு வந்தது. போரின் காரணமாக எங்களூர்க்கும் பம்பாய்க்கும் படகுப் போக்குவரத்து நின்றுவிட்டது என்றாலும், போய்வருவது என்று முடிவு செய்தேன். பஸ் பிரயாணத்தைத் தொடங்கினேன். அதில் ஏறி, சஹ்யாத்திரியை அடைந்தேன். அங்கிருந்து மலை நாட்டைக் கடந்து முன்னேறினேன். கடூரில் இரயிலைப் பிடித்தேன். அந்தப் பகுதியில் எங்களூரின் அல்லது மலைநாட்டின் மழைவளம் இல்லை. என்றாலும் மழைக் காலம உதவிசெய்தது. வழிநெடுகிலும் சோளம், பருத்தி, எள் முதலியன விளைந்து பச்சைக் கம்பளியை விரித்திருநதன. இரயில் வண்டியில் சன்னல் ஓரத்தில் உட்கார்ந்தேன். காற்று வீசும் போது, இந்தப் பச்சைக் கடலில் அலைகள் உண்டாகும்போது நம் மனத்திலும் இன்ப அலைகள் எழுகின்றன. அதனால் பிரயாணத்தின் களைப்பே நமக்குப் புலனாவதில்லை. பெல்காம் நகரம் வரும்வரையில் பசுமையின் அழகே அழகு! அதன் பிறகு வந்தது இருள். பெல்காம் நகரில் நானிருந்த இரயில் பெட்டியில் மற்றவர்கள் நுழைந்து, நெருக்கித் தொல்லை தரவில்லை. சுகமாகப் படுத்துத் தூங்கினேன். விடியும்போது பூனாவில் எழுந்தேன்.

விஷ்ணுபந்தர் வெளியே செல்லாமல் தமது வீட்டையே சுற்றி வரும் மனிதர் என்று அவருடைய கடிதங்களிலிருந்து நான் தெரிந்துகொண்டிருந்தேன். இரயிலிலிருந்து இறங்கி ஒரு குதிரை வண்டியில் ஏறி, சனிவார்பேட்டையில் இருந்த அவர் வீட்டுக்குப் போனேன். நான் போனபோது அவர் வீட்டில் இல்லை. அவர் இருப்பது மருமகன் வீட்டில். வீட்டில் மகளும், மருமகனும் இருந்தார்கள். ''காட்டி அவர்கள் ஏதோ வேலை காரணமாக நாசிக் போயிருக்கிறார்'' என்னும் செய்தி அவர்களிடமிருந்து கிடைத்தது. ''வருவது எப்போது?'' என்று கேட்டேன்.

''நாளைக்கே வந்துவிடுவார்.''

நான் யார் என்பதைப்பற்றி அவர்கள் கேட்டதால் சொல்ல வேண்டியதாயிற்று. பந்த் அவர்கள் வரும்வரை நான் தம் வீட்டி லேயே தங்கியிருக்கவேண்டுமென்று அவர்கள் வற்புறுத்தினர்கள். அவரில்லாதபோது, அங்கே தங்குவது சரியானதாக என் மனத்துக் குப் படவில்லையாகையால், ''இன்னும் எட்டே நாட்களில் வருவேன்; கண்டிப்பாகத் திரும்பி வருவேன்'' என்று உறுதி கூறினேன். அவர்கள் கொடுத்த சிற்றுண்டியை ஏற்றுக்கொண் டேன். பந்த் அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதிவைத்துவிட்டு, அங்கிருந்து அடுத்த இரயிலிலேயே பம்பாய்க்குப் பறந்தேன்.

என் மனத்தில் உற்சாகம் பெருக்கெடுத்தால், சலிப்புமிகுந்தால் நான் பம்பாய் நகரத்தில் நாலைந்து நாட்கள் தங்கிவிடுவேன். எங்கள் ஊர், மக்கள் கூட்டமும், இரைச்சலும் குறைவாயுள்ள ஊர். ஆனல் பம்பாய், பம்பாய்தான்! இலட்சக்கணக்கான மக்கள் தம்முடையதாக்கிக்கொண்ட அந்த நகரம் மக்கள் காடு ஆகும். என் நண்பரான யசவந்தரின் சொற்களில் கூறுவதானல்— காடு பெரியதானல், செடி, கொடி மூலிகைகளின் தொகையும் அதிகமாயிருக்கும். எந்த மூலிகை மருந்துச் செடியானலும் அங்கே காணக்கிடைக்கும்; செடிகளின் அடையாளம் நமக்குத் தெரிந்தால், எதை வேண்டுமானலும் பெறலாம்.

அவ்வாறே நான் அந்த நகரத்தில் சில செடிகளை அடையாளம் கண்டுகொண்டேன். செடி என்றுல் மனிதர்தான். ''பம்பாய் நகரத்தை விட்டு நகரமாட்டேன்; நான் பிறந்ததும் இங்கேயே; பிழைத்ததும் இங்கேயே; சாவதும் இங்கேயே'' என்று முடிவு செய்துகொண்டுள்ள என் நண்பர்கள் பலர் இருக்கிறுர்கள். அத்தகைய மனித மரங்களைப் பார்ப்பதில் நேரம் கழித்தேன்.

இனி, நான் மனத்தில் ஏற்றுவந்த வேலை ஒன்று இருக்கிற தல்லவா? நான் விரும்பித் தேடிவந்த ஓவியர் ஒருவர் இருக் கிறுர் . . . வந்த முதல் நாளே அவர் வீட்டுக்குச் சென்று, அவரைக் கண்டு, ''இத்தனை தடவை வந்ததைப்போல இப்போது வரவில்லை. உங்களைப் பரீட்சை செய்வதற்காக வந்தேன்'' என்று பெருமையடித்துக்கொண்டு, என் பையிலிருந்து யசவந்தராயர் எழுதிய சில ஓவியங்களை எடுத்து அவர்முன் இட்டேன். அவற் றுடன் யசவந்தராயரின் போட்டோ ஒன்றும் இருந்தது. அந்த நண்பர் அந்தப் போட்டோவைக் கவனிக்கவில்லை. அதை எடுத் துப் பையில் போட்டுக்கொண்டேன். நண்பர் ஆர்வத்துடன் பதினைந்து நிமிட நேரம் ஒவ்வொன்றையும் பார்த்தார். 'பசு—

எருமைக் கன்று,' 'தாதா,' 'ரீமா'—இத்தகைய சித்திரங்கள் அங்கேயிருந்தன; அவர் பார்த்துச் சிரித்தார்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''இவருக்கு நம்மிடம் இல்லாத கண் ஒன்று உண்டு. ஓவியம் வரையும் பயிற்சி போதாது; அதைக் கற்கவேண்டும் என்பது உண்மை. அந்தப் பயிற்சி இவருக்கு அவ்வளவு போதாது என்பதாலேயே, ஒன்றுமே தெரியாது என்று சொல்வதற்கில்லை. மிகவும் பார்த்தவர். அவரிடம் ஆழ்ந்த பார்வை இருக்கிறது. யார் இதை எழுதியவர்?'' என்று கேட்டார்.

அப்போது பையில் சொருகி வைத்த படத்தைக் காட்டினேன்.

''இவர் எந்த ஊர்க்காரர்?''

''சுவர்க்கூர்க்காரர்.''

''சுவர்க்கூர் எது?''

''சுவர்க்கத்து ஊர்—சுவர்க்கூர்.''

''இறந்து விட்டாரா?''

''இப்போது தைரியம் வந்ததல்லவா? நீங்களும் ஓவியர், அவரும் ஓர் ஓவியர் என்றாலும் உங்களுக்குப் போட்டியாக வரமாட்டார் என்று உறுதியாயிற்றல்லவா?'' என்று கேட்டு, பிறகு அவர் பம்பாயில் வாழ்ந்து வந்ததைப்பற்றிக் கூறினேன். என் கருத்தை நிறைவேற்றிக்கொள்ளும் எண்ணத்தோடு அவர் வாழ்க்கையின் துணுக்குகளை விவரித்தேன். பின்பு மெதுவாக, ''உரைநடை எழுதும் நான் இவருடைய வாழ்க்கை வரலாற்றை—வரலாறு என்பதற்கில்லை—அப்படிச் சொல்லக்கூடிய ஒரு கதையை எழுதி வருகிறேன். நீங்கள் அவரைப் பார்த்திருந்தால் நன்றாயிருந்திருக்கும். பார்க்கவில்லை. இறந்தவர்களைக் காட்ட என்றால் இயலாது. அதற்குப் பதிலாக இந்தப் போட்டோவை வைத்துக்கொள்ளுங்கள். கூடவே இதுவும் இருக்கட்டும்'' என்று சொல்லி சரசியின் அழுக்கடைந்த போட்டோவையும் கொடுத்தேன். மேலும் நாட்குறிப்பின் கடைசிப் பக்கத்தில் தபால் 'ஸ்டாம்பு' அளவில் ஒட்டப்பட்டிருந்த வரைகோட்டுப் படத்தையும் தந்தேன். யசவந்தரின் இன்ப வாழ்க்கை, துன்ப வாழ்க்கை, 'சிரசி'யின் வாழ்வு எல்லாவற்றையும் சொன்னேன். ''இன்னும் ஒரு நான்கு நாட்களில் நான் திரும்பி வருவேன். இவற்றை வைத்துக்கொண்டு என்ன செய்ய முடியுமோ செய்யுங்கள். எதுவும் செய்ய முடியாவிட்டால் நான் திரும்பி வரும்போது இவற்றைத் திருப்பிக் கொடுத்து விடுங்கள். உங்களால் முடியாது என்றாகிவிடும்.

எங்களூரில் டிராயிங் மாஸ்டர் ஒருவர் இருக்கிறார். அவருக்குச் சொல்கிறேன். அவர் எப்போதோ செத்தவர்களையும், பெயரே கேட்டிராதவர்களையும்கூட எழுப்பி, வர்ணம் தீட்டி, சடை முடியும் தலைப்பாகையும் சூட்டி, பக்கத்தில் ஒரு பூக்குவளை வைத்து, 'பொம்மனஹள்ளி மகாராஜா' என்று சொல்லும்படி பெயின்ட் செய்கிறார். ஒன்று, நீங்கள் இந்த வேலையைச் செய்ய வேண்டும் அல்லது அவர் எழுதும் சித்திரத்தைப் பார்த்து நீங்கள் தற்கொலை செய்துகொள்ளவேண்டும்'' என்று கேலி செய்தேன்.

எனது அந்த நண்பர், ''இப்போது நான் ஒன்றும் சொல்ல மாட்டேன். உங்கள் அதிருஷ்டம் எனக்குத் தற்கொலை செய்து கொள்ளும் நிலைமையைக் கொண்டுவந்தாலும் கொண்டுவர லாம். வந்தால், ஒரு கப் காப்பியில் குதித்து மூழ்கி உயிரை விட்டு விடுவேன்'' என்றார்.

நான்காம் நாள் நான் அவர் வீட்டுக்குப் போனபோது, ஓவியம் தயாராக இருந்தது. தம்பூராவைக் கையில் தழுவி யிருந்த, ஆபரணங்களின்றியே அழகியாயிருந்த சரசி பாடிக் கொண்டிருப்பதைப் போலவும், அருகில் என் நண்பர் யசவந்தர் அமர்ந்து தம்மை மறந்த நிலையில் இருப்பதாகவும் அந்த நண்பர் எழுதியிருந்தார்.

''ஆகா, இந்தப் படத்தைப் பார்த்தால் எங்கள் இந்துமதி தாவி அணைத்துக்கொள்வாள்!'' என்றேன்.

''இந்துமதி என்பது யார்?'' என்று கேட்டார், அந்த ஓவிய நண்பர். அவளுடைய கதையையும் சொன்னேன்.

எனது முக்கிய வேலை முடிந்த பிறகு, பம்பாய் நகரத்துச் செடி, மூலிகைகளில் வேண்டிய அளவு தளிர்களையும், பூக்களையும் பறித் துக்கொண்ட பிறகு பூனாவுக்குப் போனேன். இந்தத் தடவை போனபோது, விஷ்ணுபந்த் காட்டி அவர்களே கதவைத் திறந் தார். அவர் சாதாரணமான உருவமும் வெளுத்த நிறமும் பல வீனமான உடலும் கொண்டவர். என்னை வரவேற்று, தாம் எழுதுவதற்காக உட்காரும் மான் தோல்மீது உட்காரவைத்து, பேசத்தொடங்கினார். உடல் நலம்பற்றி விசாரித்தார். யசவந்த ரைப்பற்றி அன்பு மழையாகவே பொழிந்தார். அதன் பிறகு தாம் எழுதிய 'தர்ம சாஸ்திரச் சிந்தனைகள்' என்னும் நூலின் கையெழுத்துப் பிரதியை என்முன் கொண்டுவந்து வைத்தார். அதைப் பெருமையுடன் பார்த்தபடியே ''அவர் எனக்குப் பண வுதவி மட்டுமல்ல, வேலை செய்ய ஊக்கமும் தந்து, இந்த

வேலையை என்னைக்கொண்டு செய்வித்தார். இது அச்சேறும், பொதுமக்கள் இதைப் படிப்பார்கள் என்னும் நம்பிக்கை எனக்கில்லை. நான் அப்படி ஒரு பெரிய மனிதனும் இல்லை; கடமைக்காகவே கடமையைச் செய்து முடித்திருக்கிறேன்.''

''இன்னொன்றும் சொல்கிறேன். நீங்கள் தவறாக எடுத்துக்கொள்ளக்கூடாது. இந்த வேலை முடிந்த பிறகு நான் யசவந்த ராயர் கணக்கில் உங்களிடமிருந்து பணம் பெற்றுக்கொள்ள மாட்டேன்.''

எனக்கு அந்தப் பேச்சையும், அவர் நடத்தையையும் கண்டு அச்சமேற்பட்டது.

அன்று முழுவதும் நான் விஷ்ணுபந்தருடன் மிகவும் நெருக்கமாக, மனம் விட்டுப் பேசிக் காலம்கழித்தேன். அவர் மராட்டியைக் கைவிட்டு ஆங்கிலத்தில் என்னுடன் பேச முயன்றார். அது நிறைவேறவில்லை.

அவருடைய மருமகனின் உதவியாலும், ஆங்கிலத்தின் உதவியாலும், ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டோம். அவரிடமிருந்து எனக்கு வந்த கடிதங்களுக்கு மொழிபெயர்ப்பு தேவைப்பட்டது. பிறகு தமது மருமகன் மூலம் ஆங்கிலத்திலேயே எழுதுவித்தார். இப்போதும் அவரது மருமகனே எங்கள் இருவருக்கும் இடையே மொழிபெயர்ப்பாளனாக இருந்தான்.

பலமுறை, யசவந்தருக்கும் தமக்கும் நடந்த பேச்சுக்களின் விவரத்தை அவர் விளக்கினார். காட்டி அவர்கள் தருமநெறியில் பற்றுள்ளவர் என்ற பிறகு. அவர்கள் இருவருக்குமிடையே நடந்த விவாதங்கள் எல்லாமே அதைப்பற்றியே இருந்தன. நம்பிக்கையின் அடிப்படை, பயன், வாழ்க்கைப் பிரச்சினைகள், மதங்களின் செல்வாக்கு—இவையே அவர்கள் விவாதித்தவை. கருத்துக்கள் மட்டும் அவரே சொன்னதுபோல—வட, தென் துருவங்களாயிருந்தன.

''கருத்து எதுவாயிருந்தால் என்ன? நாங்களிருவரும் வெவ்வேறு முறையில் பிறந்து வளர்ந்தவர்கள்; ஆகவே கருத்து வேற்றுமை இருப்பது இயல்பே. ஆனால், அவர் மனிதத் தன்மை மிகுந்திருந்தவராதலாலே எனக்கு இவ்வளவு உதவி செய்தார். உங்கள் வழியையே நீங்கள் பின்பற்ற வேண்டும் என்று எனக்குத் துணையாயிருந்து தூண்டினார். வாழ்வின் உண்மை என்றால் இது அல்லவா?''

நான் அவருடைய கருத்துக்குத் தலையாட்டினேன். ''பந்த் அவர்களே! பிறப்பிறப்பு, ஆன்மா, பரமான்மா பற்றிய விஷயங்களில் உங்கள் கருத்தும் அவர் கருத்தும் எவ்வாறிருந்தன?''

''வட துருவம், தென் துருவங்கள்தான்! விஷ்ணுபந்த் விஷ்ணு பந்தனே; யசவந்தர் யசவந்தரே!''

''அவர் கருத்து என்ன என்பது உங்களுக்குத் தெளிவாகப் புரிந்ததா?''

''அவருடையது ஒருவகையான அத்வைதம், அதை நவீன அத்வைதம் என்றழைக்கட்டுமா? துவைதிகள் சங்கராச்சாரி யாரை நாஸ்திகர் என்று அழைத்ததைப்போல, நானும் ஏதாவது ஒரு பெயரைத் தரலாம். ஆனால், அது அப்படி இல்லை. அவர் தனி மனித வாழ்க்கையை நம்பினார். தனிப்பட்ட ஆன்மாவை நம்பவில்லை. அதனால் அவருக்குப் பரமாத்மாவைப் பற்றிய பிரச்சினையே முக்கியமானதல்ல. பக்தி—மோட்சம்—இவற்றிலும் அவருக்கு அக்கறையில்லை. கடவுளே இல்லை என்று சொல்கிறீர்களா என்று நான் கேட்டால், 'அது உங்களுக்கே தெரியும்; நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?' என்று கேட்பார்.

'வேதத்தில் சொல்லியிருக்கிறது; எல்லா மதங்களும் சொல்கின்றன' என்று நான் சொன்னால்—

'நீங்கள் கேள்விப்பட்ட எல்லா மதங்களும்' என்பார்.

'கடவுளின் பெயரையே எடுக்காத மதங்களும் இருக்கின்றன. தமக்குத் தெரியாத விஷயங்களைப்பற்றி அந்த மதங்கள் பேசப் புகவில்லை.'

'சநாதன தருமமே சிறந்தது' என்று நான் சொன்னால்—

'நம்பியவர்களுக்கு அதுவே மிக மிகச் சிறந்தது' என்று கூறிச் சிரிப்பார்.

''அப்படியானால் அவர் நாஸ்திகரா என்று நீங்கள் என்னைக் கேட்கலாம். உயிருள்ளவற்றையெல்லாம் அன்போடு கண்டார். அவருடைய மனப்பரப்பில் எல்லா வாழ்க்கையும் ஒரே மாதிரி தான். அப்படிப்பட்ட வாழ்க்கையில், உயிர்களில் அன்றும், இன்றும், என்றும் வேறுபாடு காணாத ஒருவகையான அத்வைதச் சிந்தனை அவருடையது. அத்வைதம் என்றது இதற்காகத்தான். அது அவருடையதேயான ஒருவகை அத்வைதம்; அது வழிவழியாக வரும் சிந்தனைத் தொடர் அல்லவே அல்ல.''

எனது புதிய நண்பரான விஷ்ணுபந்தருக்கு யசவந்தரின் சிந்தனைப்போக்கில் நம்பிக்கையில்லாவிட்டாலும், அவருடைய மனிதத் தன்மையில் ஆழ்ந்த நம்பிக்கையிருந்தது தெரிந்தது.

அப்படியானால், நான் பூனாவுக்கு வந்த வேலை முடியவில்லையா? முடிந்துகொண்டே வந்தது. விடைபெறுவதற்கு முன்பு, ''உங்கள் நூலை அச்சிடுவதற்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''ஒன்றும் இல்லை'' என்றார்.

''எவ்வளவு பணம் தேவைப்படும்?''

''ஆரியபூஷண அச்சகத்தார் மூவாயிரமாவது வேண்டும் என்கிறார்கள்.''

''யாராவது வெளியீட்டாளரைப் பார்த்தீர்களா?''

''பார்க்கவில்லை என்பதற்கில்லை. பார்த்ததால் பயனில்லை. இது எங்கே செலவாகப்போகிறது? இது என்ன நாவலா? இந்தக் காலத்தில் தர்மசாஸ்திரம் யாருக்கு வேண்டும்? என்கிறார்கள்.''

நான் அதைக் கேட்டுச் சிரித்தேன். ''பாருங்கள், நான் கதை, நாவல்கள் எழுதுகிறேன். கதை எழுதினால் மக்கள் படிக்கிறார்கள். இதை எழுதினால் எப்படிப் படிப்பார்கள், சொல்லுங்கள்? நம் மக்களுக்குப் புதுமை என்றால் இப்படிப்பட்டதுதான் தேவை. வானத்திலிருந்து இறங்கித் தரையில் வந்தமர்ந்த புதுமை. அதுவும் எப்போது! இன்றே! அவ்வளவு புதுமைப்பித்தர்கள்—நாங்கள்! இங்கே என்ன வளர்ந்திருந்தாலும், எவ்வளவு புதுமையானதானாலும், விதை வேரூன்றிச் செடியாய்க் கிளைவிட்டுப் பூத்ததைப்போல்தான் என்பதைப் பொதுமக்கள் புரிந்துகொள்வதில்லை. என்றாலும் நீங்கள் செய்யும் முயற்சிகளைச் செய்யவேண்டியதுதான்'' என்று அவருக்கு அமைதிகூறி, விடை பெற்றேன்.

நிறைந்த மனத்துடன் நான் ஊர் திரும்பியிருப்பேன் என்று நீங்கள் எளிதில் ஊகித்துவிடலாம். என் பிரச்சினைகளெல்லாம் மெல்லத் தீர்ந்துகொண்டுவந்தன. யசவந்தர் விட்டுச் சென்ற பொறுப்பை ஏற்று நடத்துவதும் அவ்வளவு கடினமாயிற்று. பார்வதியம்மாள் மறைந்துவிட்டாள். விநாயகர் கோவிலும் இரண்டாயிரம் ரூபாய்க்குத்தான் செலவுவைத்தது. சீனனின் நினைவை நான் மறந்துவிடமுடியும். மஞ்சய்யனையும் அவர் குழந்தைகளையும் நான் மறப்பதற்கில்லை. இன்னும் என்ன மிச்சமிருக்கிறது? கொடுத்து முடித்தது எவ்வளவு; மிஞ்சியது எவ்வளவு என்று கணக்கெடுத்தேன். யசவந்தருக்காக மற்றொரு

பிள்ளையார் கோவிலையே கட்டலாம் என்று தோன்றியது. அந்தக் கோவில் என்னவென்றால், விஷ்ணுபந்த் அவர்களின் நூலை வெளியிடுவதற்கென யசவந்தர் பெயரில் மூவாயிரம் ரூபாய் உதவுவது தான். அதன் பிறகு எஞ்சிய பணத்தை எனது நண்பரின் மருமகனுடைய குடும்பத்துக்கு, அதாவது மஞ்சய்யனின் உதவிக்கு ஏதோ ஒருவகையில் சேமிப்பாக வைத்துவிடுவது என்னும் முடிவுக்கு வந்து, அதற்குவேண்டிய ஏற்பாடுகளை செய்யத் தொடங்கினேன். மஞ்சய்யனுக்கு எழுதினேன்; பந்த் அவர்களுக்கும் கடிதம் போட்டேன்; இந்துமதிக்கும்கூட, 'உன் தந்தையின் நினைவாக உனக்கு என்னவேண்டும்' என்று கேட்டு எழுதினேன். அவளிடமிருந்து கடிதம் வந்ததும் அதற்கு வேண்டியதைச் செய்தேன். நான் என்னிடமே வைத்துக்கொண்டது—அவருடைய நாட்குறிப்பு அல்லது நினைவுக்குறிப்பு மட்டுமே.

மொத்தமாகக் கணக்குப்போட்டுப் பார்க்கிறேன்; என் கணக்கல்ல; எனக்குத் தெரிந்த அளவில் வாழ்ந்து கழிந்த யசவந்தரின் கணக்கை; அவர் கொள்கைப்படி—தாம் உலகத்தினிடமிருந்து, சமுதாயத்தினிடமிருந்து பெற்றதைவிடக் குறைவாகத் திருப்பித் தந்தாரா? மிகுதியாகத் தந்தாரா? என்னும் கணக்கையே போட்டேன். கடனைக் கழிக்கிற கணக்கில் யார் யாருக்குக் கடன் பட்டிருக்கிறார்கள்?

யசவந்தர் எல்லா வகைகளிலும், தாம் கொண்டதைவிடக் கொடுத்தது குறைவாயிருந்ததா?

இல்லவேயில்லை என்றே தோன்றுகிறது எனக்கு.

முற்றும்

Printed at Raj Bandhu Industrial Co., C 61, Mayapuri Phase II, New Delhi 110064